

"கூட்டுறவை
கேலிக்
கூத்தாக்கும்
தி.மு.க!"

விவரிக்கிறார்
எதிர்க்கட்சித்
தலைவர்

# கல்கி

KALKI 1.11.98 ரூ 4.50

லாட்டரி சீட்டு வாங்காத லட்சாதிபதி!

RPG

HMV

# இசைப் பிரியர்களுக்கு
# ஓர் அரிய இசை விருந்து....




டிஜிட்டல் முறையில்
மீண்டும் பதிவுசெய்யப்படு,
உயர்தர கோபால்ட்
நாடாவில், **HMV**
பெருமையுடன் வழங்கும்
அரிய கலைப்பொக்கிஷம்

## Old Gems

**N.C. வசந்த கோகிலம்.**

**அருமையான 60 நிமிடங்கள் !!**

பழம் பெரும் இசையமைப்பாளர் C.R. சுப்பராமன் அவர்களின் இசையோடு, அன்மைக் காலத்தில் அரிய இசைகள் பல அமைத்து அழியாப் புகழ் பெற்ற திரு. பெரியசாமி தூரன், சுதந்திரக் கனல் பரப்பிய சுப்பிரமணிய பாரதியார் பற்றி இயற்றிய பாடலும், தமிழின் தனித்தன்மையை உலகுக்கு உணர்த்திய மேதை சுத்தானந்த பாரதியாரின் தன்னிகரற்ற பாடல்களும் அடங்கியது.

**SIDE-A :** 1. **Nithirayil Vandhu** (Lyric: Suddhananda Bharathiyar) 2. **Aasaikonden** (Lyric: Suddhananda Bharathiyar) 3. **Varuvaano** 4. **Andha Naal** (Lyric: Suddhananda Bharathiyar) 5. **Yaro Vandhennai** (Lyric: Suddhananda Bharathiyar) 6. **Pangana Cholai** (Film : Gangaavathar) 7. **Thithithikkum Senthamizh** (Lyric: Suddhananda Bharathiyar) 8. **Kadhdhanuvariki** (Lyric : Thyagaraja) 9. **Bharatha Paattennum** (Lyric: M.P. Periyaswamy-Music : C.R. Subburaman)

**SIDE-B :** 1. **Kuzhalosai** (Lyric: Suddhananda Bharathiyar) 2. **Pillai Pirayathile** (Lyric: Suddhananda Bharathiyar) 3. **Udaya Sundari** (Lyric: Suddhananda Bharathiyar-Music: M.R. Sarma) 4. **Aarvathoeyai** (Lyric: Suddhananda Bharathiyar) 5. **Aandavane** (Lyric: Papanasan Sivan) 6. **Kalaivani Arul Purival** (Film : Gangaavathar) 7. **Senthamizh Osai** (Lyric : M.P. Periyaswamy-Music : C.R. Subburaman) 8. **Thillaisthalam**

Also available one more album of **N.C. VASANTHAKOKILAM** - Coupling No. STHV 847845

# "கூட்டுறவை கேலிக் கூத்தாக்கும் தி.மு.க!"



**"நடைபெற்ற கூட்டுறவுத் தேர்தல்களையெல்லாம் ரத்து செய்து விட்டு புதிதாகத் தேர்தல் நடத்த உத்தரவிட்டால் முதல்வர் மீதுள்ள மதிப்பு கூடுமே தவிர குறையாது" என்று நடந்த முறைகேடுகளை விவரிக்கிறார், எதிர்க்கட்சித் தலைவர் சோ. பாலகிருஷ்ணன்.**

● ராமநாதபுரம் மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கியில் மொத்தம் 23 இயக்குனர்கள் பொறுப்பு வகிக்கலாம். சமீபத்தில் நடைபெற்ற இயக்குனர்களுக்கான தேர்தலில் தி.மு.க.வைச் சேர்ந்த 17 பேர், த.மா.கா.வைச் சேர்ந்த 3 பேர், ஜனதா தளத்தைச் சேர்ந்த ஒருவர் இயக்குனர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். மீதி இரண்டு இடங்கள் காலியாக உள்ளன. இந்த நிலையில் வங்கித் தலைவருக்கான தேர்தலில் தி.மு.க.வைச் சேர்ந்தவர் மிகச் சுலபமாக வெற்றி பெறலாம். ஆனால் தேர்தல் நடைபெறாமல் தள்ளி வைக்கப்பட்டுள்ளது. காரணம், உட்கட்சி சண்டை. தி.மு.க. மேலிடத்தின் வழிகாட்டுதல் படி, காதர் பாட்சா என்ற வெள்ளைச்சாமி தலைவராக தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். ஆனால் அவருக்கு கமுதி ஒன்றியச் செயலாளர் கிருஷ்ணன் கடும் எதிர்ப்புத் தெரிவித்ததால் தலைவர் பதவிக்கான தேர்தலே நடத்தப்படவில்லை. சென்னையிலிருந்து வந்த கட்டளையின் பேரில் தள்ளி வைக்கப்பட்டது.

● கோவை மாவட்ட பால் உற்பத்தியாளர் சங்கத்திற்கு நடந்த இயக்குனர்கள் தேர்தலில் ஒன்பது இடங்களில் ஆறு இடங்களை த.மா.கா. ஆதரவாளர்கள் கைப்பற்றினார்கள். இந்த நிலையில் தலைவர் பதவிக்கான தேர்தல் நடந்தால் த.மா.கா. ஆதரவாளர் ஒருவர் தான் வெற்றி பெறுவார் என்று தெளிவாகத் தெரிந்தது. ஒரு வோட்டில் வெற்றி பெற்ற த.மா.கா. ஆதரவாளர் ஒருவரது தேர்தல் செல்லாது என்று அறிவிக்க வேண்டும் என்று கோரி தி.மு.க.வினர் தகராறு செய்யவே, தலைவர் பதவிக்கான தேர்தலே தள்ளி வைக்கப்பட்

கல்கி இண்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in

டுள்ளது! உள்ளூர் தி.மு.க.வினரின் அடாவடிப் போக்கை மேலிடத்தாலேயே கட்டுப்படுத்த முடியவில்லை.

● தர்மபுரி மாவட்ட பால் உற்பத்தியாளர் சங்க இயக்குனர் தேர்தலில் த.மா.காவைச் சேர்ந்த கல்யாணி என்பவர் மனு தாக்கல் செய்திருந்தார். ஆனால் அவரை எதிர்த்துப் போட்டியிட்ட தி.மு.க.வைச் சேர்ந்த ராமகிருஷ்ணரெட்டி என்பவர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. அதிர்ச்சியடைந்த கல்யாணி என்னவென்று விசாரித்தார். "நீங்கள் தான் போட்டியிலிருந்து விலகி விட்டீர்களே!''

**“பல மோசடிகள் நடந்துள்ளன. பல மாவட்டங்களில், இயக்குனர் பதவிக்குத் தாங்கள் (தி.மு.க.) எந்தவித பிரச்னையும் இல்லாமல் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்பதற்காக போலி மெம்பர்களைக் கணக்கில் காட்டி ஏராளமான அடிப்படை கூட்டுறவுச் சங்கங்கள்- பால் கூட்டுறவில்- உருவாக்கப்பட்டன.”**

என்றார் அதிகாரி. மேலும் அதிர்ச்சியான கல்யாணி, அந்தக் கடிதத்தை வாங்கிப் பார்த்தார். அவரது கையெழுத்தைப் போலியாகப் போட்டு வாபஸ் கடிதம் கொடுத்துள்ளது தெரிய வந்தது. இப்போது விவகாரம் கோர்ட்டில் இருக்கிறது. தி.மு.க. நபர் தேர்ந்தெடுக்கப்பட்டது நீதிமன்றத்தால் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது!

● சென்னை மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கிக்கான இயக்குனர்கள் தேர்தலில், தி.மு.க. ஆதரவாளர்கள் பதினான்கு பேரைத் தவிர வேறு யாரும் மனு தாக்கல் செய்ய அனுமதிக்கப்படவில்லை. வங்கியின் தலைமையிடத்தைச் சுற்றி தி.மு.க.வினரும் போலீஸும் நின்று கொண்டு வேறு யார் மனு தாக்கல் செய்ய வந்தாலும் சொல்லக் கூசும் வார்த்தைகளால் அர்ச்சனை செய்து விரட்டி அடித்தனர். வட சென்னை மாவட்டச் செயலாளர் பலராமன் வங்கியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பது மேலிடத்தின் உத்தரவு. கூட்டுறவுத் துறையைச் சேர்ந்த தேர்தல் அதிகாரிகளும் போலீஸும் தி.மு.க.வினரின் விருப்பத்துக்கேற்றபடி செயல்பட்டனர்.

● காஞ்சிபுரம் மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கித் தலைவருக்கான தேர்தலில் தி.மு.க.வினருக்குள் குடுமிப்பிடி சண்டை. கும்மிடிப்பூண்டி சட்டமன்ற உறுப்பினர் வேணுவுக்கும், ஆலந்தூர் சட்டமன்ற உறுப்பினர் சண்முகத்துக்கும் மோதல். கலாட்டா செய்ததாக வேணு போலீஸாரால் கைது செய்யப்பட்டார். தேர்தல் தள்ளி வைக்கப்பட்டது.

- இப்படி தமிழ்நாடு முழுவதும் சமீபத்தில் நடத்தப்பட்ட கூட்டுறவு வங்கி, மற்றும் பால் உற்பத்தியாளர் சங்கத் தேர்தல்களில் நடந்த முறைகேடுகள், ஆளும் கட்சியின் அடாவடித் தனங்கள் பற்றி பட்டியல் போட்டால் அது நீண்டு கொண்டே போகும். மொத்தம் உள்ள 23 மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கிகளில் 17ல் "தேர்தல்" நடந்துள்ளது. இதில் நான்கு மாவட்ட வங்கி தேர்தல் முடிவுகளை நீதிமன்றம் நிறுத்தி வைத்துள்ளது. நீதி மன்றத்தில் மேலும் மனுக்கள் குவிகின்றன.

தோழமைக் கட்சியான எங்கள் த.மா.கா. கூட பொறுக்க முடியாமல் "உடனடியாக முதல்வர் தலையிட்டு நடந்த முறைகேடுகளையும் அநீதிகளையும், சரி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டுள்ளது. மத்திய அமைச்சர் தம்பித்துரை ஒரு படி மேலே போய் "நடத்தப்பட்ட தேர்தல்களை உடனடியாக ரத்து செய்ய வேண்டும். இல்லையேல் கூட்டுறவு நிறுவனங்களுக்கு மத்திய அரசின் மானியம் நிறுத்தி வைக்கப்படும்'' என்று சொல்லியிருக்கிறார். தங்கள் ஆட்கள் கூட்டுறவு அமைப்புகளின் எல்லா பொறுப்புகளையும் கைப்பற்ற வேண்டும் என்பதற்காக தி.மு.க.வினர் அதிகாரிகளை பாக்கெட்டிற்குள் போட்டுக் கொண்டும், விதிமுறைகளை மீறியும், வன்முறைகளைக் கட்டவிழ்த்து விட்டும் முழுக்க, முழுக்க அராஜகம் நடத்தியுள்ளனர். கால் நூற்றாண்டுக்குப் பிறகு தேர்தல் நடக்கிறதே என்று சந்தோஷப்படக் கூட முடியாமல் கூட்டுறவுத் தத்துவத்தையே கேலிக்குரியதாக ஆக்கும் போக்கில் தி.மு.க.வினர் செயல்பட்டிருக்கிறார்கள். இவர்களின் இந்தப் போக்கு கூட்டுறவு

அடிப்படைக்கே வேட்டு வைக்கும்!

**கூ**ட்டுறவு என்பது என்ன? பத்து இருபது பேர் ஒன்று சேர்ந்து அமைப்பை ஏற்படுத்தி தங்கள் செயல்கள் மூலம், ஒருவருக்கொருவர் உதவியாக இருப்பதும், அதன் மூலம் தேச உயர்வுக்குப் பாடுபடுவதும் தானே! தமிழ்நாட்டில் பல்வேறு துறைகளின் தேய்மானம், 1970களில் துவங்கியது போலவே கூட்டுறவுத் துறையிலும் துவங்கியது. பல கூட்டுறவு அமைப்புகளின் பொறுப்புகளுக்கு முதன் முதலாக நியமன முறையில் கட்சி ஆட்கள் நியமிக்கப்பட்டார்கள். குறிப்பாக கூட்டுறவுப் பண்டசாலைகளுக்குத் தேவையானவற்றைத் தரமானதாகவும் குறைந்த விலையிலும் உற்பத்தியாளர்களிடமே வாங்க வேண்டும் என்பதை மாற்றி, வியாபாரிகளிடமே வாங்கிக் கொள்ள அனுமதி கொடுக்கப்பட்டது. இதன் மூலம் இடைத் தரகர் கமிஷன் என்று பணம் சுருட்டப்பட்டது.

**கூ**ட்டுறவு அமைப்புகளுக்கான நிர்வாக வழிகாட்டுதல்கள், தேர்தல் விதிமுறைகள், போட்டியிடும் நபர்களுக்கான தகுதிகள் ஆகியவற்றை உள்ளடக்கிய மாதிரி மசோதா ஒன்று, மத்திய திட்டத் துறையால் தயாரிக்கப்பட்டு மாநிலங்களுக்கு அனுப்பப்பட்டது. அந்த மாதிரி மசோதாவில் உள்ள நெறிமுறைகளை எடுத்துக் கொண்டு சம்பந்தப்பட்ட மாநில அரசுகள், மாநில அளவில் தனிச் சட்டம் போட்டுக் கொள்ளலாம் என்று மத்திய அரசு ஆலோசனையும் சொல்லியிருந்தது. ஆனால் அந்த அடிப்படையில் 'Mutually aided Co-op.societies Act' என்று ஆந்திர அரசு மட்டும்தான் சட்டம் இயற்றியது. மறைந்த கூட்டுறவு அமைச்சர் தங்க பாண்டியன், "மாதிரி மசோதா அடிப்படையில் தமிழகமும் தனிச் சட்டம் போடும்; அதன் பின் தான் தேர்தல்" என்று கூடச் சொன்னார். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை. அந்தச் சட்டம் போடப்பட்டிருந்தால் தேர்தல் முறைகேடுகள் குறைய வாய்ப்பிருந்திருக்கும்.

1996ல் தி.மு.க. அரசு ப்ரைமரி கூட்டுறவுச் சங்கங்களில் தேர்தலை நடத்தியது. அதில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் பதவிக்காலம் 1999வரை தான் இருக்கிறது. இந்த இடத்தில் மாவட்ட கூட்டுறவு அமைப்புகளின் இயக்குனர்கள் தேர்ந்தெடுக்கப்படும் விதத்தைச் சொல்ல



**"என்னங்க... அந்த உண்ணாவிரதப் பந்தலிலே ஒருத்தரையும் காணோம்?"**

**"லஞ்ச் பிரேக்"- காம்!"**

**- பெரியகுளம் ஆர். வேணுகோபால்**

வேண்டும்!

ஒரு மாவட்டத்தில் 200 அடிப்படை (ப்ரைமரி) கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன என்று வைத்துக் கொள்வோம். இயக்குனர்களுக்கான காலி இடங்களைப் பொறுத்து இந்த 200 சங்கங்கள் பிரிக்கப்படும். இதிலும், மகளிர், மைனாரிட்டி, பிற்படுத்தப்பட்டோர் என்றெல்லாம் உண்டு.

உதாரணமாக மாவட்ட கூட்டுறவு அமைப்பில் பத்து இயக்குனர்கள் என்று வைத்துக் கொள்வோம். இருநூறை, பத்தால் வகுத்தால் வருவது இருபது. எனவே இந்த இருபது அடிப்படை கூட்டுறவுச் சங்கங்களின் தலைவர்களால் ஒரு இயக்குனர் தேர்ந்தெடுக்கப்படுவார். 200 சங்கத் தலைவர்களின் மூலம் 10 இயக்குனர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இந்த அடிப்படையில் மாவட்டத்தின் அனைத்துப் பகுதிகளுக்கும் இயக்குனர் சபையில் பிரதிநிதித்துவம் இருக்குமாறு பார்த்துக் கொள்ளப்படும். எனவே வாக்காளர்கள் அடிப்படை (ப்ரைமரி) கூட்டுறவுச் சங்கங்களின் தலைவர்கள்தான்.

இப்போது நடந்த தேர்தலில் இந்த விவகாரத்தில் பல மோசடிகள் நடந்துள்ளன. பல மாவட்டங்களில், இயக்குனர் பதவிக்குத் தாங்கள் எந்தவித பிரச்னையும் இல்லாமல் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்பதற்காக போலி மெம்பர்களைக் கணக்கில் காட்டி ஏராளமான அடிப்படை கூட்டுறவுச் சங்கங்கள்- பால் கூட்டுறவில்- உருவாக்கப்பட்டன. குறிப்பாக கோவை மாவட்டத்தில் 133 சங்கங்கள் இப்படி உருவாக்கப்பட்டன. ஒரு சங்கத்தை உருவாக்குவது என்றால் ஏகப்பட்ட நடைமுறைகள் உண்டு. ஒன்றிரண்டு நாளில் ஏதும் முடியாது.

ஆனால் தி.மு.க.வினர் மாவட்ட கூட்டுறவு அமைப்புகளைக் கைப்பற்ற வேண்டுமென்பதற்காக ஏராளமான போலி ப்ரைமரி சங்கங்களை உருவாக்கியிருக்கிறார்கள். கூட்டுறவுத் துறையும் இதற்கு உடந்தையாக இருக்கிறது.

அடுத்தபடியாக, வேட்பு மனுதாக்கல் செய்வதிலும் படு அராஜகம். மாற்றுக் கட்சிக்காரர்களை, வேட்பு மனு தாக்கல் செய்யும் அலுவலகத்தில் கூட நுழைய அனுமதிக்கவில்லை. தங்கள் ஆட்களை மட்டுமே தாக்கல் செய்ய வைத்து போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவித்துக் கொண்டார்கள். உதாரணமாக சேலம் மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கி இயக்குனர்கள் தேர்தலில் மொத்தம் உள்ள 23



**"இப்பத்தான் என்னைப் பார்க்கறீங்க. ஆனாலும் நான்தான் படத் தயாரிப்பாளர்னு எப்படி கண்டுபிடிச்சீங்க?"**

– குல்லு

இயக்குனர் பதவிகளுக்கும் தி.மு.க.வினரே தேர்ந்தெடுக்கப்பட்டதாக, அறிவிக்கப்பட்டதைச் சொல்லலாம்!

இதைப் போல் பல மாவட்டங்களில் நடந்துள்ளது. பட்டு நெசவுத் தொழில் தெரியாதவர்கள் கூட காஞ்சிபுரத்தில் நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களில் உறுப்பினர்களாகச் 'சேர்க்கப்பட்டு' தலைவர்களாகவும் 'தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்'. இது தவிர பெரும்பாலான தி.மு.க. எம்.எல்.ஏ.க்கள், மாவட்ட கூட்டுறவு அமைப்புத் தேர்தல்களில் போட்டியிட்டு 'வென்றிருக்கிறார்கள்.' சிவகங்கை சிவராமன், திருச்சி பொய்யாமொழி, இப்படிப் பலர்.

சேலத்தில் அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகத்தின் மகன் செழியன் ஏற்கெனவே மாவட்ட பஞ்சாயத்துத் தலைவர். இப்போது கூட்டுறவு வங்கிக்கும் தலைவராகி விட்டார். அந்த மாவட்டத்தில் தேர்தலின் போது நடந்த வன்முறைகள் எக்கச்சக்கம். ஏற்கெனவே ஒரு பதவியில் அவர்கள் இருக்கும் போது மற்றொரு–அதுவும் கூட்டுறவுத் துறையில்– இன்னொரு பதவிக்கு ஆசைப்படுவது ஏன்?

**96**ல் தேர்ந்தெடுக்கப்பட்ட அடிப்படை சங்கத் தலைவர்களால், இப்போது தேர்ந்தெடுக்கப்படும் இயக்குனர்கள், தலைவர்களின் பதவிக் காலம் 2001 வரை இருக்கும். ஆனால் யாருடைய நலனுக்காக இந்த இயக்குனர்கள் இப்போது தேர்ந்தெடுக்கப்படுகிறார்களோ அவர்களின் பதவிக் காலம் 99ல் முடிந்து விடும். சட்டப்படி இந்த நிலை சரியில்லை. தேர்ந்தெடுக்கப்படுபவர்கள், தேர்ந்தெடுப்பவர்கள் ஆகிய இருவரின் பதவிக் காலமும் ஒரே வருடத்தில் துவங்கி, ஒரே வருடத்தில் முடிய வேண்டும். இதற்கு ஒரே வழி என்னவென்றால் அடிப்படை சங்கத் தேர்தலிலிருந்து மாநிலத் தலைமை வரை ஆறு மாத காலத்தில் நடத்திமுடிக்கப்பட வேண்டும். எனவே, இந்த அடிப்படையில் பார்த்தாலும் இப்போது நடைபெற்ற மாவட்ட அளவிலான தேர்தல் முறையாக நடத்தப்படவில்லை.

**நே**ரு அவர்கள் கூட்டுறவுத் தத்துவத்தை கிராம அளவில் ஊன்றி விதைக்கப் பாடுபட்டவர். இது போன்ற முறைகேடுகள் எதிர்காலத்தில் நடக்கும் என்பதை அவர் கனவிலும் நினைத்துப் பார்த்திருக்க மாட்டார். எனவே முதல்வர் அவர்கள் கொஞ்சமும் கௌரவம் பார்க்காமல், நடைபெற்ற தேர்தல்களை முழுவதுமாக ரத்து செய்ய வேண்டும். பஞ்சாயத்துத் தேர்தல்களுக்கு தனி ஆணையாளர் இருப்பது போல், கூட்டுறவுத் தேர்தல்களுக்கும் தனி ஆணையாளரை நியமித்து, மாதிரி மசோதாவில் உள்ள நெறிமுறைகளைக் கையாண்டு, எல்லா மட்டங்களிலும் ஒரு புதுத் தேர்தலை நடத்த வேண்டும். இப்போது மாவட்ட அமைப்புகளில் 'தேர்வு பெற்றோரை' வைத்துக் கொண்டு மாநில (Apex)அளவில் தேர்தல் நடத்தவே கூடாது. மீண்டும் தேர்தல் நடத்த உத்தரவிட்டால் முதல்வர் மீதுள்ள மதிப்பு கூடுமே தவிர குறையாது. முதல்வர் செய்வாரா!

சந்திப்பு: **ப்ரியன்**
படம்: **ஸ்ரீஹரி**



* படப்பிடிப்பின்போது...

# ஆட்டி வைக்கப் போகிறார் அம்மா!

## (அந்த அம்மா அல்ல!)

நடிகைகள் திரைப்பட இயக்குனராவது புதிதில்லை. ஆனால் நடிகை அல்லாத ஒரு பெண்மணி ஒரு தமிழ்ப் படத்தை இயக்குவது? அதுவும் ஒரு வடஇந்தியப் பெண்மணி இயக்க வந்திருக்கிறார் என்பது மேலும் கொஞ்சம் ஆச்சர்யமான விஷயம் இல்லையா?

"நான் இயக்குனராவேன் என்று கனவில்கூட நினைத்ததில்லை. என்றாலும் சினிமாவின் சகோதரக் கலைகளில் எனக்குப் பல வருடங்களாகத் தொடர்பு உண்டு. டெல்லியில் படித்துக் கொண்டிருந்தபோது இந்துஸ்தானி இசையை முக்கியப் பாடமாக எடுத்துக் கொண்டேன். ஆனால் நாடகத்துறை என்னைக் கொஞ்சம் கொஞ்சமாக தன் பக்கம் இழுத்துக் கொண்டது" என்றார் சுஷ்மா.

இவர் கதாநாயகியாக நடித்த நாடகங்கள் டெல்லியில் சக்கைப் போடு போட்டன (என்கிறார்). நாடகம் இன்னொரு விதத்திலும் இவருக்குத் திருப்புமுனையாக அமைந்துள்ளது. அமெச்சூர்களே நடித்த அந்த நாடகக் குழுவில் இடம் பெற்ற ஐ.ஐ.டி மாணவர் கதிர். 'மிஸ்டர் அபிமன்யு' நாடகம்

இருவரையும் ஒன்று சேர்த்தது. நான்கு வருடங்களுக்குப் பிறகு இரண்டு 'சு'க்களும் திருமணம் செய்து கொண்டனர்.

"1977ல் என் கணவரின் வேலை காரணமாக குடும்பமே சென்னைக்கு வந்தது. தெரியாத ஊரில் செட்டிலாகப் போகிறோமே என்று கொஞ்சம் பயம் வேறு. போதாக்குறைக்கு சௌரப், ரிச்சா இரு குழந்தைகளுக்குப் பிறகு மீண்டும் கருவுற்றிருந்த சமயம் அது. என்றாலும் சென்னையில் இருக்கும் நண்பர்கள் சிலர் உற்சாகம் அளித்தார்கள்."

அந்த உற்சாகம் சென்னையிலேயே நாடகம் நடத்தும் அளவுக்கு – அதுவும் ஹிந்தி – ஆங்கிலம் – தமிழ் ஆகிய மூன்று மொழிகளிலும் ஒரே கதையை நாடகமாக்கி மூன்றிலும் ஹீரோயின் ரோல் ஏற்கும் அளவுக்குச் சென்றிருக்கிறது.

**அ**தெல்லாம் ஃப்ளாஷ்பேக். இப்போது எப்படி பட இயக்கம்? ஏன் தமிழில்?

"ஐந்து வருடங்களுக்கு முன் என் மகள் ரிச்சாவுக்கு ஏற்பட்ட ஒரு அனுபவம் என் மனத்தில் மிகவும் பதிந்து விட்டது. அதை சில மாற்றங்களுடன் நானே திரைப்படமாக இயக்க வேண்டும் என்று ஆசை எழுந்தது. தவிர 'கதையும், திரைக் கதையும் நன்றாக இருந்தால் போதும். முன்பின் அறியாத இயக்குனராக இருந்தாலும் முழு ஆதரவு கொடுக்கத் தயார்' என்ற சூழ்நிலை தமிழ் ரசிகர்களிடம்தான் இப்போது காணப்படுகிறது. அதனால்தான் 'உயிரோடு உயிராக' படத்தை இயக்க ஆரம்பித்தேன்."

'மகள் ரிச்சாவை கதாநாயகியாக்கத்தான் நீங்கள் இயக்குனரானீர்களா?' என்ற கேள்விக்கு, துப்பட்டா போட்டுத் தாண்டாத குறையாக இல்லை என்று மறுக்கிறார்! ஃபைனான்ஷியர்களை ஆலோசித்தபோது "ஹீரோ யார் என்பதுதான் படம் விற்பதற்கு அவசியம். மற்றபடி கதாநாயகி யாராக வேண்டுமானாலும் இருக்கலாம்" என்றார்கள். தெரிந்த முகம், பாத்திரத்துக்கும் பொருந்துவார் என்பதால் அஜீத்தை புக் செய்தோம். கதாநாயகி ரோலுக்கு யாரும் சரியாகப் பொருந்தி வரக் காணோம். அப்போது விநியோகஸ்தர்களே சொன்னார்கள். "உங்கள் பெண் ப்ளஸ் சானலில் நடித்திருக்கிறாள். சின்னத் திரைத் தொடர்களின் மூலம் மக்களிடமும் அறிமுகமாகி விட்டாள். அவரையே கதாநாயகி ஆக்கி விடுங்கள்" என்று. என் மகளுக்கு ஏற்கெனவே 'கதாநாயகிக் கனவு' இருந்ததால் அவளும் உடனே ஆனந்தக் கண்ணீருடன் ஒப்புக் கொண்டாள்!"

காதலை அடிப்படையாகக் கொண்ட ஒரு கதையில், உங்கள் மகளையே இயக்குவது சங்கடம் ஏற்படுத்தவில்லையா?

"என் படத்தின் கதாநாயகி மரத்தைச் சுற்றி டூயட் பாட மட்டுமே தேவைப்படுபவள் அல்ல. பெண்களை ஆபாசமாகத் திரையில் சித்திரிப்பதற்கு நான் கடும் எதிரி. அப்படியிருக்க நீங்கள் கூறுவது போன்ற சங்கடம் ஏற்பட வாய்ப்பில்லை. தவிர நானும் சரி, ரிச்சாவும் சரி காமிராவுக்குப் புதியவர்கள் இல்லையே!"

— ஜி.எஸ்.எஸ்



**"கனவுக் காட்சிக்கு இப்படி ஒரு ஏற்பாடா! தயாரிப்பாளர் ஆனாலும் அல்பம்."**

**— குல்லு**



"ஏனு பவுனால என்னோட குடும்ப வாழ்க்கை பாழாயிடுச் சுங்க!" என்றார் உசிலம்பட்டியைச் சேர்ந்த தனம்.

"ஏன், என்னாச்சு?"

"கல்யாணத்துக்குப் போட்ட மூணு பவுனையும் எங்க அப்பா - அம்மா திருப்பி வாங்கிக்கிட்டாங்க. அது இல்லாம உன்னோட வாழ முடியாதுன்னு எம்புருஷன் சொல்லிட்டாரு. நகையை எங்க அப்பா அம்மாவால திருப்பித் தர முடியலை. அப்புறம் எங்க புருஷன் வீட்டுக்குப் போறது? எங்க வீட்டுலயே இருந்திட்டேன். அப்புறம் திருவள்ளூர்ல இருக்கற என் அண்ணன் வீட்டுல வந்து இருந்தேன். அங்கயும் ரொம்ப நாள் இருக்க முடியலை. இந்த நிலைதான் இந்த அமைப்பைப் பத்திக் கேள்விப்பட்டு இங்க வந்தேன். இவங்க என்னை டெல்லிக்கு அனுப்பினாங்க. வீட்டு வேலைக்குத்தான்! அங்க எனக்கு ஆயிரத்து ஐநூறு ரூபாய் சம்பளம். சாப்பாடு, துணி மணியெல்லாம் அவங்களே கொடுத்திடறாங்க. அங்கயே தங்கிக்கலாம். இப்ப லீவுக்கு இங்க வந்திருக்கிறேன்!" என்றார் தனம்.

ஐந்தாவது வரை படித்திருக்கிற தனத்தின் சோகக் கதை இது என்றால், படிக்காத சுப்பம்மாவின் கதை வேறு மாதிரி!

கணவன் உயிரோடு இல்லை என்றாலும் ஒரு மகனும் மருமகளும் இருக்கிறார்கள். மைலத்தில் ஒன்றே முக்கால் ஏக்கர் நிலம், கிணறு பம்ப் செட்டோடு இருக்கிறது.

"இந்த நிலையில் நீங்கள் ஏன் வீட்டு வேலை செய்ய வந்தீங்க?"

"மருமவளுக்கும் எனக்கும் ஒத்தே வரலீங்க. என்னமோ தெரியலை. என்னை அவளுக்குப் பிடிக்கவேயில்லை. 'உங்க அம்மா வீட்டை விட்டுப் போவணும். இல்லேன்னா அவ சாவணும். அப்பத்தான் உன்னோட வந்து குடித்தனம் பண்ணுவேன்னு மவன்கிட்ட மருமவ சொல்லிட்டா. என்னால எதுக்கு என் மவன் வாழ்க்கை பாழாவணும்னு நான் ரயில்ல தலையைக் குடுத்துத் தற்கொலை பண்ணிக்கலாம்னு வந்தேன். அப்பத்தான் இந்த அமைப்பைப் பத்திக் கேள்விப்பட்டு வந்தேன். இப்போ சந்தோஷமா இருக்கறேன்!" என்றார் சுப்பம்மா.

அறுபது வயதுக்கு மேலாகும்

# லாட்டரி சீட்டு



• பேபியம்மாள்



• தனம்

# வாழ்க்கை



• கௌரி



• சுப்பம்மாள்

பேபியம்மாவின் கதையின் சோகமே வித்தியாசமானது. கணவன் உயிரோடு இருந்தாலும் அவர் செத்துப் போய் முப்பது வருஷத்துக்கு மேலாகிறது என்று தான் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

"ஏம்மா அப்படிச் சொல்றீங்க?"

"பின்னே... நான் குத்துக் கல்லாட்டம் இருக்கறப்பவே அவர் இன்னொருத்தியோடு குடித்தனம் பண்ண ஆரம்பிச்சா வேறே எப்படிச் சொல்றதாம்?" என்று நம்மையே திகைக்க வைக்கிறார்.

"என்ன இருந்தாலும்..." என்று நாம் ஆரம்பித்த போது அடிபட்ட புலியாய்ச் சீறினார்.

"என்னைக்கு இன்னொருத்தியோட போனானோ, அன்னைக்கே அவன் செத்துப் போன தாத்தாங்க அர்த்தம் பண்ணிக்கிட்டேன். அதாலதான் முப்பது வருஷமா அப்படிச் சொல்றேன். இதுல என்ன தப்பு? அப்பத்தான் இந்த ஆம்பிளைகளுக்குப் புத்தி வரும்!" என்று பேபியம்மா மேலோட்டமாகச் சீறினாலும் அவரது வாழ்க்கையில், சோகம் தனது கோரக்கால்களால் அழுத்தமாகவே பிறாண்டிக் கொண்டிருக்கிறது.

முன்பு வீட்டு வேலை பார்த்த வீட்டுக்காரர்களே இவரது ஒரே மகளுக்குத் திருமணம் செய்து வைத்திருக்கிறார்கள். அவளுக்கும் இரண்டு பெண் குழந்தைகள் பிறந்தன. இந்த நிலையில் கணவனோடு தகராறு செய்து கொண்டு தாயுடனேயே வந்து விட்டாள்.

வந்த மகள் இங்கே இன்னொருவரோடு தொடர்பு கொண்டு அவரைத் திருமணம் செய்து கொண்டு போய்விட, அவளுடைய இரண்டு பெண் குழந்தைகளையும் வளர்க்கிற பொறுப்பு பேபியம்மாவுக்கு வந்து விட்டது. மகள் இப்போது இவர்களைத் திரும்பியே பார்ப்பதில்லையாம்!

• ரகுபதி

"ஆனாலும் நான் கவலைப் படலீங்க. இங்க வந்தேன். இவங்க மூலமா வீட்டு வேலைக்குப் போறதால ஆயிரத்தைநூறு ரூபாய் சம்பளம் கிடைக்குது. அதைக் கொண்டு பேத்திகளைப் படிக்க வெச்சுக்கிட்டிருக்கிறேன். ஒருத்தி ஒன்பதாவது; இன்னொருத்தி ஏழாவது படிக்கறா!" என்றார் சந்தோஷமாக.

**கா**ட்டாங்குளத்தூரைச் சேர்ந்த கௌரியின் வாழ்க்கை வேறு மாதிரி. கணவன் குடிகாரராக இருந்ததால் பிரச்னை. மூன்று பெண் குழந்தைகளோடு தனியே வந்து விட்டார்.

முதலில் பீர் கம்பெனியில் வேலை. அந்த சம்பளம் கட்டி வரவில்லை. அதனால் இப்போது வீட்டு வேலை. இந்த அமைப்பின் மூலம் போனதால் ஆயிரத்தைநூறு சம்

• கல்பனா



# லட்சாதிபதி!

பளம். இதைக் கொண்டு இப்போது பெண்களைப் படிக்க வைத்துக் கொண்டிருக்கிறார். முதல் பெண் எம்.காம் படித்துக் கொண்டிருக்கிறார். இரண்டாவது பெண்ணுக்குத் திருமணம் செய்து விட்டார். மூன்றாவது பெண் பத்தாவது படித்துக் கொண்டிருக்கிறார்.

"இரண்டாவது பொண்ணுக்குக் கல்யாணமெல்லாம் பண்ணியதால 42 ஆயிரம் கடனாயிடுச்சு. இப்ப அதையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமா அடைச்சுக்கிட்டு வர்றேன். இப்ப சந்தோஷமா இருக்கேன்!" என்றார்.



"என் மனைவி எப்பவுமே நாசுக்காகத்தான் திட்டுவா...!"

"எப்படி?"

"வர வர உங்களுக்கு 'கொலஸ்ட்ரால்' ஜாஸ்தின்னுதான்!"

– தஞ்சைத் தரணியன்

கும்மிடிப்பூண்டிக்கு அருகில் உள்ள சின்ன ஓபலாபுரத்தைச் சேர்ந்த சந்திராவின் கதை வேறு விதமானது. கணவர் இறந்து விட்டார். இரண்டு பையன்கள். கொஞ்சம் நிலம் இருந்தபோதிலும் கணவரின் தம்பிமார்களால் பிரச்னை. அதனால் பையன்களை தமது பெற்றோரிடம் விட்டுவிட்டு சென்னைக்கு வந்து வீட்டு வேலை செய்ய ஆரம்பித்து விட்டார்.

இங்கு நல்ல சம்பளம் என்பதால் அவ்வப்போது சேமிப்பு ஏற்படும். இவரிடம் சேமிப்பு வளர்வதை அறியும் மகன்களும் அதை வாங்குவதற்காக வந்து விடுகிறார்களாம். சேமிப்பு கரைந்ததும் அம்போ!

அதனால நான் இப்போ உஷாராயிட்டேங்க! சொந்த பந்தமெல்லாம் கையில பணமிருந்தாத்தான்றதை அனுபவ ரீதியாவே புரிஞ்சுக்கிட்டேன்!" என்றார் சந்திரா.

எல்லோரும் 'அமைப்பு, அமைப்பு' என்கிறார்களே, அது என்ன? அதுதான் 'வீட்டு உதவியாளர்கள் (வேலைக்காரிகள் என்றுதான் சொல்ல வேண்டுமா என்ன!) சேவை இல்லம்' (House Maids Service Home). இந்த அமைப்பைச் சைதாப்பேட்டையில் நிறுவிச் செயலாளராகவும் செயலாற்றி வருகிற கே. ரகுபதியைச் சந்தித்தபோது "பொறுப்பான ஆட்கள்தான் கிடைக்க மாட்டேன் என்கிறார்கள். வீட்டு வேலை செய்வதற்கு 1,500 ரூபாய் சம்பளம். வீட்டிலுள்ள வயதானவர்களுக்குப் பணிவிடை செய்தால் இரண்டாயிரம் ரூபாய் சம்பளம். அங்கேயே சாப்பாடு, தங்கிக் கொள்ளலாம். இப்படி தேவை நிறைய இருக்கிறது!" என்றார்.

"நிஜமாகவா?" என்று நாம் ஆச்சரியப்பட்டுக் கேட்டபோது, "ஆமாங்க! நான் கிராமப்புறங்களுக்குச் செல்லும்போதெல்லாம், அங்குள்ள விதவைப் பெண்கள், கணவனால் மற்றும் பிள்ளைகளால் கைவிடப்பட்ட பெண்களிடம், 'அறுபதே மாதங்களில் ஒரு லட்ச ரூபாய் சம்பாதிக்கலாம். வீட்டு வேலை செய்வதா? அது கௌரவக் குறைச்சலான வேலையல்லவா என்று நீங்கள் நினைக்கக் கூடாது. அவ்வளவுதான்!' என்றுதான் பிரசாரமே செய்கிறேன். ஆனாலும் தகுந்த ஆட்கள் கிடைப்பதில்லை!" என்றார்.

"இந்த இல்லத்தின் மூலம் என்ன செய்கிறீர்கள்?"

"ஒருபுறம் வீட்டு வேலைக்கு நம்பிக்கையான ஆட்கள் வேண்டுமென்று தேடிக் கொண்டிருக்கிறார்கள். மறுபுறம் வாழ்க்கையில் இனி என்ன செய்வது என்று பல பெண்கள் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் இருவருக்கும் இடையில் எங்கள் இல்லம் பாலமாகச் செயல்படுகிறது!

"பெரும்பாலான பெண்கள் கிராமப் பகுதிகளிலிருந்து வருபவர்கள். அவர்களுக்கு நகர நாகரிகம் தெரியாது. வெகுளியாக நடந்து கொள்வார்கள். அதனால் அவர்களுக்குப் பயிற்சி தருகிறோம். டெலிபோன்

வந்தால் அதை எடுத்து எப்படி மரியாதையாகப் பேசு வது. வீட்டிலுள்ளவர்கள் தண்ணீர் கேட்டால் வெறு மனே தம்ளரில் எடுத்து வந்து தராமல், ட்ரேயில் வைத்து எடுத்துவர வேண்டும் என்பது போன்ற சிறு சிறு விஷயங்களையெல்லாம் சொல்லித் தருகிறோம்.

"இதே மாதிரி, வீட்டுக்காரர்களிடமும் பேசுகிறோம். ஒரு பெண் எங்கிருந்தோ உங்கள் வீட்டுக்கு வேலை செய்ய வருகிறாள். நீங்கள் மனைவி மக்கள் குடும்பம் என்று சந்தோஷமாக இருக்கிறீர்கள். ஆனால் அவர் களோ, தன்னந்தனியாக இருக்கிறார்கள். எனவே, நீங்கள் சாப்பிட்ட பிறகுதான் வேலைக்காரி சாப்பிட வேண்டும் என்று நினைக்காதீர்கள். நீங்கள் இரவில் தூங்கப் போகும் வரை அவர்களும் விழித்துக் கொண் டிருக்க வேண்டும் என்று நினைக்காதீர்கள்!" என்பது போன்ற விஷயங்களை எடுத்துச் சொல்கிறோம். இது நல்ல பலனைத் தருகிறது!"

"நீங்கள் வேலைக்கு அனுப்பும் பெண்கள், போகும் இடத்தில் முழு நம்பிக்கைக்குரியவர்களாக நடந்து கொள்கிறார்களா?"

"அபூர்வமாக ஒன்றிரண்டு பேர் சிறு சிறு திருட்டு களில் ஈடுபடலாம். அது ரொம்பவும் அபூர்வம்தான். அப்படிப்பட்டவர்களை நாங்கள் மறுபடியும் எங்கும் சிபாரிசு செய்வதில்லை!" என்ற ரகுபதி தமது இல்லத் தின் மூலம் இன்னொன்றையும் செய்கிறார்.

அதுதான் வேலை செய்யும் பெண்களின் சம் பளத்தை அவர்கள் பெயரிலேயே சேமிப்பது. அவர் களின் அநாவசியச் செலவுகளைத் தவிர்ப்பது. இதன் காரணமாகவே சில பெண்கள் லட்ச ரூபாய் வரை தங்களின் சேமிப்பில் வைத்திருக்கிறார்கள்.

இப்படி லட்ச ரூபாய்க்கு மேல் சேமித்து, அனை வரின் அன்பையும் நம்பிக்கையையும் பெற்றிருக்கிற பெண்தான் அட்டைப் படத்திலுள்ள செல்வி கல்பனா. சிங்கப்பூரில் வேலை செய்து வந்த இவர், இப்போது அமெரிக்காவுக்குச் செல்லவிருக்கிறார்.

முப்பத்து நான்கு வயதாகும் கல்பனா, சிறு வயதி லேயே பெற்றோரை இழந்தவர். அதனாலேயே சொல்லிக் கொள்கிற மாதிரி படிக்க முடியாமல் போனவர். தம்பி, சகோதரியெல்லாம் இருக்கிறார்கள் என்றாலும் யாரையும் சார்ந்திராமல் சொந்தக் காலில் பெருமிதத்தோடு நிற்கிறார். சைவம் - அசைவம் இரண்டு சமையலிலும் எக்ஸ்பர்ட் என்றாலும் இவர் முழுக்க முழுக்க சைவம் தான்.

"சரி, கல்பனா! எப்போது உங்கள் கல்யாணம்?"

"அன்பான ஒருவர் கிடைக்க வேண்டும்; பக்தி யுள்ளவராக இருக்க வேண்டும். மற்றபடி ஜாதியெல் லாம் ஒரு விஷயமேயில்லை!" என்றார் வெட்கத் தோடு. ●

— இளங்கோவன்

அட்டை வண்ணப்படமும், படங்களும் : ஸ்ரீஹரி

இல்லத்தரசி

சீதா ரவி எழுதும்

மினி தொடர் ஆரம்பம்!



அடுத்த இதழில்...





• ஏலம் நடக்குமிடம்

# நெதர்லண்ட்ஸ்!

ஜெயஸ்ரீ ராஜ்

விமானத்தில் பயணித்தவர்களின் தோற்றத்தில் பளிச்சென்ற மாறுதல்! நெகு நெகுவென்ற உயரம், கூர்மையான மூக்கு, கழுத்து வரை தலைமுடி, சற்றே கரடு முரடான தோற்றம்...

'நெதர்லண்ட்ஸ்' என்றால் 'அடி மட்டத்திலுள்ள நாடு' என்ற பொருள் - பொருளாதார ரீதியிலில்லை; நீருடன் போராடி நிலத்தை மீட்டிருப்பதால், கடல் மட்டத்திற்குக் கீழேயுள்ள ஊர்கள் என்றுதான் கொள்ள வேண்டும்!

பழைய பூகோள புத்தகங்களில் "ஹாலந்து" என்றே குறிப்பிடப்பட்டிருக்கும்; இன்றும் தென் பகுதியை 'ஹாலந்து' என்கிறார்கள்.

முன்பு டச்சுக்காரர்களின் ஆதிக்கத்திலிருந்ததால், டச்சு மொழிதான் இங்கே பிரதானம். ஹாலந்து மன்னருக்கும் ராணிக்கும் இன்னும் ஓரளவு மரியாதை வைத்திருக்கிறார்கள். ஒன்றரைக் கோடி மக்கள் வாழும் இந்நாடு, ஐரோப்பியர்கள் பார்வையில் "thickly populated!"

நாட்டின் 16,000 சதுர மைலில் பெரும்பகுதி கடலிட்ட பிச்சைதான்; காணுமிடமெல்லாம் வாய்க்கால்கள், ஏரிகள் என்ற கிராமியச் சூழல்! ஒடுக்குகளில் அணையிட்டு கடல் நீரைத் தடுத்து, பின் இராட்சதப் பம்புகள் மூலம் இந்நீரை வெளியேற்றி, காய்ந்த பூமியையும் பச்சைப் பசேல் குளுமையாக மாற்றிய சாதனையாளர்கள்; பிறவி விவசாயிகள்.

ஆம்ஸ்டர்டாமின் 'ஸ்கிபோல்' விமான நிலையம் நெருங்குவதை விமானி அறிவித்தார்; 'ஸ்கிபோல்' ஒரு காலத்தில் கப்பல் துறை; இன்றோ பிரம்மாண்ட விமான தளம்!

ஏர்போர்ட்டைத் தொட்டதுமே, மிஸ்டர் 'ரேமா ஷேந்திரனை' (ராமச்சந்திரன் தான்!) உடனடியாக அழைப்பதாக அறிவிப்பு வந்தது! அவ்வளவுதான்! பழைய பயம் தலை தூக்கியது - பினேஜர் (குளிருக்கு அடக்கமான கனமான சட்டை) ஆசாமி சந்தேகத்துக்கிடமானவன்தான் என்று ஊர்ஜிதமாக, எதை, எப்படிச் சொல்லித் தப்பிப்பது என்ற கவலையில், நம்மூர் தெய்வங்களையும், அந்த ஊர் தெய்வங்களையும் வேண்டிக் கொண்டு வெளியே வந்தோம்!

எங்களைப் பார்த்த மாத்திரத்தில் ஒரு 'ஹாண்ட்ஸம்' இளைஞன், ஸல்யூட் அடித்து, "உங்கள் மனைவிக்கு காலில் அடிபட்டிருக்கிறதாமே, அதனால் வீல் சேர் வசதியைத் தயாராய் வைத்திருக்கிறோம்" என்றதும், உச்சி குளிர்ந்து விட்டது!

அட! எத்தனை அக்கறையுடன் இவர்கள் செயல்படுகிறார்கள்? ஹீத்ரோவில்,

விட்டால் இனி எங்கும் பயமில்லை" என்று எங்களை நிம்மதியடைய வைத்தார்.

**ஆ**ம்ஸ்டர்டாமை இன்ப உலகம், இளைஞர் உலகம் என்றெல்லாம் அழைக்கிறார்கள். 'ட்ரக்ஸ்' 'சிவப்பு விளக்கு' போன்றவற்றுக்குப் பெயர் போன இடமிது!



• கம்ப்யூட்டரில் ஏலம் கேட்கும் வியாபாரிகள்



• டிராலிகளில் பயணிக்கும் மலர்கள்

ஏர்போர்ட் மானேஜரிடம் பேசி, காரில் (பொம்மைக் கார் போல்தான்) பயணித்ததால், அவர்கள் இவர்களுக்குத் தெரிவித்து, இவர்கள் தயாராய் ஏற்பாடு செய்து... ஓ! ஸிம்ப்ளி க்ரேட்! இந்தியாவில், விமான நிலையத்திலேயே ஒரு பயணி, ஆம்புலன்ஸ் வசதி கிடைக்காத காரணத்தால், ஹார்ட் அட்டாக்கில் இறந்த பரிதாபத்துடன் எப்படி இதை ஒப்பிடாமல் இருக்க முடியும்? சிறந்த ஐரோப்பிய விமான நிலையங்களில், ஆம்ஸ்டர்டாம் விமான தளம்தான், இரண்டாவது இடத்தைப் பெற்றிருக்கிறதாம். (நாங்கள் முதலிடத்தையே கொடுப்பதற்குத் தயாராய் இருந்தோம்)

விஸ்தாரமான விமான நிலையத்தில் எக்கச்சக்க கடைகள்; கொத்துக் கொத்தாய் பலூன்கள்! உறவினர் சேகர், எங்களை வரவேற்று, தமது இல்லத்திற்கு அழைத்துச் செல்ல வந்திருந்தார். அவரிடம் கடச்சுட 'ப்னேஜர்' மர்மத்தை விவரித்தபோது, "ஆம்ஸ்டர்டாமில் 'ட்ரக்ஸ்' பயங்கரம் அதிகமென்பதால், மோப்ப நாய்கள் சுற்றிக் கொண்டே இருக்கும்; இங்கே க்ளியராகி

ஆனால் அதன் சுவடே தெரியாமல், அமைதியும் பசுமையும் போட்டி போட்டுக் கொண்டு எங்களுக்கு முகமன் கூறின.

சாலைகளில் கார்கள் 'விர்'ரிடும்போது, இரண்டு பக்கமும் பசுமை கண்களுக்கு ஏகமான குளிர்ச்சியைத் தர, ஆங்காங்கே கண்ணாடி வீடுகள் போன்ற அமைப்புக்குள் "லைட்" எல்லாம் போட்டுக் கொண்டு, "ஹீட்டர்" வசதியுடன் சில செடி கொடிகள்!

"இவைதான் க்ரீன் ஹவுஸஸ்; இங்கே தட்ப வெப்பநிலை சாதகமாக இல்லாததால், வெப்பம் வெளிச்சம் இரண்டுமே செயற்கையாக அளிக்கப் பட்டு பயிர்கள் பராமரிக்



சப்படுகின்றன" என சேகர் விளக்கினார். வீடுகளுக்கே மின் சாரமில்லாமல் நம் நாட்டில் இன்னும் சில இடங்களிருக்க, இங்கே பயிர்களுக்கு இத்தகைய வசதிகள் செய்து தரப்படுவது அதிசயமாக இருந்தது!

அகண்டு நீண்ட சாலைகளில் இரண்டு புற கோடிகளிலும் செம்மண் இட்டது போன்ற சிவப்புக் கறை ஓடியது; "இங்கே சைக்கிள்கள் எக்கச்சக்கம்! அவர்களுக்கென்று தனி லேன் (பாதை)" என்ற விளக்கம் கிடைத்தது.

சாலைகளில் குறுக்கும் நெடுக்குமாக, எண்ணிப் பார்க்க முடியாத எண்ணற்ற ஃப்ளை ஓவர்கள்! "இங்கே ட்ராஃபிக்கையே காணோம்! இத்தனை ஓவர் ப்ரிட்ஜ்களா? நாலைக் கிளப்பிக் கொண்டு போய் நம்மூர் ட்ராஃபிக் ஜாம்களைக் குறைத்தாலென்ன?" என்ற பைத்தியக்கார எண்ணம் தலைதூக்குகையில், எதிரே, ரோடுக்குக் குறுக்காக, ஒரு போர்டில், 'ஸ்பீட் – 150 - 200 கி.மீ. 'என்ற அறிவிப்பு அசத்தியது; "இது போல் ஆங்காங்கே எந்த அளவு ஸ்பீடில் போகலாம் என்ற அறிவிப்புகளிருக்கும்; எங்கேயாவது ஆக்ஸிடெண்ட், அல்லது ரோட் ப்ளாக், ஆகியிருந்தால், முன்பிருந்தே ஸ்பீடை குறைத்துக் கொண்டு வரச் சொல்வார்கள்; இது ட்ராஃபிக் ஜாமைத் தடுக்கும்" என்று அடுத்த ஆச்சர்யத்திற்குத் திசை திருப்பினார்.

அபார்ட்மெண்டுக்கு வந்து, ஹீட்டர் கதகதப்பில் சேகரின் மனைவி சுதா கைப் பக்குவத்தில் இந்திய உணவை ருசித்த போது, அதுதான் 'அமிர்தம்' என்று தோன்றியது.

அருகிலுள்ள, தென் அமெரிக்க காலனி சுரிநாம். அங்கு, நம்மூர் அரிசியிலிருந்து கடுகு வரை எல்லாமே கிடைக்கிறதாம்; மோர் கூட பாக்கெட்டில் விற்கிறார்கள். அந்த ஊர் சேமியாவில் சுதா செய்திருந்த ஒரு திடீர் சேவை, நம்மூரில் மாவரைத்து, வேகவைத்துக் கையொடியப் பிழியும் சேவையைத் தூக்கிச் சாப்பிட்டு விட்டது! சர்க்கரைப் பொங்கலிலிருந்து குங்குமப்பூ மணம், அபார்ட்மெண்ட்டையே நிறைத்தது! நீள நீளமாய், பச்சை நிறத்தில், கொழுத்த பீன்ஸ் போன்றிருந்த காயினால் கறியும், அந்த ஊர் கீரை மசியலும் சுவையோ சுவைதான்!

**"பயங்கரமான சஸ்பென்ஸ் படமாம்!"**

**– குல்லூ**



அவர்களுடன் பேசிக் கொண்டிருந்ததில், அரசாங்கம் அந்த ஊர் மக்களை ஏகமாகக் கவனித்துக் கொள்வது தெரிந்தது – 18 வயது வரை குழந்தைகளுக்குப் பராமரிப்புத் தொகை வழங்குகிறார்கள். – முதல் குழந்தைக்கு 3 மாதத்துக்கு 225 கில்டர்கள்; (1 கில்டர் - 20 ரூபாய்) இரண்டாவது குழந்தைக்குக் கூடுதலாக ஒரு நூறு கில்டர்கள். மூன்றாவதுக்கு அதைவிடக் கொஞ்சம் அதிகம்... இப்படியே... குழந்தை பெற்றுக் கொள்ள இன்செண்டிவ்! இருந்தும் மூன்றுக்கு மேல் இந்த ஊர்க்காரர்கள் பெற்றுக் கொள்வதில்லையாம்! வேலையில்லாப் பட்டதாரிகளுக்கு உபகாரத் தொகை (700 கில்டர்கள்). வயதானவர்களுக்கு பென்ஷன், அரசாங்கம் சுடச்சுட தயாரித்தளிக்கும் ஒரு வேளை உணவு, மருத்துவ வசதிகள், இரவில் மின்சாரத்துக்குக் குறைந்த கட்டணம்... இப்படி எத்தனையோ!

"எல்லாவற்றுக்கும் சேர்த்து அரசு 60 சதம் வரிப்பணமாக வசூலித்து விடுகிறது" என்கிறார்கள். இருந்த போதிலும், செய்தித்தாள்கள் கூட ஃப்ரீயாகக் கிடைக்கின்றன. (டச்சு மொழியில்தான்) மெயில் பாக்ஸில் எக்கச்சக்க பேப்பர்கள், விளம்பரங்கள்... அதைத் திறந்து கூடப் பார்க்காமல் அப்படியே குப்பைத் தொட்டியில் போடுகின்றனர் பலர்!

அரசு ஏகமாக கவனிப்பதால், இவர்கள் யாரும் அதிகமாக கஷ்டப்பட்டுப் படிப்பதெல்லாம் இல்லை. ஒன்றிரண்டு யுனிவர்ஸிடிகள் தான்; பெரும்பாலும் பள்ளிப் படிப்போடு நிறுத்தும் கூட்டம் அதிகம். எங்கேயாவது ஸூப்பர் மார்க்கெட்டில் வேலை தேடிக் கொண்டு, பணம் சேர்த்து, விடுமுறைக்கு வெளியூர்களைச் சுற்றிப் பார்த்து, ம்யூசிக் கேட்டு, ஹாக்கி, ஃபுட்பால் விளையாடி, பூனை நாய் வளர்த்து... கஞ்சா கொகெய்ன் என்று திசை மாறி... பாவம், இவர்களுக்கென்று "காபி ஷாப்ஸ்" (காப்பி எதுவும் விற்பதில்லை) நிறுவி, அரசே குறைந்த விலையில், ''Soft drugs''ஐ விநியோகிக்கிறதாம்... அதிர்ச்சிகரமான தகவல்!

மறுநாள், அதிகாலை, இருள் பிரியாத இரவுத்தனமான நான்கு மணிப் பொழுதில், நெதர்லண்ட்ஸின் அதி அற்புதமான அதிசயங்களில் ஒன்றான "ஆல்ஸ்மீர் மலர் ஏலத்"தைக் காணச் சென்றோம்.

உலகின் மிகச் சிறந்த மலர் ஏலம் என்பதுடன் இது நடக்கும் இடத்திற்கு மிகப் பிரமாண்ட "கமர்ஷியல் பில்டிங்" என்ற பெருமையும் உண்டு. 120 கால் பந்தாட்ட மைதானங்கள் இணைந்தால் எப்படி இருக்கும்? அவ்வளவு பெரிசு! 5000 விவசாயிகள் ஒருங்கிணைந்து நடத்தும் கூட்டுறவு மையமிது!

இவர்களது தோட்டத்திலிருந்து வரும் மலர்கள், செடிகள், போன்றவை, இங்கேயுள்ள பெரிய ஏர்கண்டிஷன் ஸ்டோரேஜ் அறைகளில், முந்தைய இரவே அடைக்கலம் புகுந்துவிடும். ஒரு இன்ஸ்பெக்டர் எல்லாவற்றையும் சோதித்து, 'தரத்'தைப் பற்றிய கணிப்புகளை ஒரு குறிப்பேட்டில் பதிவு செய்து, ஒவ்வொரு விவசாயிக்கும் குறிப்பிட்ட எண்களமைந்த ட்ராலிகளை வழங்குகிறார்.

காலை 6.30 மணியிலிருந்து, மலர்களைச் சுமந்து கொண்டு இந்த ட்ராலிகளின் ஊர்வலம் துவங்குகிறது. ஏலம் ஐந்து பெரிய ஹால்களில் நடைபெறுகிறது. ஒவ்வொன்றிலும் நூற்றுக்கணக்கானோர் அமர்ந்து ஏலம் எடுக்கலாம்; பார்வையாளர்கள் காலரியிலிருந்து, கண்ணாடி வழியே நாமும் காண முடியும்!

அடடா! அந்த ஊர்வலத்தின் அழகே அழகு! கோஷமிடும் மனிதக் கூட்டங்களிலிருந்து மாறுபட்டு, மௌனமாய் நம்முடன் உறவாடும் ஒரு ரம்மியமான ஊர்வலம்! உலக அழகிகளின் ஊர்வலம் ஏற்படுத்தாத பரபரப்பை, இந்த மலர்ப் பொதிகள் ஏற்படுத்தின.

எத்தனை வண்ணங்கள்... நமக்கு அறிமுகமான மலர்களைத் தவிர சந்நியாசி நிறம், அழுத்தமான வயலட், பச்சை நீலத்தின் பல ஷேடுகள், கறுப்பு கூட..... நம்ப முடிகிறதா? (ஏஷியன் பெயின்ட்ஸ் பிச்சை வாங்க வேண்டும்).

எத்தனை வடிவங்கள்? பூசணி சைஸிலிருந்து, கல்லுப்பு சைஸ் வரை! கொத்தாய், தனியாய், இலை - தழை மேக்கப்புகளுடன்... எத்தனை ரகம்? ரோஸ், ட்யூலிப், கார்நேஷன், (போதும்... அதற்கு மேல் எங்கே வாயில் நுழைகிறது?)

ட்ராலிகள் ஹாலை அடைந்ததும், அறிவிப்பாளர் ஒவ்வொன்றின் தரம், உற்பத்தியாளர் பெயர், குறைந்தபட்ச விலை எல்லா

''படம் பயங்கர சஸ்பென்ஸாமே...?''

''ஆமாம். ஹீரோவின் அண்ணாவைக் கொலை செய்தது யாரென்று எங்களுக்கே தெரியவில்லைன்னு கடைசிலே 'கார்டு' போட்டு முடிச்சிட்டாங்கன்னா, பாரேன்!''

– வெ. ராஜாராமன்



வற்றையும் விரிவாகச் சொல்கிறார்.

வியாபாரிகள், தங்கள் பெயரை ரிஜிஸ்தர் செய்து, ஓர் அடையாளச் சீட்டைப் பெற்று, அதை அவர் அமரும் டெஸ்க்கில் சொருகினால், ஏலம் எடுக்க உதவும் 'புஷ்'பட்டன் திறந்து கொள்கிறது. எதிர்ச் சுவரில் கடிகாரம் போன்ற அமைப்பு (1-100 குறியிடப்பட்டது) உள்ளது. ஏலம் எப்போதும், அதிகபட்ச விலையான 100ல் (டச்சு 'நாணயம்தான்) துவங்கி, கீழே இறங்கிக் கொண்டே இருக்கிறது! கடிகாரமுள், தமக்குச் சாதகமான விலையைத் தொட்டதும், குறிப்பிட்ட வியாபாரி தம் முன்னிருக்கும் பட்டனை அழுத்துவார்; முதலில் யார் அழுத்துகிறார்களோ அவர்களுக்குத்தான் ஏலம்! கம்ப்யூட்டர் உடனடியாக அவர் பெயரில் 'பில்'லைத் தயாரித்து விடும்!

அதன் பிறகு அந்த ட்ராலி டிஸ்ட்ரிப்யூஷன் ஹாலுக்கு போய்விடுகிறது. சாவகாசமாக அங்கிருந்து 'பாக்' பண்ணிக் கொள்ளலாம்! வங்கி வசதிகளும் அங்கேயே உண்டு!

தினமும் 14 மில்லியன் மலர்களும், 1.5 மில்லியன் செடிகளும் விற்பனையாகின்றனவாம்! இவை ஐரோப்பா முழுதும், லாரிகளில் பயணிக்கின்றன; மத்திய கிழக்கு, அமெரிக்காவுக்கெல்லாம் விமானத்தில் பறந்து செல்கின்றன. 1800 ஊழியர்கள் இங்கே வேலை செய்கிறார்கள்; இரண்டு லட்சம் டூரிஸ்டுகள் வருடந்தோறும் இந்த மலர் ஏலத்தைப் பார்வையிட வருகின்றனர்.

மலர்களை விட்டுப் பிரியவே மனமில்லாமல்தான் வெளியே வந்தோம்! இளவேனிற் பருவத்தில் (ஜூன், ஜூலை, ஆகஸ்ட்) வந்தால், மலர்ப் படுகைகள் அங்கேயே நம்மைக் கட்டிப் போட்டு விடுமாம்!

(தொடரும்)



# காதில் விழுந்தவை

● ஜெயலலிதா டில்லி சென்றிருந்த போது "நாங்கள் கதவைத் திறந்தே வைத்துள்ளோம். தமிழ் மாநில காங்கிரஸுடன் கூட கூட்டு சேரக்கூடும்" என்று திருவாய் மலர்ந்தருளி மூப்பனாரைச் சங்கடப்படுத்தினார். அம்மையார் இப்படிச் சொன்னதற்கும் ஒரு பின் கதை இருப்பதாக த.மா.கா. வட்டாரத்தில் சொல்கிறார்கள். 'தமிழ் நாட்டில், வெறும் எலும்புக் கூடாக உள்ள காங்கிரஸுடன் கூட்டணி சேர்வதில் பயனில்லை. த.மா.காவும் அந்த கூட்டணியில் இருக்க வேண்டும். அப்போது தான் வோட்டு வங்கியில் அறுவடை சாத்தியமாகும்' என்று தமக்கும், சோனியாவுக்கும் பொதுவான நண்பியான அந்த ஆங்கிலப் பத்திரிகையின் சீனியர் பெண்மணி மூலம், சோனியாவிடம் சொல்லியிருக்கிறார் ஜெ. அதற்கு சோனியாவிடமிருந்து சரியான பதில் வராததால்தான் தமது எண்ணத்தை சூசகமாகச் சொல்லியிருக்கிறார் ஜெ. என்கிறது த.மா.கா. வட்டாரம். "த.மா.கா. பிறந்ததே அ.தி.மு.க.வுடனான கூட்டணியை எதிர்த்துத்தான். எனவே எந்த விதமான செல்வாக்கு பிரயோகிக்கப்பட்டாலும், தற்கொலைக்கு ஒப்பான இது போன்ற அரசியல் சித்துக்களில் த.மா.கா. இறங்காது" என்றார் ஒரு சீனியர் த.மா.கா. பிரமுகர்.

● ராமநாதபுரம் ஜாதிக் கலவரத்தை அடுத்து கூட்டப்பட்ட அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் கட்சிப் பாகுபாடின்றி அனைத்துக் கட்சித் தலைவர்களும் அரசை பிடி பிடியென்று பிடித்தது குறித்து மிகவும் நொந்து போயிருக்கிறாராம் முதல்வர். "உங்களுக்கு வயதாகி விட்டது. சாமியார் போல் ஆகிவிட்டீர்கள். கடுமையான நடவடிக்கை எடுக்கத் தயங்குகிறீர்கள்" என்று திருநாவுக்கரசு (எம்.ஜி.ஆர். அ.தி.மு.க.) போன்றோர் பேசியது குறித்து தி.மு.க. வட்டாரத்தில் பெருத்த வருத்தம். தி.மு.க.வை தனிமைப்படுத்த ஏதாவது சதி நடக்கிறதா என்று வியப்புடன் வினவுகிறார்கள். முதல் நாள் கூட்டம் முடிந்தவுடன் சற்று தமாஷாக (உள் வருத்தம்?) முதல்வர், "மூப்பனாருக்கு என்மேல் என்ன கோபம் என்று தெரியவில்லை. சர்வ கட்சிக் கூட்டம் போடச் சொன்னது, இது போன்ற பேச்சுக்களைக் கேட்பதற்காகத்தானோ" என்று நெருங்கியவர்களிடம் சொல்லியிருக்கிறார். "புதிய தமிழகம்" கிருஷ்ணசாமியின் வேண்டுகோளை ஏற்று, வருகிற 30ம் தேதியன்று தேவர் குரு பூஜையில் அரசுப் பொறுப்பில் இருப்பவர்கள் யாரும் கலந்து கொள்ளமாட்டார்கள் என்று ஒரு தகவல் சொல்கிறது.

● 'ம.தி.மு.க.வுடன் இணைந்து பா.ம.க. தொண்டர்கள் செயல்பட வேண்டாம்' என்று பா.ம.க. தலைமை ரகசியக் கட்டளையிட்டிருப்பதாக ஒரு செய்தி வந்ததல்லவா! இது பற்றி ம.தி.மு.க. வட்டாரத்தில் விசாரித்தால் 'அந்தச் செய்தியின் பின்னணியில் தி.மு.க.வின் கை இருக்கிறது. ம.தி.மு.க. தமிழகத்தில் பரவலாக எல்லா இடங்களிலும் செல்வாக்குப் பெற்றிருந்தாலும் தென் மாவட்டங்களில் வலிமை கூடுதலாக உண்டு. பா.ம.க.வுக்கு வட மாநிலங்களில் செல்வாக்கு. எனவே, இரு கட்சிகளும் இணைந்து செயல்பட்டால் தங்கள் பாடு ஆபத்தாகப் போய்விடுமோ என்று பயப்படுபவர்களின் கை வண்ணம்தான் இது போன்ற செய்திகள். மற்றபடி எங்களுக்கும் பா.ம.க.வுக்கும் உறவு நன்றாகவே இருக்கிறது. ஈழம் உட்பட பல பிரச்னைகளில் நாங்கள் உடன்பாடான கருத்துக்களைக் கொண்டவர்கள்தான்!" என்கிறார்கள்.

— தில்லப்பா

## தி.மு.க. தனிமைப் படுத்தப்படுகிறதா?

பசங்களா! நான்
சொல்லிக் கொடுக்கற மாதிரி
ஒழுங்கா படிச்சு
பாஸ் பண்ற வழியைப்
பாருங்க....

புதிய
பாடத்
திட்டம்

ஆர்.எஸ்.எஸ்



1998 நவம்பர் 1
வெகுதான்ய ஐப்பசி 15
மலர் : 57
இதழ் : 14

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# போர்க் கருவியாகும் கல்வி!

ஆர். எஸ். எஸ்ஸின் ரிமோட் கன்ட்ரோல் மத்திய அரசை இயக்கி வருகிறது என்பதற்கு அதிர்ச்சியூட்டும் ஆதாரம் ஒன்று அகப்பட்டிருக்கிறது.

அனைத்து மாநில கல்வி அமைச்சர்களும் கல்வித் துறைச் செயலர்களும் பங்கேற்ற அதிகாரபூர்வமான மாநாட்டில் சிறப்புரை ஆற்ற அழைக்கப்பட்டவர் பி.டி. சிட்டியங்லா (P.D. Chitiangla). ஆர்.எஸ்.எஸ்ஸின் ஓர் அங்கமான வித்யா பாரதி என்ற அமைப்பைச் சேர்ந்தவர் இவர். பிரதமர் இந்த மாநாட்டைத் துவக்கி வைத்ததுமே சிட்டியங்லாவின் சிறப்புரை இடம் பெற்றிருந்தது. பி.ஜே.பி ஆதரவுக் கட்சியினர் உள்பட அனைத்து மாநிலத்தவரும் ஒட்டுமொத்தமாக எதிர்க்க, இந்தச் சிறப்புரை ரத்தாயிற்று.

பள்ளிக் கல்வி எப்படி அமைய வேண்டும் என்பது குறித்து (ஆர்.எஸ்.எஸ் நோக்கில்) பிரசாரம் செய்து வருபவர் சிட்டியங்லா.

அரசின் செய்கைக்கு எதிர்ப்பு வலுத்த பிறகு, தமக்கும் ஆர்.எஸ்.எஸுக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை என்று மறுப்பு வெளியிட்டிருக்கிறார் சிட்டியங்லா. எனினும், இவரது சிபாரிசுகள் ஆரோக்கியமானவை அல்ல என்பதை மறுக்க முடியாது.

சிறுபான்மையினருக்கான கல்வி நிறுவனங்களை அனுமதிக்கும் அரசியல் சாசனப் பிரிவுகள் குறித்து விவாதிக்கவும் இந்த மாநாட்டில் இடமளிக்கப்பட்டிருந்தது.




இந்த இரு விஷயங்களையும் இணைத்துப் பார்க்கையில் பி.ஜே.பி. அரசு செய்யும் மாபெரும் தவறு வெளிப்படுகிறது.

அரசியல் ரீதியாகக் கடும் விமர்சனத்தையும் எதிர்ப்பையும் தோற்றுவித்திருக்கிறது, இந்த நடவடிக்கை.

'சிட்டியங்லாவின் சிபாரிசுகளை ஏற்று, இந்தக் கல்வி மாநாடு திட்டமிடப்பட்டது மிகவும் தவறாகும்' என்று மத்திய பிரதேச முதல்வர் திக்விஜய் சிங் பிரதமருக்குக் கண்டனக் கடிதம் எழுதியிருக்கிறார். 'நாட்டின் கல்வித் திட்டத்தை ஆர்.எஸ்.எஸ்ஸின் கட்டுப்பாட்டில் தூக்கிக் கொடுப்பது போலாகும் இந்தச் செயல்' என்று அதிர்ச்சியுடன் சுட்டிக் காட்டியிருக்கிறார். அதைப் பொருட்படுத்தாமல் ஏற்பாடுகள் தொடர்ந்தன.

இதில் வேடிக்கையும் வேதனையுமான உண்மை என்னவெனில் சிட்டியங்லாவின் சிபாரிசுகள் யாவும் அரசு நியமித்த ஓர் அதிகாரபூர்வமான குழுவின் சிபாரிசுகள் என்பது போல் தொனிக்கும்படி மாநாட்டின் செயல்திட்டத்தில் (agenda) சேர்க்கப்பட்டன.

ஆக, ஆர்.எஸ்.எஸ் என்னும் தனி அமைப்பின் பாதிப்பை அனுமதிப்பதுடன் அது குறித்து உண்மையை மூடி மறைக்கவும் முயற்சி நடந்திருக்கிறது.

சிபாரிசுகளை ஆராய்ந்தால், மேலும் அதிர்ச்சி! பாரதத்தை ஹிந்துத்வ நாடாகச் சித்திரிப்பதுடன் உபநிஷத், வேதங்களின் முக்கியத்துவமும் சாரமும் கல்வித் திட்டத்தில் புகுத்தப்பட வேண்டும் என்றும் சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.

வேதமும் உபநிஷதமும் இந்நாட்டின் மகத்தான செல்வங்கள் என்பதில் சந்தேகமில்லை. அவற்றைக் கல்வித் திட்டத்தில் அறிமுகப்படுத்துவதன் மூலம் வளமான சிந்தனை பெருகும் என்றும் நம்பலாம். எனினும், மதச்சார்பற்ற ஒரு நாட்டில், ஒரு சமயச் சார்புள்ள கல்வித் திட்டத்தை அரசு புகுத்துவது சரியாகாது.

இதர மதங்களுக்கும் இடமளித்து, சர்வமத சமரசத்துக்கும் மனித நேய வளர்ச்சிக்கும்




வழி வகுப்பதே நியாயமும் அறிவுடைமையுமாகும்.

ஆனால், ஆர்.எஸ்.எஸ். சார்புடைய ஒருவரிடம் இந்தப் பெருநோக்கை எதிர்பார்க்க முடியாது.

குறுகிய நோக்கில், ஹிந்துத்வ கண்ணோட்டத்துடன் மட்டுமே கல்வித் திட்டம் சிபாரிசு செய்யப்படுமானால், அதனால் விளையக்கூடிய பாதிப்புகளும் குழப்பங்களும் சொல்லில் அடங்காதவையாயிருக்கும். கல்வித் திட்டங்கள் மாநில அரசுகளின் கட்டுப் பாட்டிலிருப்பதால் அந்தந்த அரசுகள் தங்கள் நோக்கில் கடவுள் மறுப்பு அல்லது மதச் சார்புடைய கல்வித் திட்டங்களைப் புகுத்தி, கல்வியையே ஒரு மறைமுகப் போர்க் கருவியாக்கிவிட வாய்ப்பு இருக்கிறது.

இதனால் நாட்டில் ஏற்படக்கூடிய பாதிப்புகளைச் சற்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

இருபத்தோராம் நூற்றாண்டு வெகு சமீபத்தில் இருக்கிறது. தகவல் பெருக்கமும் விஞ்ஞான வளர்ச்சியும் தேசிய எல்லைகளையெல்லாம் தகர்த்து, உலகையே ஒரு கிராம மாக்கி வருகின்றன.

இந்தத் தகவல் புரட்சிக்கு இளைஞர்களைத் தயார்படுத்துவதும் அவர்களுடைய அறிவைச் செதுக்கி, தகவல்களைப் பக்குவமாகப் பகுத்தறியப் பழக்குவதும்தான் உயர் கல்வியின் முக்கிய நோக்கங்களாக இருக்க வேண்டும் என சமீபத்திய யுனெஸ்கோ கல்வி மாநாட்டில் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. அதே சமயத்தில் பண்பாட்டுச் சிறப்பும் மதிக்கப்பட வேண்டும். அதன் முக்கியத்துவம் உணர்த்தப்பட வேண்டும் என்றும் இந்த யுனெஸ்கோ மாநாட்டில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இதையெல்லாம் யோசிக்காமல், சமத்துவத்தையும் சகோதரத்துவத்தையும் புறக்கணித்து, குறுகிய கண்ணோட்டத்தில் கல்வியைத் திட்டமிட்டு போதிப்பது, இந்த நாட்டின் எதிர்காலக் குடிமக்களுக்கு இழைக் கப்படும் அநீதியாகும். ●

1  2  3  4  5 




# உதிரிக் கட்சிகளுக்கு

**நெல்லையிலுள்ள மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக் கழகத்தில் பட்ட மேற்படிப்பு படிக்கும் மாணவ, மாணவிகளிடம் 'நீங்கள் தேர்தல் கமிஷனராக நியமிக்கப்பட்டால்...!' என்று கேள்வி எழுப்பியவுடன், 'அது மட்டும் போதாது; தேர்தல் முறைகளில் நிறைய சீர்திருத்தங்கள் செய்கிற முழு அதிகாரமும் எங்களுக்கு வேண்டும். அப்போதுதான் எங்களால் செயல்பட முடியும். அப்படி நாங்கள் இருந்தால்...' என்று பேச ஆரம்பித்தார்கள்.**

*1. கோமதீஸ்வரன் (எம்.எஸ்ஸி, கம்ப்யூட்டர்):*

தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர்கள் குறைந்த பட்சம் பத்தாவது பாஸ் செய்திருக்க வேண்டும் என்பதைக் கட்டாயமாக்குவேன்.

*2. ஆனந்த் (எம்.ஏ; சரித்திரம்):*

லஞ்ச ஊழல் குற்றச்சாட்டு பற்றி கோர்ட்டில் வழக்கு இருந்தாலே தேர்தலில் நிற்கத் தடை விதிப்பேன்.

*3. காந்திமதி வேல் (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):*

வேட்பாளர்களுக்குப் படிப்பே ஒரு தகுதியில்லை. காரணம், படித்தவர்களும் தான் ஏமாற்றுகிறார்கள். எனவே அந்தந்தத் தொகுதியைச் சேர்ந்த பொதுமக்களில் பத்துப் பேர் (கட்சி சார்பில்லாதவர்கள்) வேட்பாளருக்காகப் பரிந்துரை செய்யணும்.

*4. சுலைமான் சேட் (எம்.எஸ்ஸி, கம்ப்யூட்டர்):*

எந்தக் கட்சி ஆளும் கூட்டணியிலிருந்து விலகினாலும் அமைச்சரவை முழு பதவிக் காலத்தையும் அனுபவிக்க ஏற்பாடு செய்ய முடியுமா என்று பார்ப்பேன்.

*5. விமலா ரமணி (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):*

தேர்தல் விதிகளைக் கடுமையாக அமுல்படுத்தினாலே போதும். ஒவ்வொரு கட்சியிலும் இளைஞர்களுக்கென்று குறிப்பிட்ட சதம் ஒதுக்கீடு வேண்டும்.

 11  12  13  14  15



6



7



8



9



10

**6. மெர்ஸி (எம்.எஸ்ஸி; கம்ப்யூட்டர்):**
உதரிக் கட்சிகளையெல்லாம் ஊத்தி மூடச் செய்து விடுவேன்.

**7. கிறிஸ்டோபர் (எம்.எஸ்ஸி, கம்ப்யூட்டர்):**
இவ்வளவுதான் செலவு செய்ய வேண்டு மென்று உத்தரவு போடுவது மட்டுமல்லாமல் அதைத் தீவிரமாகக் கண்காணிப்பேன். 100 சதவித வாக்குப் பதிவுக்கு ஏற்பாடு செய்வேன்.

**8. அல்போன்ஸ் (எம்.ஏ; சரித்திரம்):**
அரசாங்கமே இந்தித்

## டில்லை!

தத் தொகுதியில் இன்னின்னார் போட்டியிடுகிறார்கள் என்று விளம்பரம் கொடுக்கச் சொல்வேன். வேட்பாளர் சொந்தச் செலவில் போஸ்டர், பேனர் எல்லாம் போடக் கூடாது. ஜீப்பை உபயோகப்படுத்தி மட்டுமே பிரசாரம் செய்யலாம்.

**9. சண்முக சுந்தர்ராஜ் (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):**
ஆட்சி அமைக்க அழைக்கப்படும் கூட்டணியில் இருந்து இடையில் யாராவது வாபஸ் வாங்கினால், மீண்டும் தேர்தல் கிடையாது. மாநிலங்களில் மாதிரி மத்தியிலும் ஜனாதிபதி ஆட்சி செய்தால் என்ன!

**10. ஜெயலட்சுமி (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):**
'எய்ட்ஸ்' போன்ற சுகாதார திட்டங்களுக்கு எந்த அளவுக்கு பிரசாரம் செய்யப்படுகிறதோ அதே போன்று தேர்தல் வாக்களிப்பது பற்றிய விழிப்புணர்வுப் பிரசாரம் செய்யப்படும்.

**11. கவிதா (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):**
சென்ற தேர்தலில் போட்டியிட்டு ஜெயித்த வேட்பாளர் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றி இருக்கிறாரா என்று பார்ப்பேன். இல்லையென்றால் அவர் மீண்டும் தேர்தலில் போட்டியிட முடியாது.

**12. கபிலத் பேகம்: (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):**
மதம், ஜாதிகளை மையமாக வைத்து தேர்தலில் போட்டியிடுவதோ, தேர்தல் பிரசாரம் செய்வதோ கண்டிப்பாகத் தடை செய்யப்படும்.

**13. கல்யாண ராமகிருஷ்ணன் (எம்.எஸ்ஸி; கணிதம்):**
தேர்தல் கமிஷன் அலுவலர்கள் ஆங்காங்கே ஒழுங்காகத் தங்கள் கடமைகளைச் செய்கிறார்களா என்று கண்காணிக்க உயர்மட்டக் குழு ஒன்று அமைக்கப்படும்.

**14. சாரதா (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):**
கட்சிகளின் எண்ணிக்கைக்கு உச்ச



16



17



18



19



20

வரம்பு வைப்பேன். தேர்தல் முடிவுகள் பற்றிய வழக்குகளை விரைவாக விசாரிக்க தனி நீதிமன்றம் அமைக்கப்பட வேண்டும்.

**15. அனுராதா (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):**

ஒவ்வொரு குடிமகனும் வோட்டுரிமையைப் பயன்படுத்தணும். அதைப் பயன்படுத்தவில்லை என்றால் வேலை வாய்ப்பு, ரேஷன் ஆகியவைகளில் சிக்கல் என்கிற நிலைமையைக் கொண்டு வருவேன்.

**16. தாமரை மணாளன் (எம்.ஏ, சரித்திரம்):**

ஜாதி அடிப்படையில் உள்ள ரிசர்வ் தொகுதி என்பதெல்லாம் எடுக்கப்பட்டு விடும். பெண்களுக்கு என்று மட்டும் தொகுதி ஒதுக்கீடு உண்டு. ஆனால் அதில் போட்டியிடும் பெண்கள் ஏற்கெனவே உள்ள அரசியல்வாதிகளின் சொந்தக்காரர்களாக இருக்கக் கூடாது.


21


22


23


24


25

**17. முத்துக்குமார் (எம்.எஸ்ஸி; கம்ப்யூட்டர்):**

கள்ள வோட்டை ஒழிக்க எல்லோருக்கும் அடையாளக் கார்டு கொடுத்து விட்டுத்தான் தேர்தல்.

**18. வில்சன் (எம்.ஏ; சரித்திரம்):**

அரசு உத்தியோகம் பார்ப்பவர்கள் கூட தேர்தலில் நிற்கலாம். தோற்றால் மீண்டும் அரசுப் பணிக்குச் செல்லலாம்.

**19. ரோஸ் ஆண்டனி ராஜ் (எம்.எஸ்ஸி; கம்ப்யூட்டர்):**

டெலிவிஷன் போன்ற சாதனங்களில் மட்டும்தான் தேர்தல் பிரசாரம். ஜாதி அடிப்படையில் உள்ள ரிசர்வ் தொகுதிகள் இருக்காது.

**20. கிங்ஸ்டன் (எம்.எஸ்ஸி, கம்ப்யூட்டர்):**

எந்தக் கட்சி, மெஜாரிட்டி இல்லாவிட்டாலும் தனிப்பெரும் கட்சியாக இருக்கிறதோ அதுவே ஆட்சி அமைக்கலாம். உதிரிக் கட்சிகளின் ஆதரவு தேவையில்லை. அடிக்கடி தேர்தலைத் தவிர்க்கவே இந்த ஐடியா.

**21. உமா பரமேஸ்வரி (எம்.ஏ; ஆங்கில இலக்கியம்):**

பொதுக்கூட்டம், ஊர்வலம், பேரணி எல்லாவற்றுக்கும் 144தான். அரசின் டெலிவிஷனில் தோன்றி மட்டும் பிரசாரம் செய்ய வேண்டும்.

**22. ராஜி பிரியதர்சினி (எம்.ஏ. சமூகவியல்)**

தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர்களுக்கு ஒரே மனைவிதான் இருக்க வேண்டும். ஒழுங்கீனங்கள் சகித்துக் கொள்ளப்பட மாட்டாது.

**23. ஜோஸப் ததேயூஸ் (எம்.ஏ, ஆங்கில இலக்கியம்):**

சொந்தச் செல்வாக்கில், பிரசாரம் செய்ய வேண்டுமே தவிர, கட்சிப் பெயர் சொல்லி வோட்டு கேட்கக் கூடாது.

**24. கங்கை முத்து (எம்.ஏ புள்ளியியல்):**

பதவிக் காலத்தை ஏழு வருடமாக்குவேன். இதனால் தேர்தல் செலவு குறையும். அது நமது பொருளாதாரத்துக்கு நல்லதுதானே!

**25. சங்கர் (எம்.எஸ்ஸி, கணிதம்):**

இப்போது மூன்றில் ஒரு பங்கு நபர்கள் ஒரு கட்சியிலிருந்து வேறு கட்சிக்கு மாறியோ அல்லது தனிக் குழுவாகவோ செயல்படலாம் என்றிருக்கிறது. இதையும் தடை செய்ய வேண்டும்.

**— ஸ்ரீநிவாசன்**
படங்கள்: **வெங்கடேஷ்**

## கல்லீரல் மாற்று அறுவைச் சிகிச்சை:

சந்திரசேகர் பிள்ளை திருவனந்தபுரத்தைச் சேர்ந்தவர். வயது சுமார் 50. மலேஷியத் தலைநகர் கோலாலம்பூரில் பிஸினஸ்மேன்.

சுமார் பத்து வருடங்களாகவே அவருக்குக் கல்லீரலில் (லிவர்) விட்டு விட்டுச் சில பிரச்னைகள் வந்து கொண்டே இருந்தன. மஞ்சள் காமாலையும் வந்தது. வசதி இருந்ததால் அவ்வப்போது சிங்கப்பூர், ஆஸ்திரேலியா உட்பட பல பெரிய மருத்துவமனைகளில் போய் வைத்தியம் பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால் லிவர் பழுதாகிக் கொண்டே வந்தது. மாற்றுக் கல்லீரல் சிகிச்சை செய்து கொண்டால் நிரந்தரமான குணம் கிடைக்கும். ஆனால் மாற்றுக் கல்லீரல் யார் தருவார்?

சென்னை அப்போலோ மருத்துவமனையில் லிவர் மாற்று அறுவைச் சிகிச்சைக்காகக் காத்திருப்பவர் பட்டியலை இன்டர்நெட்டில் பார்த்தார். ஆகா, நாமும் முயன்றுதான் பார்ப்போமே என்று தோன்றியது பிள்ளைக்கு. மருத்துவமனையோடு தொடர்பு கொண்டு, நேராக இங்கே வந்து சேர்ந்து விட்டார்.

இது நடந்தது டிசம்பர் 97ல்.

இந்த அக்டோபர் முதல் வாரத்தில் இவருக்கு லிவர் மாற்று அறுவைச் சிகிச்சை நடத்தினர் டாக்டர் வீணா கிரிநாத்தும், டாக்டர் நீலமேகம் குழுவினரும். இதுதான் இந்தியாவிலேயே முதன் முதலாக நடந்த வெற்றிகரமான லிவர் மாற்று அறுவைச் சிகிச்சை!

சுமார் மூன்று வாரம் அப்போலோவிலேயே தங்கி இருந்துவிட்டு, பிரச்னைகள் எதுவும் சுத்தமாக இல்லை என்று உறுதி செய்து கொண்ட பின், சந்திரசேகர் பிள்ளை கோலாலம்பூர் போய்ச் சேர்ந்தார்.

பழையபடி ஆரோக்கியமாய் இருக்கிறார்!

அறுவைச் சிகிச்சை செய்த டாக்டர் வீணா கிரிநாத்தைச் சந்தித்தோம். நம்முடைய கேள்விகளுக்கு விளக்கமாகப் பதில்கள் சொன்னார்.

● இதற்கு முன்னால் இப்படிப்பட்ட லிவர் ட்ரான்ஸ்ப்ளான்ட் செய்ததில்லையா டாக்டர்?

செய்திருக்கிறோம். டிசம்பர் 95ல் முதல் ஆபரேஷன் செய்தோம். ஆனால், மூளைக்குள் இரத்தக் குழாய் வெடித்து நோயாளி இறந்து போனார். அப்புறமும் மூன்று நான்கு பேஷன்ட்டுகளுக்குச் செய்து பார்த்தோம். 4 நாள், 5 நாள் – அதிகபட்சம் ஒரு வாரத்துக்கு மேல் இவர்கள் உயிர் பிழைத்து இருக்கவில்லை. தில்லி, பம்பாய் போன்ற இடங்களில் செய்ததையும் இப்படியே தோல்வியில் தான் முடிந்தன. சந்திரசேகர் பிள்ளை விஷயத்தில் ஒரு பிரச்னையும் எழவில்லை. பதினைந்து நாள் இங்கே மருத்துவமனையிலேயே வைத்திருந்து, எல்லாமே சரியாக இருக்கின்றன என்று உறுதி செய்து கொண்ட பிறகே அவரை மலேஷியா செல்ல அனுமதித்தோம். இதுதான் முதல் முறையாக வெற்றியடைந்த லிவர் டிரான்ஸ் பிளான்ட்.

● சிங்கப்பூரிலிருந்து டாக்டர் டான் அவர்களை எதற்காகத் தருவித்தீர்கள்?

டாக்டர் டான் 500க்கு மேற்பட்ட ஆபரேஷன்கள் செய்த அநுபவசாலி. இரண்டாவது காரணம், எங்களுக்கே இருந்த

# ஆரம்பம் வேதனை –



ஒரு வகை அச்சம். 'இவ்வளவு கஷ்டப்பட்டு மாற்று அறுவை சிகிச்சை செய்கிறோம். நூறு சதவிகிதம் வெற்றியடையாமல், பேஷன்ட் ஒரு வாரத்துக்குள் இறந்து போய்விடுகிறாரே!' என்ற கவலை. நானும் வெளிநாடுகளில் உள்ள மருத்துவமனைகளில் இந்த மாதிரி லிவர் - மாற்று அறுவைச் சிகிச்சைகளைச் செய்திருக்கிறேன். டாக்டர் நீலமேகம், டாக்டர் டான் அவர்களிடமே பயிற்சி பெற்றவர். அதனால்தான் ஈகோ எதுவும் பார்க்காமல், டாக்டர் டான் அவர்களை அவசரமாக வரவழைத்தோம். முதல் நாள் இரவு தகவல் சொன்னோம். மறுநாள் காலை, நாங்கள் ஆக்சிடென்டில் பிரெயின் டெத் ஆன டோனரின் கல்லீரலை அகற்றி முடித் ததும், அதை சந்திரசேகர் பிள்ளைக்குப் பொருத்துகிற சமயத்தில், டாக்டர் டான் வந்து சேர்ந்து கொண்டார். எங்களுக்கு உற்சாகம் கூடிப் போயிற்று!

● எத்தனை வயதானவர்களுக்கும் இப்படி மாற்று லிவர் பொருத்த முடியுமா?

65 வயதுக்கு மேல் என்றால் செய்வதில்லை. டோனரின் வயதும் 60க்குள் இருந்தால் நல்லது. அதற்கு மேல் என்றால் லிவரின் திறன் அல்லது சக்தி பற்றிப் பரிசோதித்த பிறகே எடுத்துக் கொள்ள முடியும்.

● லிவர் வளருமா?

வளரும்.

● அப்படியானால் குழந்தைகளுக்கு வரும் லிவர் பிரச்னைகளுக்கு மாற்று லிவர் வைப்பது சாத்தியமா? எத்தனை வயதுக் குழந்தையாக இருக்க வேண்டும்?

வயது இதில் முக்கியமல்ல. குழந்தையின் உடல் எடைதான் முக்கியம். 20 கிலோ கிராம் எடைக்குள் இருந்தால், குழந்தையின் பெற்றோரிடமிருந்தே லிவரின் ஒரு பகுதியை எடுத்துக் குழந்தைக்கு வைத்து விடலாம். இதை live-related transplant என்பார்கள்.

● அப்போது உயிருடன் இருக்கும் ஆரோக்கியமான நபரிடமிருந்து கிட்னி எடுப்பது போலவே லிவரையும் எடுக்கலாமா?

ஆமாம்! right lobe, left lobe என்று கல்லீரலின் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. இதில் ஒன்றை எடுத்து, குழந்தைக்கு மாற்றி வைத்துப் பொருத்தி விடலாம். கிட்னி போலவே, இரண்டில் ஒன்று செயல்பட்டு, பெற்றோரில் யார் தானம் பண்ணுகிறார்களோ, அவர் உயிர் வாழ முடியும். இதை ஜப்பானில்தான் செய்து வந்தார்கள். இது மேஜர் சர்ஜரி. அங்கேயும் சட்டம் ஒன்று இயற்றப்பட்ட பிறகு இது போன்ற அறுவைச் சிகிச்சை நிறுத்தப்பட்டு விட்டது. அது போல் உயிருடன் உள்ள டோனரிடமிருந்து எடுத்துச் செய்வதில்லை என்ற முடிவு எடுக்கப்பட்டது. இறந்தவரின் உடலிலிருந்து எடுக்கப்படும் கேடவர் ட்ரான்ஸ்ப்ளான்ட் முறையே பரவலாக அமலுக்கு வந்துவிட்டது எனலாம்.

● லிவரின் செயல்கள் என்னென்ன?

உடலுக்குத் தேவையான புரதச்சத்தை இது உற்பத்தி செய்கிறது. திசுக்களை உருவாக்குகிறது. உண்ணும் உணவு செரிக்கவும், என்ஸைம் உற்பத்திக் கேந்திரமாகவும் இருப்பது கல்லீரல்தான். நம் உடம்பில் குளுகோஸ் அளவு எப்போதும் ஒரே சீராக இருக்க உதவுகிறது.

புரதங்கள் அமினோ அமிலங்களாகி, குடல் உறிஞ்சிகளால் அருந்தப்பட்டு, கல்லீரலை அடைகின்றன. இங்கு சில வகை அமினோ அமிலங்கள் குளுகோஸாக மாறுகின்றன. இந்த மாறுதலில் சிறு நீர் உப்பும் உண்டாகிறது. மேலும் கல்லீரலில் அல்புமின் என்ற இரத்தப் புரதம், அமினோ அமிலங்களிலிருந்து உருப் பெறுகிறது. கொழுப்புப் பொருளைக் கல்லீரல் ஒரு வகையில் பெற்று, இன்னொரு வகைக்கு மாற்றி, உடலில் கொழுப்புச் சேமிப்புப் பகுதிகளுக்கு அனுப்புகிறது.

# அருந்தது சாதனை!

சிறுநீரில் உள்ள சிறுநீர் உப்பு (யூரியா), சிறுநீர் அமிலம் (யூரிக் ஆஸிட்) ஆகியவற்றின் பெரும்பகுதி, கல்லீரலில்தான் உண்டாகின்றன.

● கிட்னி மாதிரி லிவரையும் பொருத்தப்பட்டவரின் உடல் ரிஜெக்ட் செய்யுமா?

செய்யும். முதல் மூன்று மாதங்களுக்குள் ரிஜெக்ட் செய்யாவிட்டால் ஏற்றுக் கொண்டதாக அர்த்தம். பிறகு ஓராண்டுக்குச் சிறு சிறு பிரச்னைகள் இருக்கும் என்றாலும் மருந்தால் குணப்படுத்தி விடலாம். ஓராண்டுக்குப் பிறகு பிரச்னையே இருக்காது. ●

**— எஸ்.வி.என்.**

அறுவை சிகிச்சை செய்யப்பட்ட சந்திரசேகர் பிள்ளையுடன் டாக்டர் வீணா கிரிநாத்தும் டாக்டர் குழுவும்...

# மலர்களே, மலர்களே!

கல்கி, தினமணி, தினமலர், அமுதசுரபி, கலைமகள், லேடீஸ் ஸ்பெஷல், விஜய பாரதம், குரோம்பேட்டைச் செய்திகள்- இத்தனை தீபாவளி மலர்களை முழுக்கப் புரட்டினேன்; முக்கால்வாசி படிச்சேன். (மொத்த மலர்களிலேயேும் முக்கால்வாசி விளம்பரங்கள்; கால்வாசிதான் மேட்டர்ஸ். SO, கால்வாசில முக்கால்வாசி படிச்சதாத் தான் எடுத்துக்கணும்.)

அதிகமான மலர்களில் எழுதியிருக்கற எழுத்தாளர் or கவிஞர் யாருன்னு கணக் கெடுத்துப் பார்த்தால் நாலஞ்சு பேர் வராங்க. ஆனா, அவங்க கூட ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளை பீட் பண்ண முடியலை. சுவாமி கள் கிட்டத்தட்ட எல்லா மலர்லேயும் தீபாவளி மகிமை (தீப+ஆவொளி= தீபாவளி) பத்தி எழுதி யிருக்கார்.

கல்கி மலர்ல பொரு ளாதார நிபுணர் ராஜா செல்லய்யாவோட கட்டுரை ரொம்ப உபயோகமான விஷயம். நம்ம பொருளாதாரத் திட்டங்களை அரசியல்வாதிகள் நிர்ணயிக்கறது னாலதான் முழுமையான வளர்ச்சி பார்க்க முடியலைங்கற Concept உடன் எனக்கு முழு ஒப்புதல்.

கதைகளைப் பொறுத்த வரைக் கும் வையவன், சுரேஷ் ஜி, ரா.கி. ரங்கராஜனோடதெல்லாம் டாப் கிளாஸ். பக்திக் கட்டுரைகள் கொஞ்சம் ஜாஸ்தி. மாடர்ன் பெயின்டிங்ஸ் ரொம்ப நல்லா வந்திருக்கு. மாமனார்-மாப்பிள்ளை ஜோக்ஸ் குறைஞ்சிருக்கறது ஒரு ஆறுதல். ஒரே ஒரு குறை- சுபி எழுதாதது!

தினமணி மலர்ல விளம்பரம் குறைவு. விஷயம் அதிகம். ஏ.என். சிவராமன் அவ ரோட 'எட்டு வயசுத் தலை தீபாவளி' அனுபவத்தை ஒரு தொடக்கமா வெச்சிட்டு, அற்புதமான கட்டுரை எழுதி யிருக்கார். ஒரு சமூகத்தோட பழக்க வழக் கங்களை, சட்ட திட்டங்களை-அதனோட புனிதம் கலையாம பிரமாதமான டாக்கு மென்டல் பொக்கிஷமா தந்திருக்கார்.

அந்தக் கட்டுரையோட விஷயத்தைவிட ஏ.என். எஸ்ஸோட மொழி எனக்கு ரொம்பப் பொறா மையா இருந்தது. அநேகமா இன்னும் பத்துப் பதினஞ்சு வருஷத்துல நானும் அது மாதிரி சுத்தமான லேங் வேஜ்ல (பார்த்தீங்களா?) எழு தக் கத்துப்பேன்னு நினைக்கறேன்.

சந்திரமௌளீசுவரன்ங்கற போலீஸ் ஆபீசரோட 'தீபாவளி நினைவு'க் கட்டு ரையை எல்லாரும் படிக்கணும். போலீஸ் காரங்களைக் கிண்டலடிக்கறதே நமக்கு வழக்கமாப் போச்சு. But, ஒரு சின்ஸிய ரான போலீஸ் ஆபீசர், தீபாவளி மாதிரி ஒரு பண்டிகை நாள்ல கூட எசகு பிசகான கேஸ்ல மாட்டிட்டு அவஸ் தைப் பட வேண்டியிருக்கு!

தினமணி மலர்ல கதைகள், கவிதைகள் அவ்வளவா இல்லை. கொஞ்சம்தான். அது கூட கட்டு ரைகள் அளவுக்கு standard போற லைங்கறது என்னோட தனிப்பட்ட அபிப்பிராயம். (சிறுவர் இலக்கிய மலரை இன்னும் படிக்கலை.)

Then தினமலர் விளம்பர மலர். Sorry to say this... விளம்பரங்களுக்கு நடுவுல



மேட்டர் போட்டிருக்காங்க. ஊர்ல இருக்கற ஒரு கோவிலை விடலை. 'பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட'ன்னுவாங்களே, அது தான். இந்த ஆரவாரத்துல பல பிரபல எழுத்தாளர்களோட கதைகள் கண்ணுல படாமலே போயிடுது. அப்படியும் விடாம பத்துப் பதினஞ்சு கதைகள் தேடிப் படிச்சுட்டேன். பிரபஞ்சன், நீல. பத்மனாபன் எல்லாரும் கூட சக்கையா ஏமாத்தியிருக்காங்க. சாரு நிவேதிதா எப்போ பதலக்கூர் ஸ்ரீனிவாசலுவுக்குக் களின் ஆனார்? unexpected ஷாக். நெஞ்சை உருக்கினது ஆர். சூடாமணியோட கதை. எப்பவுமே தரமா இவங்களால எப்படி எழுத முடியறதுங்கறது ரொம்ப ஆச்சர்யமான விஷயம்.

அமுதசுரபி மலர்ல பல நல்ல கட்டுரைகள் இருக்கு. அதைவிடப் பல நல்ல கவிதைகள் இருக்கு. ஆனா படிக்கவெக்கறாப்பல ப்ரஸன்ட் பண்ணலைங்கறது என் அபிப்பிராயம். பேப்பர் மசால் தோசை சைஸ் புஸ்தகத்துக்கு layout ரொம்ப முக்கியம் இல்லையா? கல்கி, தினமணி ரெண்டும் இந்த விஷயத்துல படு கவனமா இருந்திருக்காங்க.

விஜயபாரதம் மலர்ல சீரியஸான சில தேசியக் கட்டுரைகள் வந்திருக்கு. 'அவங்க' குருஜியோட அருள்மொழிகளையெல்லாம் கட்சிக் கண்ணோட்டத்தை நீக்கிட்டுப் பார்த்தாலும் சிலது ரசிக்கறாப்பல இருக்கு. வாஜ்பாயோட காலேஜ் மெட் ஷங்கர் புணதாம்பேகர் தன் நண்பர் பத்தி எழுதியிருக்கற நினைவுக் குறிப்புகள் ("அவர் ஒரு ஸ்கூல் ஹெட் மாஸ்டரா வருவார்னு நினைச்சேன்; பிரதமராவார்னு எதிர்பார்க்கலை.") விஜயபாரதம் மலருக்கு வெயிட் சேர்க்கற ஒரு விஷயம்.

இந்த வாரம் முழுக்க இப்படி குண்டு குண்டு மலர்களைக் கையில தூக்கிட்டே இருந்ததால கையைக் கீழ இறக்கவே முடியலை. ஒரு நல்ல பிஸியோதெரபிஸ்டைப் பார்க்கணும்.

தீபாவளிக்கு மறுநாள் மியூசிக் அகடமில ஒரு ம்யூஸிக் ப்ரோக்கிராம் போயிருந்தேன். தொழிலதிபர் என்ஃபீல்ட் விச்வநாதன்னு இருந்தாரே, அவரோட பிறந்த நாளையொட்டி கலா மந்திர் டிரஸ்ட்ல ஏற்பாடு பண்ணிருந்தாங்க...

இரண்டு மணி நேர ப்ரோக்ராம்ல ஃபஸ்ட் ஹாஃப் காரைக்குடி மணி தலைமையில் ஒரு ராக-தாள சங்கமம். Open-mind ஓட கேளுங்கன்னு அவரே சொல்லிட்டதால நானும் ப்ளே கிரவுண்ட் மனசோட கேட்டேன்... சாக்ஸோட கர்வமும் புல்லாங்குழலோட நளினமும் ஒட்டமாட்டேங்குதுன்றது என் அபிப்பிராயம். இருந்தாலும் ரொம்ப நூதனமாயிருந்ததால எல்லோரும் விரும்பி ரசிச்சாங்க. ஏராளமான உழைப்பு; அதனாலே perfection இந்த நிகழ்ச்சியிலே...

அடுத்த ஹாஃப்ல, ஃபாஷன் பரேட்ல, ஜீன்ஸுக்கப்புறம் பாவாடை தாவணி மாதிரி முத்துஸ்வாமி தீக்ஷிதர் கீர்த்தனைகள்! இது எப்படி எடுபடும்னு ஒரே கியூரியாஸிடி! ஆனா ராஜ கம்பீரமான சங்கீத யாத்திரை அழைச்சுட்டுப் போனாங்க நெய்வேலி சந்தானகோபாலனும் விஜய் சிவாவும்! கல்லிடைக்குறிச்சியிலே ஆரம்பிச்சு திருப்பதி வரைக்கும்- பல ஊர் தெய்வங்கள் பத்தி தீக்ஷிதர் இயற்றிய கீர்த்தனைகளை மாறி மாறிப் பாடினாங்க. ரொம்ப தனித் தன்மை வாய்ந்த இரண்டு கலைஞர்கள் இப்படிப் பக்கத்து பக்கத்துல உட்கார்ந்து மாறி, மாறிப் பாடி- (அதுவும் வெவ்வேற சுருதியில) கேட்கறவங்களைக் கட்டிப் போடறது இலேசுப்பட்ட விஷயமில்லை! ஒவ்வொரு பாட்டுக்கும் சின்ன அறிமுகம் வேற. நிறைஞ்சிருந்த அரங்கு கலகலத்துப் போச்சு!

**ஜோக் மாதிரி:**

டாக்டர் மாத்ருபூதம் மன நல மருத்துவ மனைல ரொம்ப வருஷமா வேலை பார்க்கறவர். அவரைப் பார்க்க வரவங்களெல்லாம் தவறாம கேக்கற கேள்வி: "எத்தனை வருஷமா சார் இங்க இருக்கீங்க?"

"முப்பது வருஷமா."

"முப்பது வருஷமாவா மென்டல் ஆஸ்பத்திரில இருக்கீங்க?"ன்னு வாய் பிளந்து கேக்கறவங்களுக்கு மாத்ருபூதம் சொல்ற பதில்:

"யெஸ் But, சாயங்காலம் ஆனா வீட்டுக்கு அனுப்பிடுவாங்க!"

— சுமி

## சுமி சூப்பர் மார்க்கெட்!

**கவிஞர்கள் இனி இராவணனைக் கொடியவனாகக் காட்ட வேண்டாம் என்று கேட்டுக் கொண்டிருக்கிறார் கலைஞர். 'ஏதோ சில தவறுகளைச் செய்து விட்டான் என்பதற்காக இராவணனைப் பழிப்பது, தன்னையே பழிப்பது போல' என்று அறிவித்திருக்கிறார். இத்தோடு விட்டுவிட்டால் எப்படி? நம் கற்பனை, இதோ:**

# இராவணன் ஆவாரா

**கி. வீரமணி காட்டமான அறிக்கை:**

இராவணனுக்கு இணையாகத் தம்மை நினைத்துக் கொண்டு கலைஞர் பேசியிருப்பது, சமூகநீதி காத்த வீராங்கனை, புரட்சித் தலைவி அவர்களை வேண்டுமென்றே சீண்டிவிட்டுச் சிண்டு முடிகிற மாதிரி இருக்கிறது. அ.இ.அ.தி.மு.க. அலுவலகத்தில் நான் சமீபத்தில் திறந்து வைத்த புகைப்படக் காட்சியில் கலைஞரின் தலை தெரிகிற மாதிரி ஒரு படம் கூட இல்லை. அப்படி ஒரு தலைகூட இல்லாத கலைஞர், பத்துத் தலைகள் கொண்ட இராவணனாகத் தம்மை கற்பனை செய்து கொண்டு, ஏதோ தாம்தான் இராவணன் போலவும், தமக்குத்தான் பத்துத் தலைகள் உள்ளன என்பது போலவும் பேசியிருப்பதை வன்மையாகக் கண்டிக்கிறோம். நாங்கள் கேட்டுக் கொள்ளுவது எல்லாம், இராவணனைத் தாழ்த்தித் தம்மோடு இணையாகப் பேசுவதை, கலைஞர் இனியாவது நிறுத்திக் கொள்ள வேண்டும். தந்தை பெரியாரோ, அவரது நேரடி வாரிசான அண்ணாவோ கூட இராவணனுக்கு இணையாகத் தங்களைப் பேசவில்லை என்பதை கலைஞர் நினைவில் வைக்க வேண்டும்!

**'நமது எம்.ஜி.ஆரில்' புரட்சித் தலைவி அறிக்கை:**

நெல் கொள்முதல் செய்தால் அதை மூடி வைக்க தார்பாலின் வாங்கத் தெரியாதவர், கலைஞர். அதைக்கூட நாம்தான் அறிக்கை மூலம் சுட்டிக் காட்ட வேண்டியிருக்கிறது. அப்படி இருக்கையில், எந்தத் துணிச்சலில் தம்மை இராவணனோடு இணைத்துப் பேசினார்? இராவணன் மாதிரி வீணை வாசிக்கத் தெரியுமா இவருக்கு? தெரிஞ்சதெல்லாம் அவதூறு லாவணிதானே! பெண்களைச் சிறையில் அடைத்துச் சந்தோஷப்படுவதில் இவர் இராவணனுக்குச் சமமானவர்தான். அதற்காக மட்டுமே தம்மை இராவணன் என்று இவர் சொல்லிக் கொள்ளுவதை நான் கடுமையாகக் கண்டிக்கிறேன். இராவணன் காலத்தில் குடியரசுத் தலைவர் இருக்கவில்லை. அரசியல் சட்டம் 356ஆவது பிரிவும் இல்லை. இருந்திருந்தால் இலங்கையில் அதை அமல்படுத்த சீதை போராட்டமே நடத்தியிருப்பாள் என்பதைக் கலைஞரும், வாஜ்பாயியும், அத்வானியும் அறிய வேண்டும்!

**கவிஞர் வைரமுத்துவிடம் பேட்டி:**

*நிருபர்:* நீங்கள் கலைஞரின் இராவணன் பற்றிய பேச்சு கேட்டீர்களா?

**வைரமுத்து:** கலைஞரின் பேச்சைக் கேட்டு ராஜபூரிப்பு அடைந்தேன். ராஜவியர்வை சிந்தி, ராப்பகலாய் நாட்டுக்கு உழைக்கும் கலைஞரை இராவணனுக்குச் சமமாகப் பேசுவதில் என்ன தவறு காண முடியும்? இராவணனின் ராஜகம்பீரம் அவரிடம் இல்லையா? இராவணனின் ராஜ சாகசம் இல்லையா அவரிடம்? என்ன இல்லை கலைஞரிடம்?

*நிருபர்:* அப்படியானால், கலைஞரும் இராவணனும் ஒன்றே என்கிறீர்களா?

**வைரமுத்து:** இராவண சரிதம் எழுதும் போது அதை நினைவு வைத்துக் கொள்ளு



வேன். கலைஞரை ஒரு தராசிலும், இராவணனை ஒரு தராசிலும் வைத்து எடை போட்டு எழுதும் ராஜகாவியமாக அது இருக்கும். அதைப் படிக்கிற ஒவ்வொருவரும் ராஜரசிகராக இருப்பார்கள்!

# கலைஞர்?

**அண்ணன் ஆர்.எம்.வீ. அவர்கள் அறிக்கை:**

கலைஞர் அவர்களை இராமன் என்று சொல்ல முடியாவிட்டாலும், இராவணன் என்றாவது சொல்ல வேண்டியது காலத்தின் கட்டாயம். அடுத்த ஆண்டு முதல் ஆழ்வார்கள் ஆராய்ச்சி மையத்தின் ஒரு பகுதியாக, அசுரர்கள் ஆராய்ச்சி மையம் தொடங்க வேண்டும் என்று என் இனிய நண்பர் ஜகத்ரட்சகனைக் கேட்டுக் கொள்ளுவேன். அதில் முதல் கூட்டத்திலேயே கலைஞர் கலந்து கொண்டு, இராமானுஜர் விருது பெற்றது போல, இராவணன் விருதும் பெற்றுக் கொண்டால் எனக்கும், உங்களுக்கும், ஏன்-தமிழ்ச் சாதிக்கும், அதற்கும் மேலாக இராவணனுக்கும் பெருமை!

**இந்து முன்னணித் தலைவர் இராம கோபாலன் அறிக்கை:**

இராமன் ஆண்டால் என்ன, இராவணன் ஆண்டால் என்ன என்று சிலர் கேட்பார்கள். கலைஞரோ, தமது ஆட்சி இராவணன் ஆட்சிதான் என்று தம் வாயாலேயே சொல்லிவிட்டார்! இதற்கு மேலும் பொறுத்துக் கொண்டு சும்மா இருக்கலாமா? அடுத்த விநாயக சதுர்த்தி ஊர்வலத்துக்கு முன்னால், அறுபது அடி இராமர் பட்டாபிஷேகப் படம் 300 இடங்களில் இருந்து ஊர்வலமாக எடுத்துக் கொண்டு வந்து மெரினாவில் கூடி, வங்கக் கடலில் கரைப்போம். இதில், கொழுக்கட்டை கொடுக்க மாட்டோம் என்பதால் கலைஞர் கலந்து கொள்ளமாட்டார். ஆனால் ஊர்வலத்துக்கு அனுமதி மறுக்க மாட்டார் என்று நம்புகிறோம்!

கற்பனை: **சாருகேசி**



'சிநேக'முடன் டாட்டா சொல்லி ஆரம்பிக்கப்பட்ட வைபவம் அது. இரண்டு வருடங்களில் அடுத்தடுத்துப் பல நிதி நிறுவனங்கள் இழுத்து மூடப்பட்டன. ஆனாலும் புதிது புதிதாகப் பல நிறுவனங்கள் முளைப்பதும் அதிக வட்டிக் கனவுகளில் மக்கள் தம் ஆயுள் முழுக்கச் சேர்த்த சொத்தை முடக்குவதும் பின் ஏமாந்து புலம்புவதும் பூங்காவில் கூட்டம் கூட்டி துக்கத்தைப் பகிர்ந்து கொள்வதும் மீண்டும் மீண்டும் நடக்கிற நிகழ்ச்சிகள்!

• வெங்கடேசுவரன் (குடையுடன்)

நேற்று பாலு ஜுவல்லர்ஸ்; இன்று அனுபவ்.

கவர்ச்சிகரமான தொலைக்காட்சி விளம்பரங்கள் மூலம் தமது தேக்கு மரப்பண்ணை, பழத் தோட்டம், ரிஸார்ட்ஸ் திட்டங்களுக்குப் பல கோடி முதலீடு திரட்டிய அனுபவ், தம் வாடிக்கையாளர்களுக்கு உரிய நேரத்தில் பணம் திருப்பித் தர இயலாமல் கொஞ்ச நாளாகவே திணறிக் கொண்டிருப்பதாகச் செய்திகள் வந்தன. உச்சக்கட்டமாகக் கடந்த புதன்கிழமை (21ம் தேதி) பணம் திரும்பப் பெற இயலாத வாடிக்கையாளர்கள் தி.நகர் சோமசுந்தரம் தெருவிலுள்ள அனுபவ் தலைமை அலுவலகத்தினுள் வாக்குவாதத்தில் இறங்கினார்கள். பதில் சொல்ல முடியாத ஊழியர்கள் போட்டது போட்டபடி வெளியே ஓட, கோபம் உச்சிக்கு ஏறிய வாடிக்கையாளர்கள் அலுவலகத்தைச் சூறையாடி விட்டார்கள்.

கம்ப்யூட்டர்கள், சுழல் நாற்காலிகள் தொடங்கி, ஸ்டேப்ளர் (ஆம்!) வரை கையில் கிடைத்ததையெல்லாம் எடுத்துப் போனது ஒரு கூட்டம். வழக்கமான கவிழ்ப்பு நடவடிக்கைகள் ஒரு புறம் அரங்கேற, நல்லவேளையாக போலீஸ் உடனே வந்ததால் கட்டடம் அதிக சேதமின்றிக் காப்பாற்றப்பட்டது. அனுபவ் நடேசன் அவ்விடத்தில் இல்லை!

மறுநாள் (வியாழன்) காலை பத்து மணிக்குக் கவலையும் அழுகையும் சுமந்த கண்களுடன் 'அனுபவ்' வாசலில் தூறலுக்குக் குடை பிடித்துக் காத்திருந்த கூட்டம், குமுறிக் கொண்டிருந்தது.

"போங்கப்பா. இங்க நிக்காதிங்க. போய் போலீஸ் ஸ்டேஷன்ல புகார் கொடுங்க!" என்று ஒரே செய்தியை வேறு வேறு சுருதிகளில் ஒலிபரப்பிக் கொண்டிருந்தார்கள் போலீஸ்காரர்கள்.

"அந்த ஆளை (நடேசன்) எனக்குப் பன்னெண்டு வருஷத்துக்கு மேலா தெரியும் சார். ரொம்ப நல்ல மனுஷன். கும்பகோணத்துல ஒரு சாதாரண ஓட்டல்ல பக்கத்துல உட்கார்ந்து என்கூட இட்லி சாப்பிட்டிருக்காரு. பணம் நிறைய சம்பாதிச்சப்புறமும் ஆள் மாறலை. அதே பணிவு, அன்பு, நட்போடத்தான் பழகுவார். கஸ்டமருங்



# அனுபவம் பல விதம்!

களைக் குடும்ப மெம்பர் மாதிரிதான் நடத்துவார். இவரு போய் இப்படிச் செஞ்சிட்டாரே!''

பரிதவித்துப் பேசினார் ஸ்ரீநிவாஸ் என்கிற இளைஞர். 'அனுபவி'ன் தேக்குப் பண்ணைத் திட்டத்தில் சில ஆயிரங்கள் போட்டிருப்பவர்.

''ஒண்ணரை லட்சம்... என் மாமியார் காசு. நான்தான் வற்புறுத்தி இங்க போட வெச்சேன். ஒரு மாசம் முன்னால் அனுபவ் மூடப் போறாங்கன்னு 'ரூமர்' வந்தப்ப, பதறிப் போய் விசாரிச்சேன். 'ஒரே மாசத்துல அஞ்சு கோடி புரட்டிடுவேன்; யாரையும் ஏமாத்த மாட்டேன்'னு அந்தாளு பேப்பர்ல அறிக்கை விட்டாரு. அதை நம்பினேன் பாருங்க, என் புத்தியைச் சொல்லணும்!'' என்றார் பார்த்தசாரதி என்கிற ஒரு தனியார் நிறுவன ஊழியர்.

பேச்சே வராமல் கண்ணீர் மல்க அவரருகே நின்று தேம்பிக் கொண்டிருந்தார் திருமதி பார்த்தசாரதி.

''இது மாதிரி நிறுவனங்கள்ல பணம் போடறவங்க எல்லாருமே அநேகமா ரிடையரான பென்ஷனர்ஸ் தாங்க. பேங்க் வட்டி அட்ராக்டிவா இல்லாததாலதான் இங்க வராங்க. இது ஒண்ணும் பெரிய விஷயமில்லை. தூர்தர்ஷன் சரியா இருந்திருந்தா தனியார் டீவிக்கள் வந்திருக்குமா? அதே மாதிரிதான். பணம் போடறதும் ட்ரையல் அண்ட் எர்ரர் சித்தாந்தப்படிதான். ப்ச்!'' என்றார் பார்த்தசாரதி.

வரிசையாகப் பல நிதி நிறுவனங்கள் மூடப்பட்ட பிறகும் எப்படித் துணிந்து இது போல் தனியார் நிறுவனங்களில் பணம் போடுகிறார்கள்?

''நம்பிக்கைதாங்க. பத்து வருஷமா இருக்குது அனுபவ். இவங்களும் ஏமாத்தக் கூடியவங்கன்னு நினைச்சோமா? நடேசனை உங்களுக்குத் தெரியுமா? இவரா இப்படி செய்யக் கூடியவர்னு ஆச்சர்யப்படுவீங்க. அத்தனை நல்ல மனுஷனா நடந்துப்பாரு. என் விதி. இங்க நாப்பதாயிரம் போச்சு!'' - விரக்தியுடன் பேசினார் வெங்கடேசுவரன் என்கிற ஒரு முதியவர்.

பத்தாயிரம், முப்பதாயிரம், நாற்பதாயிரம், ஒரு லட்சம், ஒன்றரை லட்சம் என்று நாம் சந்தித்த பலரும் தம் பெரும் பகுதி வருமானத்தை 'அனுபவ்'வில் முடக்கி இருந்ததைக் காணச் சற்று சோகமாகத்தான் இருந்தது.

இதில் ஆச்சர்யமான விஷயம் என்னவென்றால், மற்றவர்களைப் போல நடேசன் ஏமாற்றக் கூடியவர் அல்லர் என்றே பெரும்பாலானோர் இன்ன



• திருமதி பார்த்தசாரதி: பேச்சே எழவில்லை

• பார்த்தசாரதி

## மண் குடிசையிலிருந்து ஒரு மருத்துவமனை!



**ப**தினாறு வயதில் சுபாஷிணி தமது கணவரை இழந்தார். அவர் வசித்த குக்கிராமத்தில் வைத்திய வசதி இல்லை. 45 கி.மீ பயணித்து கல்கத்தா சென்றால்தான் மருத்துவ உதவி கிட்டும் என்ற நிலையில் கணவர் இறந்து போனார்.

சுபாஷிணி தமது இரு சிறு குழந்தைகளையும் அனாதை ஆசிரமத்தில் சேர்த்து விட்டு ஜீவனத்துக்காகக் காய்கறி வியாபாரம் செய்யத் தொடங்கினார்.

தன் கணவருக்கு நேர்ந்த கதி கிராமத்தில் வேறு யாருக்கும் நேரக் கூடாது என்ற நோக்கில் ஒரு மருத்துவமனை உருவாக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. இதற்காக சுபாஷிணி கடுமையாக உழைத்து சிக்கனம் பார்த்து சேமித்தார். பல ஆண்டுகளுக்குப் பிறகு நிலம் வாங்கினார்.

இதற்குள் மகன் கல்லூரியில் சேர்ந்திருந்தான். தன் பேராசிரியர்களிடம் பேசி டாக்டர்களை கிராமத்துக்கு அழைத்து வந்தான். தங்களுக்குக் கிடைக்கும் சாம்பிள் மருந்துகளுடன் இலவச சிகிச்சை வழங்க அவர்கள் கிராமத்துக்கு வந்தனர். சுபாஷிணி வீட்டிலேயே முதலில் மருத்துவமனை இயங்க ஆரம்பித்தது.

படிப்படியாக பலருக்கும் இதில் ஈடுபாடு ஏற்பட்டு, இன்று Humanity Hospital மண் குடிசையிலிருந்து கான்கிரீட் கட்டடத்துக்கு மாறி விட்டது!

''எல்லாம் சரிதான், ஆனால் என்னுடைய படத்தை எதற்குப் பத்திரிகைகளில் போடுறொர்கள் என்பதுதான் புரியவில்லை'' என்கிறார் சுபாஷிணி!

— கலாமூர்த்தி

மும் நம்புவது!

**'அ**னுபவ்', தமது வாடிக்கையாளர்களுடன் நல்லதொரு உறவை மிகக் கவனமாக வளர்த்து வந்திருப்பது பலருடன் பேசியதில் தெரிந்தது.

ஆனால், ஒரு தனியார் தொலைக் காட்சியில் ஒரு சாமியாரின் நிகழ்ச்சியை ஸ்பான்ஸர் செய்ய ஆரம்பித்த பிறகு நடேசனை சந்திப்பதே கஷ்டமாகி விட்டது என்றார் ஸ்ரீராம் என்கிற டெபாஸிட்தாரர்.

''அவர் பழக்கவழக்கம், ப்ரெண்ட்ஸ், போக்குவரத்து எல்லாமே மாறிடுச்சிங்க. அப்பவே சந்தேகப்பட்டேன். பச்! இப்ப நினைச்சி என்ன பிரயோஜனம்?''

**ப**லரும் எதிர்பாராமல் அனுபவ் மூடப்பட்டது ஏன்?

சில மாதங்களுக்கு முன்பு SEBI ஓர் அறிக்கை வெளியிட்டது. அதில், 'அனுபவ், பணம் முதலீடு செய்ய நம்பகமான நிறுவனம் அல்ல' என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

அந்த அறிக்கை வெளியானதிலிருந்து புதிய முதலீட்டாளர்கள் வரத்து முற்றிலுமாக நின்று விட்டது. முதலீடுகள் இல்லாததால் ரொட்டேஷன் சிரமமாகிவிட, பண்ணைகள் பராமரிப்புக்கே கையிருப்பு போதுமானதாக இல்லாத நிலை உருவாகி விட்டதாகச் சொல்கிறார்கள்.

இந் நிலையில் போட்ட பணத்தைத் திரும்பக் கேட்ட வாடிக்கையாளர்களுக்குத் தரப்பட்ட போஸ்ட் - டேட்டட் செக்குகள் யாவும் 'பவுன்ஸ்' ஆகிவிட, நியாயம் கேட்க வந்தவர்கள் சூடேறிப் போனார்கள்.

தகுந்த பதில் (அதாவது பணம்) கிடைக்காததால் ரகளை, அடிதடி, கம்ப்யூட்டர் களவு!

நடேசன், பெங்களூருக்கு ஓடி விட்டார், ஐதராபாத்தில் ஒளிந்திருக்கிறார், ஓர் அரசியல் கட்சித் தலைவரின் ஆதரவுடன் மொரீஷியஸ்(?) போய் விட்டார் என்று ஆளாளுக்கு ஹேஷ்யங்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள், 'அனுபவ்' அலுவலகத்துக்கு எதிரிலுள்ள டீக்கடையில். (வெள்ளிக்கிழமை அவர், குற்றப்பிரிவு போலீசில் சரண்டராகி விட்டார்.)

டீக்கடைக்காரருக்கு இந்த இரண்டு நாட்களில் நல்ல வியாபாரம்.

— ஔரங்கசீப்

படங்கள்: ஸ்ரீஹரி

# கவலை தரும் சிலைத் திறப்பு!



குல்பர்காவில் வல்லபபாய் படேலுக்கு ஒரு சிலை வடித்திருக்கிறார்கள். வரவிருக்கும் அவரது பிறந்த நாளில் (அக். 31) அது திறந்து வைக்கப்பட்ட உள்ளது. வாழ்த்துவோம் என்கிறீர்களா? அவ்வளவு சுலபத்தில் முடியாது!

சிலைத் திறப்பின் போதே கலவர சக்திகளுக்கும் திறப்பு விழா நடந்துவிடுமோ என்கிற பயம் அந்தப் பகுதி மக்களை ஆட்டிப் படைக்கிறது. சொல்லப் போனால் செப்டம்பர் பதினேழாம் தேதியே சிலைத் திறப்புக்கு நாள் குறித்தாகிவிட்டது. அத்வானி திறந்து வைக்க, கர்நாடக முதல்வர் படேல் விழாவுக்குத் தலைமையேற் பதாக அறிவிப்பு. ஆனால் கடைசி நிமிடத்தில் 'சில தவிர்க்க முடியாத காரணங்களினால்' முதலமைச்சர் சிலைத் திறப்பை தள்ளி வைத்து விட்டார்.

அது ஏன் முதலில் செப்டம்பர் பதினேழாம் தேதியைத் தேர்ந்தெடுத்தார்கள்? இந்தக் கேள்விக்கான பதிலில் புதைந்த சரித்திரம், புகையும் பிரச்னை இரண்டுமே அடங்கியுள்ளன.

1947-ல் நம் நாடு சுதந்தரம் பெற்றபோது, அதில் இணைய சில (மகாராஜாக்களால் ஆளப்பட்டு வந்த) பகுதிகள் மறுத்தன. அப்படி மறுத்த அரசர்களில் ஒருவர் ஹைதராபாத் நிஜாம். ஆந்திராவில் பெரும் பகுதி மட்டுமல்ல; குல்பர்கா, ரெய்ச்சூர், பிடார், பெல்லாரி, கொப்பால் ஆகிய (தற்போதைய கர்நாடகாவில் இருக்கும்) பகுதிகளும் அப்போது அந்த நிஜாமின் ஆளுகையில். இதன் விளைவாக எழுந்த கலவரங்களில் நிஜாமின் ஆட்கள் இந்துக்களில் பலரைப் படுகொலை செய்தனர். இந்திய ராணுவம் அந்தப் பகுதிகளில் நுழைந்து கைப்பற்றிய போது பல முஸ்லிம்கள் படுகொலை செய்யப்பட்டனர். செப்டம்பர் பதினேழு அன்றுதான் ஹைதராபாத் நிஜாமின் பகுதி இந்தியாவில் இணைக்கப்பட்டது. இதை ''விடுதலை நாளாக''க் கொண்டாட வேண்டுமென்று சில வருடங்களுக்கு முன் வீரபத்ர சிம்ப்பி என்ற கன்னட இலக்கியவாதி வற்புறுத்த, சில வருடங்களாக அந்த நாளை அப்படியே கொண்டாடுகிறார்கள். போதாக்குறைக்கு இந்த ஆண்டிலிருந்து, அந்த நாளை அங்கு அரசு விடுமுறையாக வேறு அறிவித்து விட்டார்கள்!

''வேறு சில பகுதிகளும் இந்தியாவில் இணைய முதலில் மறுப்புக் காட்டியிருக்க, இங்கு மட்டும் 'விடுதலை நாள்' என்றெல்லாம் கொண்டாட என்ன காரணம்? நிஜாம் மன்னர் ஒரு முஸ்லிம் என்பதால்தானே?'' என்று குமைகிறார்கள் சில முஸ்லிம் மக்கள்.

வல்லபபாய் படேல் சிலையமைப்புக் குழுவில் அந்தப் பகுதி எம்.எல்.ஏ., எம்.பி., போன்றோரும் உண்டு என்றாலும், பி.ஜே.பியைச் சேர்ந்தவர்களும் கணிசமாக உண்டு.

இந்தச் சூழ்நிலையில் இந்துத்வா ஆர்வம் கொண்ட அத்வானி அச்சிலையைத் திறந்து வைத்தால் அங்குள்ள முஸ்லிம்கள் எதிர்ப்புத் தெரிவித்து, அதன் மூலம் மதக்கலவரம் ஏற்பட்டு விடுமோ என்கிற பயம்தான்!

— ஜி.எஸ்.எஸ்.

படம் - நன்றி : 'ப்ரண்ட் லைன்'

# ஸ்பரிசம் - சில விஷயம்!



எந்தத் தாய்தான் தன் குழந்தையை இறுக அணைத்துத் தன் அன்பைக் காட்டுவதில்லை? அறிந்தோ அறியாமலோ செய்யும் இந்த அணைப்பில் எவ்வளவு நன்மை இருக்கிறது என்பதை இப்போது கண்டு பிடித்திருக்கிறார்கள், ஆராய்ச்சியாளர்கள். குழந்தையின் மூளை வளர்ச்சி அதிகரிப்பதோடு ஞாபக சக்தியும் உண்டாகத் தாயின் அணைப்பு மிகவும் துணைபுரிகிறது என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.

வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு ஒரே விதமாக ஆகாரம் கொடுத்தாலும் தாயினால் மெல்ல மெல்லத் தடவிவிடப்பட்ட குழந்தைகளின் எடை அதிகரிப்பதாகவும் மூளை வளர்ச்சியடைவதாகவும் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

பொதுவாக ஆராய்ச்சிக்குப் பயன்படுத்துவது எலிகளைத்தானே. ஒரேவிதமாக உணவு அளிக்கப்பட்ட 10 எலிகளைத் தாயிடமிருந்து பிரித்தும் 10 எலிகளை தாயுடனும் 45 நிமிடங்கள் இருக்கச் செய்தார்கள். வளர்ச்சிக்கான ஹார்மோன்களின் சக்தி தாயைப் பிரிந்த எலிகளுக்குக் குறைந்து இருந்ததாம்!

தாயின் அரவணைப்பில் தூங்கும் குழந்தை, அது இல்லாததால் விழிப்பு ஏற்பட்டு அழுவதையும் காண்கிறோம். தூக்கத்திற்கும், எச்சரிக்கையாக இருக்கவும் சுறுசுறுப்பு உண்டாவதற்கும் அந்த அணைப்பு தேவைப்படுகிறது. அந்த ஸ்பரிசத்தின் மூலம் குழந்தையின் பசியை மட்டுமல்ல; அதன் வயிற்று வலியைக் கூடத் தாய் உணர்கிறாள். குழந்தையின் தேவைகளை அறியும் சக்தி ஸ்பரிசத்திற்கு உண்டு!

தாயிடமிருந்து பிரிந்த குழந்தை மீண்டும் அந்தத் தாயின் அணைப்பின் இதத்திற்காகத்தான் அழுகிறது. பசி அதற்கு இரண்டாம் பட்சம்தான். அணைப்பில் குழந்தை பசியையும் மறந்து விடுகிறது. அத்துடன் தாயிடமிருந்து வரும் ஒருவித மணத்தையும் அக்குழந்தை சுவாசித்து மகிழ்கிறது. தாய் உடுத்தியிருக்கும் ஆடையிலிருந்து வரும் மணத்தையே குழந்தை விரும்பி சுவாசிக்கிறது. தாய் உடுத்தியிருந்த துணியை குழந்தையின் அருகில் போட்டிருந்தால் குழந்தை நிம்மதியாக உறங்குவதாகவும் அத்துணியை எடுத்து விட்ட மறுவினாடியே குழந்தை அழ ஆரம்பித்ததையும் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

தூங்கும் ஒரு குழந்தைக்குப் பக்கத்தில் படுத்திருக்கும் தாயை எழுப்பிவிட்டு அந்த இடத்தில் நீங்கள் படுத்தால் குழந்தை எழுந்து விடுகிறது. அவ்வாறே குழந்தையிடமிருந்து வீசும் ஒருவித மணத்தில்தான் தாயும் மெய் மறக்கிறாள். தாயும் குழந்தையும் அடையாளம் கண்டு கொள்ள இந்த 'மணமே' பல சமயங்களில் உதவியிருக்கிறது என்கிறார்கள்.

— புதுப்பேட்டை இராமலிங்கம்

போட்டிக் கதை - 9



# இதுவும் ஒரு இந்திய மகுடம்

**ஈஸ்வர்**

**ரா**தாவுக்கு மனசு மிகவும் சந்தோஷமாக இருந்தது. இந்த தேசம் யாரையும் மறக்கவில்லை. தன்னுடைய சுதந்திரத்திற்காகப் பாடுபட்ட எந்தத் தனி மனிதனையும் எந்தக் குடும்பத்தையும் இந்த நாடு மறந்து விடவில்லை. இந்த தொண்ணூறு கோடி மக்கள் கூட்டத்தில், அவர்களைத் தேடிப் பிடித்து, கௌரவிக்கிறது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அவர்கள் பட்ட கஷ்டங்களுக்கும், அவர்கள் மேல் ரணமாய் விழுந்த அந்நிய அடிகளுக்கும், இப்பொழுது ஒத்தடம் கொடுத்து வருகிறது.

ராதா நேரிடையாகவே இதைப் பார்க்கிறாள். சுதந்தரப் போராட்டத் தியாகிகளுக்கு அவள் வங்கி மூலமாக, அவள் அதிகாரியாகப் பொறுப்பேற்றிருக்கும் இந்த அரசுத்துறை கணக்குப் பிரிவு மூலமாகத்தான் ஒவ்வொரு மாதமும் கடைசி தினத்தன்று இந்த பென்ஷன் பணம், பட்டுவாடா செய்யப் படுகிறது. அந்தத் தியாகிகளின், அவர்கள் குடும்ப பென்ஷன்தாரர்களின் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது.

இதற்காக வங்கிக்கு வரும் ஒவ்வொரு அரசாங்க உத்தரவையும் அவள்தான் நேரிடையாகப் பெற்று, படித்து, உத்தரவுக்குரிய பென்ஷன்தாரர்களை வங்கிக்கு வரவழைத்து முறையாக அவர்களுக்கு சேமிப்புக் கணக்குகளைத் துவக்கி, இந்தப் பென்ஷன் திட்டப் பணத்தை சரி பார்த்து, அவர்கள் கணக்கில் உடனடியாக வரவு வைத்து, அக்குடும்பங்களில் மகிழ்ச்சி பொங்க, தன் கடமையைச் செய்த திருப்தியில் இருக்கிறாள்.

1980-ம், 1982-ம் வருடம் தொடங்கியே பலருக்கு மாதம் ரூ 300, ரூ 500, ரூ 1000, ரூ 1500 என்று பென்ஷன் படிப்படியாக அதிகரித்து, இன்று ரூபாய் மூவாயிரம் வரை வந்து நிற்கிறது. பல சுதந்தர வீரப் போராட்டத் தியாகிகளுக்கு, ஒண்ணே கால் லட்சம், ஒன்றரை லட்சம் என்று பழைய பாக்கித் தொகையாக அரியர்சும் வந்திருக்கிறது.

**ரா**தாவுக்கு மனம் மகிழ்ச்சியில் நிரம்பி வழிய வேறொரு காரணமும் இருந்தது. இன்றைக்கு அவள் பட்டுவாடா செய்யப் போவது ஐம்பதாவது பென்ஷன்தாரருக்கு. அவளுடைய வங்கியைப் பொறுத்தவரை இவர் ஒரு பொன்-விழா நாயகர் - ஓ, நாயகர் அல்ல, நாயகி.

இந்தப் பொன்விழா நாயகிக்கு வயது 75க்கு மேல். நிஜமாகவே அவளுடைய கணவர், நேதாஜி சுபாஷ் சந்திரபோஸின், இந்திய தேசிய ராணுவப் படையில், ராணுவ வீரராகவே இருந்தவர். இந்த தேச சேவையில் உயிர் துறந்த எண்ணற்ற வீரர்களில் அவரும் ஒருவர். வந்தே மாதரம் சொல்லியே கடைசி மூச்சு விட்டவர். இதற்கான ஆதாரபூர்வமான சான்றுகளையெல்லாம் ஏற்கெனவே, ராதா படித்து அறிந்திருந்தாள். பெண்கள் வாரப் பத்திரிகை ஒன்று இது குறித்து விவரமாக வெளியிட்டிருந்தது.

ஒரு லட்சிய வெறியுடன் தேச சேவைக்காக, தன் இளம் வயது சுகங்களைத் துறந்த அந்தக் கடமை வீரர் இராமலிங்கத்தின் குடும்பம், அவர் தியாகத்திற்குப் பிறகு, ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாகப் படாத பாடு பட்டிருக்கிறது. இராமலிங்கத்தின் மனைவி அன்னபூரணி, ஒரு பெண் குழந்தையைப் பெற்ற தருவாயில், கணவனை, தேச சேவைக்காகக் காவு கொடுத்தவள். அந்தப் பெண்ணின் மூலமாக, காலப் போக்கில், இவ்வுலகில் ஜனித்துவிட்ட, இன்னும் இரண்டு பெண்களுக்குப் பாட்டியாக



இன்று நிற்கிறாள்.

விதியின் கோர விளையாட்டாக அன்னபூரணிக்கு இன்னொரு சோதனை. ஒருநாள், ஏதோ குடும்ப சுப நிகழ்ச்சிக்கு, ஊருக்குப் போக பஸ் நிலையம் அருகே நின்று கொண்டிருந்த அன்னபூரணியின் மகளும், மாப்பிள்ளையும், நிலை தடுமாறி வந்த, அரசுப் பேருந்தின் கட்டுப்பாடற்ற வேகப் போக்கினால், அதன் ராட்சச சக்கரங்களுக்கிடையே, மூட்டைப் பூச்சியாக உருத் தெரியாமல் நசுங்கி...

திருமண வயதை எட்டிக் கொண்டிருக்கின்ற இரண்டு பேத்திகளையும் காப்பாற்ற வேண்டிய நிர்ப்பந்தத்தில், வருமானத்திற்கே வழியில்லாமல் அன்னபூரணி அம்மாள் நிர்க்கதியாகத் தடுமாறிக் கொண்டிருக்கிறாள். இந்த நிலையில்கூட இந்த தேசத்தையும், விதியையும் நொந்து

கொள்ளாமல், மௌனமாக அல்லல் பட்டு வருகிறாள்.

அந்த அன்னபூரணி அம்மாளுக்கு இன்று விடிவு வரப் போகிறது. பென்ஷன் அரியர்ஸாக ரூ 1,67,000மும், 15.8.97லிருந்து ரூ.3000/- மாதத் தொகையாக பென்ஷனும் கிடைக்க இருக்கிறது.

இந்தக் காசோலை பட்டுவாடாவையே ஒரு சின்ன விழாவாக அந்த வங்கியின் நான்கு சுவர்களுக்குள்ளேயே நடத்த, ராதா ஆவன செய்திருந்தாள். அவள் இருந்த அந்த வங்கியின் பெரிய கிளை அது. அங்கிருந்த நூற்று ஐம்பதுக்கும் மேற்பட்ட ஊழியர்கள், சில முக்கியமான வாடிக்கையாளர்கள், ஒரு சில நகர பிரமுகர்கள், ஒரு பெண் எழுத்தாளர் என்று ஒரு குட்டி விழா இன்று பிற்பகலுக்கு மேல், நடக்க இருக்கிறது. அதற்காக முன்கூட்டியே அந்த மூதாட்டியின் வீட்டிற்குப் போய், வங்கிக்குத் தேவையான சில பத்திரங்களில் அந்த விழா நாயகியின் கையெழுத்தை வாங்கி வரவும், அந்த அம்மையார் விழாவுக்குப் பேத்திகளுடன் காரில் வரும் நேரம் குறித்துப் பேசவும், வங்கி ஏற்பாடு செய்திருந்த காரில் ராதா இப்பொழுது, விழா நாயகி வீட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிறாள்.

நகரின் மையப் பகுதியான ஒரு பெருஞ் சாலையிலிருந்து, கோபித்துக் கொண்டு திடீரென்று விலகிவிட்டாற்போன்ற சில கிளை வீதிகள் வழியாகத்தான் அந்த வீட்டை அடைய முடியும். வீதி முடிவு வீடு. மேலே போக முடியாமல் தடுக்கும் பாதி செங்கல் சுவர். சுவரை ஒட்டிச் செல்லும் கழிவுச் சாக்கடை.

கூரை வேய்ந்த சின்ன வீடு. கொஞ்சம் சிமெண்ட், கொஞ்சம் சாணம், நிறைய மணல் என்ற பிடிப்பில் ஒட்டிக் கொண்ட துண்டு துண்டான செங்கற்கள் சுவராக, ஜன்னல் என்ற பெயருக்குக் கம்பிகளில்லாத சில சதுர பொந்துகள், வெளிச்சத்தையும், காற்றையும் இலேசாக கமகமக்கும் நாற்றத்துடன் அந்த நாயகியின் வீட்டிற்குள்ளே அனுப்பிக் கொண்டிருந்தன.

இந்த வீட்டிற்கு முன் கார் வந்து நின்ற சந்தோஷம் நிறையவே தெரியும் பேத்திகள் முகம். ஆரோக்யமான அலங்காரத்துடன், கௌரவம் மிகுந்த ஒரு அதிகாரப் பொறுப்பையும் சுமந்துகொண்டு, இந்த வீட்டில் காலடி வைக்கும் முதல் அதிகார வர்க்கமே இந்த ராதாதானே? செய்வதறியாத குழப்பத்தில், சிறு பெண்களான பேத்திகள் அவளை வரவேற்று, ஒரு பழைய மரப் பலகையை ஆசனமாகத் தர, அதில் இயல்பாக, அவர்களுக்கு எந்த சங்கடத்தையும் தராமல் அமர்கிறாள் ராதா. கைக்காரியமாக, நாள்கைந்து பாத்திரங்கள் இருப்பதனால் சமையற்கட்டு போன்று தோற்றமளித்த, ஒரு பகுதியிலிருந்து வெளிப்படுகிறாள் விழா நாயகி. தளர்ந்த உடல். உரிய மெதுவான நடை.

பரஸ்பர அறிமுகம்.

"டீ., மோரு எதானச்சும் சாப்பிடறீங்களா?"

---

**"என்னப்பா சீட்டு இது?"**

**"வருஷம் பூரா எனக்குத் தவறாம பிச்சை போடுறவங்க பேரை எல்லாம் குலுக்கிப் போட்டு ஒருத்தருக்கு 'ஃபோர்டு கார்' குடுக்கறேன் தாயே..."**

**— அம்பை தேவா**





**" தொண்டர்கள்கிட்ட சிக்கனத்தைக் கடைபிடிக்கச் சொன்னது தப்பாப் போச்சு!"**

**"ஏன் தலைவரே?"**

**"சால்வைக்குப் பதிலா கர்ச்சீப்பைப் போர்த்திட்டுப் போயிட்டாங்க!"**

**— தே.நா. சத்யா முருகவேல்**

"சாப்பிடலாமே..."

பேத்திகள் முகத்தில் சந்தோஷம்.

"ஆயா... நீ இந்த அம்மாகிட்ட பேசிக்கிட்டிரு. நா, டீ கலந்து கொண்டாறேன்." -உள்ளே விரைபவளுக்கு பதினைந்து வயது தொட்டிருக்க வேண்டும்.

அந்த இளம் வயசுகள் அணிந்திருந்த ஆடைகள் அவர்களது வறுமைக் கோட்டு எல்லையைத் துல்லியமாகக் காட்டினாலும், அந்த உபசரிக்கும் பண்பு மனித கௌரவத்தைக் காட்டுவதாகப் பட்டது ராதாவுக்கு.

ஏற்கெனவே இது குறித்து அந்தக் குடும்பத்திற்கு உரிய நபர்கள் மூலமாக, கடிதங்கள் மூலமாக செய்திப் போக்குவரத்து இருந்ததால் ராதாவால் கொஞ்ச நேர சம்பிரதாயப் பேச்சுக்குப் பிறகு, நேரிடையாகவே விஷயத்திற்கு வர முடிகிறது.

"நாலு மணிக்கு பேங்குல ஃபங்ஷன். நீங்களும், கொழந்தைங்களும் வரணும். மூணு மணிக்கெல்லாம் காரை அனுப்பிச்சிடறோம். விழா முடிஞ்ச கையோட வீட்டுக்குக் கார்லயே வந்துடலாம்..."

"அதெல்லாம் எதுக்கும்மா? அவ்ளோ பெரிய ஆபீசுல, நாலு பேர் முன்னாடி... நா வந்து எப்படிம்மா...?"

"இதோ பாருங்கம்மா... எந்தத் தயக்கமும் உங்களுக்கு இருக்கக் கூடாது... என்னை மாதிரி, இன்னும் முப்பது நாப்பது பொம்பளைங்க அங்க வேலை செய்யறாங்க. உங்களைப் பாக்க எல்லாருமே ஆவலா இருக்காங்க. உங்களை அவங்க எல்லாரும் நல்லா கவனிச்சுப்பாங்க..."

"பென்சன் தர்றீங்க... சரிம்மா... இந்த விழா அது இதுன்னு..." - விழா நாயகி தயங்குகிறாள்.

"பென்சன், அரசாங்கம் உங்களுக்குச் செய்யற கடமை. விழா, இந்த இளைய தலைமுறை உங்க குடும்பத்துக்குச் செய்ய வேண்டிய மரியாதை கலந்த நன்றி. அவ்ளோதான். இதுல நீங்க தயக்கமே காட்டக் கூடாது. உங்க பேத்திங்களுக்கு அப்போதான் இந்த தேசத்து மேல நம்பிக்கையே வரும்..."

டீ வருகிறது. ராதா சங்கடமில்லாமல் எடுத்துக் கொள்கிறாள். ஏற்கெனவே கிராமப்புறக் கிளைகளில் பணியாற்றிய அனுபவம் அவளுக்குக் கை கொடுக்கிறது. ஏழைகளின் உபசரிப்பைப் புறக்கணிப்பது, இந்தத் தேசத்திற்குச் செய்யும் கொடுமையான அவமானம் என்று அவள் அறிந்திருந்தாள். உணர்ந்தும் இருந்தாள்.



"ரொம்ப மகிழ்ச்சியா இருக்கீங்களே, லாட்டரி சீட்டு எதுவும் விழுந்திருக்கா, சார்?"

"அந்த மாதிரிதான்னு வச்சுக்கங்களேன்... ஃபைனான்ஸ் கம்பெனில நான் போட்டிருந்த பணத்தை, 'டியூ டேட்ல' கரெக்டா கொடுத்துட்டாங்க!"

— சீர்காழி ரேவதி

"சக்கரை போதுமா...?"

"கரெக்ட்டா போட்டிருக்கே... ஆமா, பாட்டியைக் கூட்டிக்கிட்டு நீங்க ரெண்டு பேரும் வந்திரணும்."

"நிச்சயமா... ஆமா, ஆயாவுக்கு மாலையெல்லாம் போடுவாங்களா...?"

"வெவரம் இல்லாம கேக்காதக்கா. விழான்னா, மாலை இல்லாம கெடையாது..." சின்னவள் மூத்தவளுக்குத் தன் அறிவை வெளிப்படுத்துகிறாள்.

ராதா அவர்களுக்கு விழா எப்படியெல்லாம் நடக்கும் என்பதை ஓரளவுக்கு விவரிக்கிறாள். பிறகு விழா நாயகியிடம் திரும்புகிறாள்.

"அன்ன பூரணியம்மா... எங்க பெரிய மானேஜர்கூட உங்ககிட்ட கேட்டுட்டு வரச் சொன்னாரு.... ஒண்ணரை லட்சத்துக்கும் மேல பணம் வருது. ரெண்டு பொண் கொழந்தைங்க வேற. ஜாயிண்ட்டா, அதுங்க பேர்ல பணத்தை டெபாஸிட் செஞ்சிரச் சொல்லு. அவங்க கல்யாணத்துக்குக் கை கொடுக்கும்னு... இதுவரை நாங்க எந்த சுதந்தரப் போராட்ட பென்ஷன்காரங்ககிட்டயும் இதைக் கேக்கலை. ஆனா நீங்க வயசானவங்க, தனியா இருக்கீங்க. கல்யாண வயசுல பேத்திங்க. அதனால சொல்லச் சொன்னாரு..."

அன்னபூரணி அம்மாள் முகம் இலேசாக

மாறுகிறது.

''அம்மா... உன்னைப் பார்த்தா, எம் பொண்ணு மாதிரி இருக்குது. நீ படிச்சவ. வெவரம் தெரிஞ்சவ. உங்கிட்ட சொல்லலாம்னு நெனைக்கிறேன். பென்சன்தாம்மா எனக்கு.''

''அப்படின்னா...'' ராதா குழம்புகிறாள்.

''மொத்தப் பணமா நீங்க எவ்வளோ குடுப்பீங்க...?''

''ஒண்ணரை லட்சத்துக்கும் மேலம்மா...'' கிழவி கண்களில் நீர்த் துளிக்கிறது.

''அது எனக்கு வராதும்மா... அங்கங்கே



''அந்தப் பிச்சைக்காரன் ஏதோ பிட் நோட்டீஸா விநியோகிக்கிறானே... என்ன அது?''

''பிச்சை போட்டவங்களுக்கு 'தர்மம் செய்வதன் பலன்கள்', போடாதவங்களுக்கு 'தர்மம் செய்யாததன் விளைவுகள்'னு நோட்டீஸ் போட்டு விநியோகிக்கிறானாம்.''

— கே. உஷா



போயிடும்... பணமா மாத்தி நான் அவுங்க கிட்ட கொடுத்தாகணும்...''

''அவங்ககிட்டன்னா...?''

''என் புருஷன் இந்த தேசத்துக்காகப் பாடுபட்டார்னு சர்டிபிகேட் கொடுத்தவருக்கு. அதுக்காக எனக்கு பெஷசன் வர ஏற்பாடு செஞ்சவருக்கு, கவர்மெண்ட்டுகிட்டேர்ந்து பென்சன் புஸ்தகம் வாங்கிக் கொடுக்கறவருக்கு, அங்கங்கே ஆளுங்க. அந்த மொத்தப் பணமே அவங்களுக்குத்தான். பென்சன் மாத்தரந்தான் எனக்கு. இதுதான் பேச்சு.''

''அன்னபூரணியம்மா... நீங்க இதுக்கு...?''

''எப்படி சம்மதிச்சீங்கன்னு கேக்கப் போறே? கல்யாண வயசுல ரெண்டு பேத்திங்க... சாயங்காலம் விழாவுக்குக்கூட, அக்கம் பக்கம் தரப் போற, சொக்கா, பாவாடை போட்டுக்கிட்டுத்தாம்மா என் பேத்திங்க அங்க வர முடியும். தெனப்படி ஒருவேளை கஞ்சி... இந்த எழுபத்தி அஞ்சு வயசுல என்னால அதுங்களுக்கு உழைக்க முடியலையேம்மா... என்னைய, என்ன செய்யச் சொல்றே?''

''உங்க புருஷன் தேச சேவைக்காக நெஜம்மாவே ஈடுபட்டவராச்சேம்மா...!''

''அதுனாலதான் எனக்குப் பென்சனாவது மிச்சம்.''

''என்னம்மா சொல்றீங்க...?''

''படிச்ச நீயே வெவரமா கேட்டா நா என்னம்மா செய்வேன்...? சுதந்தரம், தேசம், சேவை இது ஒரு பக்கம். அந்தக் காலத்துல ஜேப்படி, கொள்ளைன்னு ஜெயிலுக்குப் போனவனுக்கும் இந்தப் பணம் கெடைக்குதும்மா... என்ன, வெள்ளைக்காரன் காலத்துல ஜெயிலுக்குப் போனதுக்கு ஒரு சர்டிபிகேட்...''

''யார்தான் இப்படி கொடுக்கறாங்க...?''

''என் புருசங்கூட அந்தக் காலத்துல மெய்யாலுமே ராணுவத்துல இருந்த ஒருத்தரே இதுக்கும் இப்போ வழி செய்யுறாரு... என்னத்தைன்னு சொல்ல... அதிகாரிங்களைத் தெரிஞ்சு வச்சிருக்கிறாரு. ரூட்டு தெரிஞ்சி வச்சிருக்காரு... டெல்லிக்கு அப்பப்ப போய் வராரு. எங்களுக்குப் பென்சன் வருது... அவங்களுக்கு அரியர்சு பணம் மொத்தமும் போவுது. இதுல நா, எப்படிம்மா பேத்திங்க பேர்ல டெபாசிட்டு போட முடியும்?''

''யார்கிட்டயுமே, நீங்க இதப் பத்திப் பேசலையா?''

''பொண்ணுங்கறதுனால உங்கிட்டப் பேசினேன். வெளியே பேசினா பென்சனுக்கே வேட்டு வைக்க அவுங்க ஏற்பாடு செஞ்சிருவாங்க...''

ராதா, வாழ்க்கையில் நேரில் சந்தித்த முதல் பெரிய இடி இது. அவளால் நம்ப முடியவில்லை. நிஜமாகவே இந்திய சுதந்தரப் போராட்ட வீரர்களுக்கு நன்றி தெரிவிக்க விழையும் இந்த தேசத்தின் கோடானு கோடி முகங்களுக்கிடையே, ஒரு எழுபத்தி ஐந்து வயதுக் கிழவியிடம்கூட கருணை காட்டாத முகமும் இருக்கிறதோ?

ராதாவால் என்ன செய்ய முடியும்? விழா ஆரம்பமாகி விட்டது. ராதாதான் வரவேற்புரை படிக்க வேண்டும். ○

# பொன்னியின் செல்வன்

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

## இராஜபாட்டை

மதங்கொண்ட யானை ஆழ்வார்க்கடியானுடைய கைத்தடிக்கும் அவனுடைய அதட்டலுக்கும் பயந்து நின்று விடுமா, என்ன? தும்பிக்கையை எடுப்பாகத் தூக்கிக் கொண்டு, வழியிலிருந்த செடி கொடிகளைச் சிதைத்துக் கொண்டு, மேலே மேலே வந்து கொண்டிருந்தது.

அடுத்த விநாடி ஆழ்வார்க்கடியானுடைய கதி அதோ கதிதான் என்பதில் இனி சந்தேகமில்லை!

துணைக்கு வந்த வீரர்கள் இருவரும் நின்ற இடத்தில் நின்றபடியே 'ஹாய்' 'ஹாய்' என்று கூச்சலிட்டார்கள்.

வந்தியத்தேவன் கையிலிருந்து நழுவித் தரையில் விழுந்த வேலைத் திரும்ப எடுத்துக் கொண்டு கடைசியாக ஒரு முயற்சி செய்து பார்க்க எண்ணினான்.

அதே சமயத்தில் ஆழ்வார்க்கடியான் தன் கையிலிருந்த தடியை வீசி மத யானை மீது எறிந்தான்.

மறுகணம் ஆழ்வார்க்கடியானைக் காணவில்லை!

அவனுடைய தலைப்பாகை காற்றில் பறந்து சென்று, ஒரு மரக்கிளையில் விழுந்தது.

ஆழ்வார்க்கடியான் என்ன ஆகியிருப்பான் என்று சிந்திப்பதற்குள்ளே அதைக் காட்டிலும் முக்கியமான சம்பவம் ஒன்று நிகழ்ந்து விட்டது.




கல்கி கலெக்ஷன்

அவன் மறைந்த இடத்துக்கருகில் சென்ற யானை திடீரென்று மண்டியிட்டது போல் முன் கால்களை மடக்கிக் கொண்டு முன்புறமாகச் சாய்ந்தது.

அந்த வனப்பிரதேசம்

அமரர் கல்கி

முழுவதிலும் எதிரொலி செய்த ஒரு பயங்கரமான பிளிறல் சத்தம் கேட்டது.

மறுகணத்தில் மலைபோன்ற அந்த மத யானையின் உருவம் முழுதும் மறைந்து விட்டது.

யானை அந்தப் படு பாதாளத்தில் உருண்டு உருண்டு விழுந்த போது சரிந்து விழுந்த பாறைகளின் தூசிப் படலம் மேலே எழுந்து பரவியது.

என்ன நடந்தது என்பதைச் சிந்தித்துத் தெரிந்து கொள்வதற்கு வந்தியத்தேவனுக்குச் சிறிது நேரம் ஆயிற்று.

ஆழ்வார்க்கடியானுக்குப் பின்னால் பெரும்பள்ளம் இருந்தபடியால் அவன் தடியை வீசி எறிந்த வேகத்தில் பின்புறம் சாய்ந்து விழுந்து விட்டான்.

அவனை நோக்கிச் சென்ற மதங்கொண்ட யானையும் முன்னங்கால் இரண்டையும் பள்ளத்தில் வைத்து விட்டது. பிறகு சமாளிக்கப் பார்த்தும் முடியவில்லை. அதனுடைய குன்றொத்த உடலின் பெருங்கனமே அதற்குச் சத்துருவாகி அந்தப் பள்ளத்தில் கொண்டு தள்ளிவிட்டது!

மத யானைக்கும் மத யானையையொத்த ஆழ்வார்க்கடியானுக்கும் ஒரே நேரத்தில் ஒரேவிதமான மரணம் சம்பவித்து விட்டது!

இதை வந்தியத்தேவனுடைய உள்ளம் உணர்ந்ததும் அவனுடைய உடம்பு சிலிர்த்தது.

அவனுடைய இதயத்தில் பெரும் வேதனை உண்டாயிற்று.

அந்த ஸ்ரீ வைஷ்ணவன் மீது வந்தியத்தேவனுக்கு முதலில் ஏற்பட்டிருந்த சந்தேகங்களெல்லாம் மறைந்து பிரயாணத்தின் போது அவன் பேரில் ஒருவித வாஞ்சையே ஏற்பட்டிருந்தது.

அப்படிப்பட்டவனுக்கு இத்தகைய கதியா நேர வேணும்?

அவனுடைய உதவியும் வழித்துணையும் இல்லாமல் இனித் தான் ஏற்றுக் கொண்டு வந்த காரியத்தைத் தானாகவே செய்து முடிக்க வேணுமே என்ற கவலையும் தோன்றியது.

வைஷ்ணவனும் யானையும் பள்ளத்தில் விழுந்து மறைந்த இடத்துக்கு அருகில் வந்தியத்தேவன் வந்து நின்று கீழே உற்றுப் பார்த்தான்.

முதலில் ஒரே புழுதிப் படலமாக இருந்தது. ஒன்றுமே புலப்படவில்லை.

கொஞ்சம் கொஞ்சமாகப் புழுதி அடங்கி, யானை சென்ற வழியில் செடி கொடிகளும் பாறைகளும் ஹதமாகி விழுந்திருப்பது தெரிந்தது.

''என்ன, தம்பி! சும்மா வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறாய்! ஒரு கை கொடுக்கக் கூடாதா?'' என்ற குரலைக் கேட்டதும் வந்தியத்தேவனுக்கு ஒரு தரம் தூக்கி வாரிப் போட்டது.

அதிசயத்தினால் தள்ளாடி விழாமல் குரல் வந்த இடத்தை நோக்கினான்.

யானை விழுந்த வழியையொட்டினாற்போல் செங்குத்தான பாறையோரத்தில் ஒரு மரத்தின் ஆணிவேரைப் பிடித்துக் கொண்டு ஆழ்வார்க்கடியான் தொங்கிக் கொண்டிருந்தான்.

வந்தியத்தேவனுடைய குதூகலத்துக்குக் கேட்க வேணுமா? உடனே வேடிக்கைப் பேச்சும் வந்துவிட்டது.

''ஓஹோஹோ! வைஷ்ணவரே! கஜேந்திரனுக்கு மட்டும் மோட்சத்தை அளித்துவிட்டு நீர் திரிசங்கு சொர்க்கத்தில் தங்கி வீட்டீரே?'' என்று சொல்லிக் கொண்டே, வீரர்களைக் கைதட்டி அழைத்தான்.

தன் அரையில் சுற்றியிருந்த துணிச் சுருளை அவிழ்த்து எடுத்து ஒரு முனையை இரு வீரர்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளச் செய்தான்.

இன்னொரு முனையைக் கீழே விட்டதும் ஆழ்வார்க்கடியான் மரத்தின் வேரை விட்டுவிட்டுத் துணிச் சுருளைப் பிடித்துக் கொண்டான்.

மூன்று பேருமாகப் பிடித்து இழுத்து உன்பாடு என்பாடு என்று அந்த வைஷ்ணவனை மெதுவாக மேலே கொண்டு வந்து சேர்த்தார்கள்.

சிறிது நேரம் வரையில் ஆழ்வார்க்கடியான் நெடிய பெருமூச்சு விட்டுக் கொண்டு

பிரக்ஞையற்றவன் போலப் படுத்துக் கிடந்தான்.

மற்றவர்கள் அவனைச் சூழ்ந்து நின்று ஆசுவாசப்படுத்தினார்கள்.

சட்டென்று எழுந்து உட்கார்ந்து, ''கிளம்புங்கள்! நன்றாய் இருட்டுவதற்குள் இராஜ பாட்டைக்குப் போய்ச் சேர்ந்துவிட வேண்டும். என் தலைக்குட்டை எங்கே? தடி எங்கே?'' என்று கேட்டான்.

''ஒன்றும் அவசரமில்லை. நீர் இன்னும் சிறிது நேரம் ஆசுவாசப்படுத்திக் கொள்ளும். பிறகு நாம் புறப்படலாம்'' என்று சொன்னான் வந்தியத்தேவன்.

அப்போது ஒரு நரி ஊளையிடும் சத்தம் கேட்டது.

இன்னொரு பக்கத்தில் இன்னொரு நரி தன் இனிய கீதத்தை ஆரம்பித்தது.

நூறு இருநூறு நரிகள் கோஷ்டிகானம் இசைத்தன.

மேட்டுப் பிரதேசமாயிருந்த காட்டிலிருந்து கீழே பள்ளத்தை நோக்கிப் பல இடங்களில் சலசலப்புப் பிரயாணங்கள் ஏற்பட்டன.

புதர்களில் மறைந்து செல்லும் சிறுத்தைகளே அச்சலசலப்புகளுக்குக் காரணம் என்று சொல்லித் தெரிய வேண்டிய அவசியமிருக்கவில்லை.

பள்ளத்திற்கு மேலே கழுகுகளும் பருந்துகளும் வட்டமிடத் தொடங்கின.



"யானையின் மரணம் என்பது சாதாரண விஷயமல்ல. சுற்றுப் பக்கம் வெகு தூரத்திலிருந்தெல்லாம் ஊன் தின்னும் மிருகங்களும் பட்சிகளும் சற்று நேரத்துக்கெல்லாம் கஜேந்தினுடைய உடலைப் பட்சிப்பதற்காக வந்துவிடும். நாமும் அவற்றுக்குப் பட்சணமாகி விடுவோம். புறப்படுங்கள் உடனே!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

அவன் கூறியதை வந்தியத்தேவன் இப்போது மறுத்துப் பேசவில்லை.

நால்வரும் காட்டு வழியில் எவ்வளவு துரிதமாகப் போக முடியுமோ அவ்வளவு துரிதமாகச் சென்றார்கள்.

அஸ்தமிக்கும் சமயத்துக்கு இராஜ பாட்டையை அடைந்தார்கள்.



ராஜபாட்டையில் வருவோரும் போவோரும் வண்டிகளும் வாகனங்களுமாக ஒரே கலகலப்பாக இருந்தது.

யானைகளின் மீது சர்வ சாதாரணமாக ஏறி வருகிறவர்களைப் பார்த்து வந்தியத்தேவன் வியப்புற்றான். "இம்மாதிரி மிருகம் ஒன்றுதானா காட்டுப் பாதையில் அவ்வளவு பீதியை உண்டு பண்ணி விட்டது?" என்று எண்ணி எண்ணி ஆச்சரியப்பட்டான்.

"இந்த இராஜபாட்டை எங்கிருந்து எங்கே போகிறது? நாம் எங்கே வந்திருக்கிறோம்? எங்கே போகிறோம்?" என்று கேட்டான்.

"அனுராதபுரத்திலிருந்து சிம்ம கிரிக்குப் போகும் இராஜபாட்டையில் வந்து சேர்ந்திருக்கிறோம். தம்பள்ளை இன்னும் அரைக்காத தூரம் இருக்கிறது. இராத்திரி அங்கே போய்ச் சேர்ந்து விடலாம்" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"இராஜபாட்டை வழியாகச் சுகமாய் வந்திருக்கலாமே? எதற்காகக் காட்டு வழியாக வந்தோம்?"

"இராஜபாட்டையில் நாம் நெடுகிலும் வந்திருந்தால் நூறு இடத்தில் நம்மை நிறுத்திச் சோதனை செய்திருப்பார்கள். அனுராதபுரத்தில் அடியோடு நிறுத்திப் போட்டிருப்பார்கள். நாம் யாரைத் தேடி வந்திருக்கிறோமோ அவர் சிம்மகிரிக்குப் பக்கம் சென்றிருப்பதாக அறிந்தேன். அதனால்தான் குறுக்கு வழியில் வந்தேன். இன்னமும் அவரை நாம் கண்டுபிடிக்கத்தான் போகிறோமோ, இல்லையோ? வேறு எங்கேயாவது போகாதிருக்க வேண்டும்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

இராஜபாட்டையின் இரு பக்கத்திலும் ஏராளமான வீடுகளும் கிராமங்களும் கடைவீதிகளும் கொல்லர் - தச்சர் பட்டறைகளும் இருந்தன. அவற்றில் வசித்தவர்களும் தொழில் செய்தவர்களும் பெரும்பாலும் சிங்களவர்களாகத் தோன்றினார்கள்.

இராஜபாட்டையில் தமிழ்நாட்டுப் போர் வீரர்கள் குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் இருபுறமும் வசித்த சிங்களவர்கள் எவ்விதத் தடையுமின்றி நிர்ப்பயமாய்த் தங்கள் தொழில்களைச் செய்து கொண்டிருந்தார்கள்.

"இந்தப் பகுதியெல்லாம் இப்போது யாருடைய வசத்தில் இருக்கிறது?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"சோழ சைன்யம் தம்பள்ளை வரையில் கைப்பற்றியிருக்கிறது. அப்பால் சிம்மகிரிக் குன்றும் கோட்டையும் மகிந்தன் வசம் இருக்கின்றன."

"இந்தப் பக்கங்களில் வசிக்கும் ஜனங்கள்?"

"பெரும்பாலும் சிங்களத்தார்தான். 'பொன்னியின் செல்வர்' இங்கே வந்த பிறகு யுத்தத்தின் போக்கே மாறி விட்டது. சோழ வீரர்களுக்கும் மகிந்தனுடைய வீரர்களுக்குந்தான் சண்டை. அதாவது போர்க்களத்தில் எதிர்ப்படும்போது மற்றபடி குடிகள் நிர்ப்பயமாய் வாழலாம். புத்த குருமார்களுக்கு ஒரே கொண்டாட்டம். அனுராதபுரத்தில் இடிந்து போன புத்த விஹாரங்களையெல்லாம் நம் இளவரசர் திரும்பப் புதுப்பித்துக் கட்டும்படி கட்டளையிட்டிருக்கிறாராம்! கேட்டாயா கதையை? பௌத்த குருக்கள் ஏன் குதூ

கலமடைய மாட்டார்கள்? இளவரசரை நான் சந்திக்கும்போது நீங்கள் செய்யும் காரியம் எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை!' என்று சொல்லிவிடப் போகிறேன்!''

''கட்டாயம் சொல்லிவிடும். உமக்குப் பிடிக்காத காரியத்தைச் செய்வதற்கு இந்த இளவரசர் யார்? அவருக்கு என்ன கொம்பு முளைத்திருக்கிறதா?'' என்றான் வல்லவரையன்.

''அவருக்குக் கொம்பு முளைத்திருக்க வில்லை. தம்பி! அது உண்மையே! ஆனாலும் அவரிடம் ஏதோ ஒரு சக்தி இருக்கிறது. அவருக்குப் பின்னால் யார் என்ன குறை சொன்னாலும், எதிரில் அவரைப் பார்த்ததும் மயங்கிப் போய் நின்று விடுகிறார்கள். இளவரசரை எதிர்த்துப் பேசும் சக்தி யாருக்கும் இருப்பதில்லை. அத்தகைய சக்தி, - இளவரசரைத் தம் இஷ்டப்படி நடக்கச் செய்யும் சக்தி, - ஒரே ஒருவருக்குத் தான் உண்டு....''

''ஆம், ஆம்! வீர வைஷ்ணவ ஆழ் வார்க்கடியாரின் அற்புத சக்தியை அறி யாதவர் யார்? அப்படிப்பட்ட பயங்கர மத யானையைக் கைத்தடியால் எதிர்த்து வென்றவருக்கு இளவரசர் எம்மாத்திரம்?''

''நான் கூறியதை நீ சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை, தம்பி! பொன்னியின் செல்வர் எங்கே? இந்த ஏழை வைஷ்ணவன் எங்கே? மத யானையைக் கைத்தடி கொண்டு எதிர்ப்பேன்; புலியையும் கரடியையும்



சிங்கத்தையும் வெறுங்கையோடு எதிர்ப் பேன். ஆனால் பொன்னியின் செல்வர் முன் நேருக்கு நேர் நிற்கும் போது என் தைரியமெல்லாம் எங்கேயோ போய் விடுகிறது. நெஞ்சு நெகிழ்ந்து விடுகிறது. தொண்டை அடைத்து விடுகிறது. வாயி லிருந்து ஒரு வார்த்தை வெளி வருவது பிரம்மப் பிரயத்தனமாகி விடுகிறது...''

"அவரை ஆளும் சக்தி படைத்தவர் என்று பின் யாரைச் சொன்னீர்!''

"உலகம் தெரிந்த விஷயமாயிற்றே; உனக்குத் தெரியாதா? இளைய பிராட் டியைப் பற்றித்தான் சொல்கிறேன். குந்தவை தேவியின் வாக்குத்தான் அவருக்கு வேத வாக்கு!''

''ஓஹோ! பழையாறை இளைய பிராட்டியைப் பற்றியா சொல்கிறீர்? உமது சகோதரி பழுவூர் இளையராணி யைப் பற்றித்தான் சொல்கிறீரோ என்று பார்த்தேன்!''

"நந்தினியும் அபூர்வ சக்தி உடை யவள்தான். ஆனால் அவளுடைய சக்தி வேறு விதமானது.

"எப்படி? என்ன வித்தியாசம்?''

''ஒருவன் நரகத்தில் விழப் போகிறவனாயிருந்தால், அவனைத் தடுத்து நிறுத்திக் குந்தவை தேவி சொர்க்கத்துக்கு அவனைக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவார். அது ஒரு வித சக்தி. நந்தினி என்ன செய்வாள் தெரியுமா? அவளுடைய சக்தி இன்னும் ஒருபடி மேலானது என்றே சொல்ல வேண்டும். நரகத்தையே சொர்க்கம் என்று சொல்லிச் சாதித்து அதை நம் பும்படியும் செய்து, நரகத்தில் சந்தோஷ மாகக் குதிக்கும்படி செய்து விடுவாள்!''

வந்தியத்தேவனுக்கு உடம்பு சிலிர்த்தது. நந்தினியின் குணாதிசயத்தையும் அவ ளுடைய பயங்கர மோகன சக்தியையும் இந்த வீர வைஷ்ணவன் எவ்வளவு சரி யாக அளந்து மதிப்பிட்டு வைத்திருக் கிறான்! நந்தினி இவனுடைய சகோதரி என்று சொல்வது மெய்யாயிருக்க முடியுமா?

இந்த யோசனையில் வந்தியத் தேவன் ஆழ்ந்து விட்டபடியால் மேலே ஒன்றும் கேட்கவில்லை. சிறிது தூரம் மௌனமாக நடந்தார்கள்.

அந்த மோனத்தைக் கலைத்துச் சில குதிரைகளின் குளம்புச் சத்தம் கேட் டது. அவர்களுக்கு எதிர்ப் பக்கத் திலிருந்து அச்சத்தம் வந்தது. சில நிமிஷத்துக்கெல்லாம் நாலு குதிரைகள் வெகு வேகமாக நாலு கால்பாய்ச்சலில் வந்தன. சூறாவளிக் காற்றைப் போல் புழுதியைக் கிளப்பி விட்டுக் கொண்டு வந்த அக்குதிரைகள் மின்னல் மின்னும் நேரத்தில் நம் கால் நடைப் பிரயாணி களைத் தாண்டிச் சென்றன. ஆயினும் அந்தச் சிறிய நேரத்திலேயே அக் குதிரைகளின் மேலிருந்தவர்களில் ஒரு வருடைய முகத்தை வந்தியத்தேவன் பார்த்துத் தெரிந்து கொள்ள முடிந்தது! ஆகா! பார்த்திபேந்திரவர்மன் அல் லவா இவன்? காஞ்சியிலுள்ள இள வரசர் ஆதித்தரின் அந்தரங்க நண்பன் அல்லவா? நம்மை அவ்வளவாகப் பிடிக்காதவன் அல்லவா? இவன் எங்கே வந்துவிட்டு எங்கே போகிறான்! எதற் காக இவன் இலங்கைக்கு வந்தான்? எப்போது வந்தான்?...

பிரயாணிகளைத் தாண்டிச் சென்ற குதிரைகள் சற்றுத் தூரம் போனதும் கம்பீரமான ஒரு குரலில் "நில்லுங்கள்!'' என்ற கட்டளை பிறந்தது.

குதிரைகள் நின்றன; பிறகு, இந்தப் பக்கமாகத் திரும்பின. அவர்களில் தலைவனாகக் காணப்பட்டவன் குதிரையைச் செலுத்திக் கொண்டு முன்னால் வந்தான். மற்றவர்கள் பின் தொடர்ந்து வந்தார்கள்.

முன்னால் வந்தவன், வல்லவரையன் எண்ணியது போலவே, நாம் முன்னம் மாமல்லபுரத்தில் பார்த்திருக்கும் பார்த்திபேந்திர பல்லவன்தான்.

வந்தியத்தேவனை அவன் உற்றுப் பார்த்துவிட்டு, "இது என்ன அப்பா இது? நீ எப்படி இங்கே வந்து சேர்ந் தாய்? தஞ்சாவூரில் நீ திடீரென்று மாய மாய் மறைந்து விட்டாய் என்று சொன் னார்களே? உன்னைப் பழுவேட் டரையர்கள் வேலை தீர்த்திருப்பார்கள்

என்றல்லவா நினைத்தேன்!'' என்றான்.

''பழுவேட்டரையர்களால் என்னை அவ்வளவு எளிதில் தீர்த்துக் கட்ட முடியுமா? நான் பழைய வாணர் குலத்தைச் சேர்ந்தவன் அல்லவா?''

''ஆம், ஆம்! எப்படியாவது உயிரைக் காப்பாற்றிக் கொண்டு தப்பிப் பிழைப்பதில் உனக்கு இணை வேறு யாரும் இல்லை....''

''ஐயா! உயிரைக் காப்பாற்றிக் கொள்வது அவசியமாயிருக்கும் போது காப்பாற்றிக் கொள்வேன். உயிரைக் கொடுக்க வேண்டிய சமயத்தில் கொடுக்கவும் அறிவேன். அப்படி நான் சாவதாயிருந்தால் தங்களைப் போன்ற பழைய பல்லவ குலத் தோன்றலுடன் சண்டை போட்டுச் சாவேனே தவிர, கேவலம் பழுவேட்டரையர்களின் கையினால் சாவேனா?'' என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் உறையிலிருந்து வாளை உருவினான்.

''சேச்சே! உன்னோடு என்னைச் சண்டை போடச் சொல்கிறாயா? அதுவும் இந்தத் தூர தேசத்திலே வந்து! வேண்டாம், தம்பி, வேண்டாம்! எனக்கு அவசர வேலை இருக்கிறது! உன்னிடம் இளவரசர் ஒப்புவித்த காரியம் என்ன ஆயிற்று?''

''செய்து முடித்துவிட்டேன், ஐயா! சக்கரவர்த்தியிடம் கொடுக்கும்படி பணித்த ஓலையைச் சக்கரவர்த்தியிடம் கொடுத்தேன். இளையபிராட்டியிடம் கொடுக்கச் சொன்ன ஓலையை அவரிடம் கொடுத்தேன்.''

''இங்கே எதற்காக வந்தாய்?''

''இலங்கையைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை எனக்கு வெகு நாளாக இருந்தது. அதற்காக இந்த வைஷ்ணவரோடு புறப்பட்டு வந்தேன்...''

''ஆகா! இந்த ஆளைக் கூட நான் எங்கேயோ பார்த்திருக்கிறேன் போலிருக்கிறதே!''

''ஆம், மகாராஜா! பார்த்திருக்கிறீர்கள். என் சகோதரியைப் பற்றி ஏதாவது தெரியுமா என்று விசாரிப்பதற்காக இளவரசர் ஆதித்தரிடம் வந்தேன். அப்போது தாங்களும் அவர் பக்கத்தில் இருந்தீர்கள்!...''

''அது யார் உன் சகோதரி?''

''இப்போது பழுவூர் இளையராணியாக விளங்கும் நந்தினி தேவி!''

''ஆகா! அந்த விஷப் பாம்பினால் நாட்டுக்கு நேர்ந்திருக்கும் தீங்குகளையெல்லாம் நினைத்தால்... அவளுடைய அண்ணனாயிருப்பதற்காக உன்னைக் கழுவில் ஏற்ற வேண்டும்!''

''மகாராஜா! ஒரு நாள் நான் கழுவில் ஏறிச்சாவதாகவே சபதம் செய்து கொண்டிருக்கிறேன். அன்றைக்குத் தாங்களே வந்து தங்கள் கையினாலேயே அந்தத் திருக்கைங்கரியத்தைச் செய்து விட்டால்....''

''உன்னைக் கழுவில் தூக்கிப் போட என்னால் முடியுமா? அதற்கு நூறு ஆள் வேண்டும். இருக்கட்டும்; நீங்கள் வருகிற வழியில் இளவரசரைப் பற்றி ஏதாவது செய்தி கேள்விப்பட்டீர்களா? அநுராதபுரத்துக்கு அவர் வந்து விட்டாரா, தெரியுமா?'' என்று பார்த்திபேந்திரன் கேட்டான்.

''அதைப் பற்றியெல்லாம் எங்களுக்கு என்ன தெரியும், மகாராஜா! நாங்கள் காட்டு வழியில் வந்தோம்! காட்டில் ஒரு மத யானை என்னைத் துரத்திக் கொண்டு வந்தது! அப்போது பாருங்கள்...''

''போதும், உன் கதை! யார் கண்டது? நாளைக்கு உன்னை நானே கழுவில் தூக்கிப் போட்டு உன்னுடைய ஆசையை நிறைவேற்றினாலும் நிறைவேற்றுவேன்!'' என்று சொல்லிக் கொண்டே பார்த்திபேந்திரன் குதிரையைத் திருப்பினான்.

ஆழ்வார்க்கடியான் பார்த்திபேந்திரனுடன் பேசியபடியே அவனுடனிருந்த ஆட்களையெல்லாம் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

எல்லாரும், குதிரைகளைத் திருப்பிக் கொண்டு போன பிறகு ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனிடம் ''தம்பி! அந்த மற்ற மூன்று ஆட்களையும் பார்த்தாயா? அவர்களில் யாரையாவது உனக்கு முன்னம் தெரியுமா?'' என்று

ஆவலோடு கேட்டான்.

"இல்லை, நான் பார்த்ததேயில்லை!" என்றான் வந்தியத்தேவன்.

"ஆம், நீ பார்த்திருக்க முடியாது தான். அவர்களில் இரண்டு பேரை நான் பார்த்திருக்கிறேன். திருப்புறம்பயம் பள்ளிப் படையில் நள்ளிரவில் பார்த்தேன்! அப்பா! என்ன பயங்கரமான சபதம் எடுத்துக் கொண்டார்கள்?" என்று கூறியபோது ஆழ்வார்க்கடியானுடைய உடம்பு முழுவதும் நடுங்கிற்று.

"அப்படி என்ன பயங்கர, மான சபதம் எடுத்துக் கொண்



டார்கள்?''

''சோழர் குலப் பூண்டே இந்த உலகில் இல்லாமல் அழித்து விடுவதாகச் சபதம் எடுத்துக் கொண்டார்கள்!...''

''ஐயையோ!''

''இவர்கள் எப்படி நமக்கு முன்னால் இங்கு வந்து சேர்ந்தார்களோ தெரியவில்லை! கெட்டிக் காரர்கள்! இந்த முரட்டுப் பல்லவனை எப் படியோ பிடித்துக் கொண்டார்கள் பார்!'' என்று சொல்லிவிட்டு ஆழ்வார்க்கடியான் மௌன மானான்.

வந்தியத்தேவனுக்குக் கோடிக்கரையில் அவன் அறிந்த ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. அவன் கோடிக்கரை வந்ததற்கு முதல் நாள்தான் இரண்டு பேர் அவசரமாக இலங்கைக்குப் போனார்கள் என்றும், பூங்குழலியின் தமையன் அவர்களைப் படகில் ஏற்றிச் சென்றான் என்றும் கேள்விப்பட்டான் அல்லவா?

இவர்களில் அந்த இரண்டு பேரும் இருப்பார்களோ? அப்படியானால் பார்த்திபேந்திரனுக்கும் இவர்களுக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்?

நால்வரும் தம்பள்ளை என்னும் புத்த புண்ணிய க்ஷேத்திரத்தை நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

(தொடரும்)



# ஒரு நிஜ நட்சத்திரம்

சென்னைப் பட்டணத்தில் கொஞ்ச நாளாக எங்கே போனாலும், யாரைக் கண்டாலும், இரண்டு விஷயங்களைப் பற்றித்தான் பேசுகிறார்கள். ஒன்று, எலெக்ஷன் விஷயம்; இரண்டாவது, பாலயோகினி.

எலெக்ஷன் பேச்சாவது இந்த மாதக் கடைசிக்குள் ஒரு மாதிரி ஓய்ந்து விடும். ஆனால், "பாலயோகினி"யைப் பற்றி அம்மாதிரி நம்பிக்கைக்குக் கொஞ்சமும் இடமில்லை. மாதக் கணக்கிலும், வருஷக் கணக்கிலும் பேசுவார்கள் என்று தோன்றுகிறது. பேசிக் கொண்டு போகட்டும், அவர்கள் பாடு. ஆனால், அந்தப் பேச்சினால் நம்முடைய முக்கியமான வேலைகளெல்லாம் கெடுவதென்றால் கஷ்டமாய்த்தான் இருக்கிறது.

அன்றொரு நாள், பாருங்கள், நான் ஒன்பதரை மணி ரயிலுக்கு அவசரமாய்ப் போக வேண்டியிருந்தது. மோட்டார் பஸ் ஸ்டாண்டில், எழும்பூர் பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருந்தேன். அங்கே அதே பஸ்ஸுக்காக வந்த ஒரு சிநேகிதரைச் சந்தித்தேன்.

அவர், "ஏன் ஸார்! எலெக்ஷன் எல்லாம் எப்படியிருக்கிறது?" என்று கேட்டார்.

"ரொம்ப நன்றாயிருக்கிறது!'' என்றேன்.

"காங்கிரஸுக்கு ஜயந்தானே? அதைப் பற்றிக் கேட்பானேன்? இருக்கட்டும், ஸார்! நீங்கள் 'பாலயோகினி' டாக்கி பார்த்திருப்பீர்களே? அதிலே, அந்தக் குழந்தை ஸரோஜா எப்படி நடிக்கிறாள், பார்த்தீர்களா? 'ஏ பூச்சாண்டி! ஏ பூச்சாண்டி! கமலாவை அடிச்சவனைப் புடிச்சுக்கோ!!' அற்புதம், ஸார்! அற்புதம்! என்னமோ பிரமாதமாய் ஷெர்லி டெம்பிள் ஷெர்லி டெம்பிள் என்கிறோமே; உங்கள் ஷெர்லி டெம்பிளைக் கொண்டு உடைப்பில் போடுங்கள், ஸார்! அடா டாடா!''

இதற்குள் பஸ் வந்தது. அந்த நண்பர் ஏறி உட்கார்ந்து கொண்டார். நானும் அவர் பின்னால் ஏறப் பார்த்தேன். அதற்குள் அந்த பஸ்ஸிலிருந்து அங்கே இறங்கியவர் ஒருவர் என் கையைப் பிடித்துக் கொண்டார்.

"எங்கே? ரொம்ப அவசரமாய் ரயிலுக்குப் போகிறீர்களோ? எல்லாம் போகலாம், ஸார், அடுத்த பஸ்ஸில். எலெக்ஷன் எல்லாம் எப்படியிருக்கிறது!" என்று கேட்டார்.

"ரொம்ப பேஷாயிருக்கிறது" என்று நான் சொல்லும் போதே, பஸ் போய் விட்டது.

"அதைப் பற்றிக் கேட்கவே வேண்டியதில்லை. காங்கிரஸுக்குத்தான் ஜயம். இருக்கட்டும்னா, நீங்கள் பாலயோகினி பார்த்தீர்களல்லவா? அதிலே அந்தக் குழந்தை ஸரோஜா என்ன அற்புதமாய் நடிக்கிறாள், பார்த்தீர்களா? ஆச்சரியம், ஸார்! ஆச்சரியம்! என்னமோ நாமெல்லாம் பிரமாதமாய் ஷெர்லி டெம்பிள் ஷெர்லி டெம்பிள் என்று சொல்லிக் கொண்டிருந்தோமே! ஷெர்லி டெம்பிளைக் கொண்டு போய் உடைப்பிலே போடுங்கள். 'யாரது?... லேடி டாக்டர்? லேடி டாக்டர்!' என்று சொல்லி, அந்த டெலிபோனை டக்கென்று வைக்கிறாளே, அது ஒன்றே போதும். த்ஸெள த்ஸெள த்ஸெள...."

இதற்குள் ஒரு டிராம் வண்டி வரவே, அவரை 'த்ஸெள' கொட்டவிட்டு, நான் விரைந்து சென்று ஏறிக் கொண்டேன்.

அந்த வண்டியில் இரண்டு பெஞ்சுக்குப் பின்னால் எனக்குத் தெரிந்த ஒருவர் இருந்தார். அவர் தம் மிடத்தை விட்டு எழுந்து வெகு காரியமாக வந்து என் பக்கத்தில் நெருக்கிக் கொண்டு



• பேபி ஸரோஜா



• ஷெர்லி டெம்பிள்

**இவள்தான் அமெரிக்காவில் குழந்தை நடிகர்களுக்குள் மிகவும் பெயர் பெற்றவள். இவளுக்கு மாதச் சம்பளம் ஆறாயிரம் ரூபாய்.**

உட்கார்ந்தார்.

"என்ன, எலெக் ஷன் எப்படியிருக் கிறது?" என்று கேட்டார்.

"சுரம் ரொம்பக் கடுமை; 104 டிகிரி" என்றேன்.

என்னுடைய நகைச்சுவையை அந்த மனுஷர் கொஞ்சமாவது லட்சியம் பண்ண வேண்டுமே? கிடையாது.

"அது இருக்கட்டும்; ஸார்! நீங்கள் பால யோகினி டாக்கி பார்த்தீர்களோ, இல் லையோ? பார்க்காமலிருப்பீர்களா? பார்த்துத் தான் இருப்பீர்கள். அதிலே அந்தக் குழந்தை ஸரோஜா எப்படி நடித்திருக்கிறாள், பார்த் தீர்களா? அடாடாடாடா! 'நெஜமா ரொம் பப் பசிக்கிறதா? மயக்கம் வந்துடும் போலிருக்கா? நீ திருட வேண்டாம். நானே கொடுத்துடறேன்' - ஸார்! என்னமோ பிர மாதமாய் ஷெர்லி டெம்பிள் ஷெர்லி டெம் பிள் என்கிறீர்களே? ஷெர்லி டெம்பிளைக் கொண்டு குப்பையில் போடுங்கள்" என்று சொல்லி, அதற்குள் டிராம் நிற்கவே இறங்கிச் சென்றார்.

அவர் இறங்கிய இடத்தில் சாலையில், எனக்குத் தெரிந்து ஒருவர் நிற்பதைக் கண் டேன். அவர் என்னைப் பாரா வண்ணம் வேறு பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண் டேன். ஆனால் வண்டி கிளம்பிய சமயம் அவர் என்னைப் பார்த்து விட்டார். உடனே, "கண்டக்டர்! நிறுத்து நிறுத்து!" என்று சொல்லிக் கொண்டே ஓடி வந்தார். நான் அந்த டிராம் கண்டக்டரின் கைகளைப் பிடித்துக் கொண்டு, "அப்பா! நீ வண்டியை நிறுத்த வேண்டாம். அந்த மனுஷ்யர் உண் மையில் வண்டியில் ஏறுவதற்காக வர வில்லை. அவர் மயிலாப்பூர் போக வேண் டியவர், என்னிடம் 'பாலயோகினி' டாக்கி யைப் பற்றிப் பேசுவதற்காகவே வருகிறார். மேலும், அவர் ஷெர்லி டெம்பிளை என்ன பண்ணுவாரோ தெரியாது. நான் வரும் வழியில் ஒருவர் ஷெர்லி டெம்பிளைத் தூரத் தள்ளினார். இன்னொருவர் உடைப்பில் போட்டார். மூன்றாவது மனிதர் குப்பையில் தள்ளினார். இவர் இன்னும் பயங்கரமாக ஏதாகிலும் செய்தாலும் செய்யக்கூடும்! ஆகையால் நீ வண்டியை நிறுத்தாமல் ஓட்டு. நான் அவரோடு இங்கிருந்தே பேசிவிடுகி றேன்" என்று சொல்லிவிட்டு, பிறகு ஓடி வந்த சிநேகிதரை நோக்கி, "ஸ்வாமி! எலெக் ஷனுக்கு உடம்பு சரியாய்த்தானிருக்கிறது. 'பாலயோகினி' டாக்கியை நான் பார்த்து விட்டேன். அதிலே அந்தக் குழந்தை ஸரோஜா அற்புதமாய்த்தான் நடிக்கிறாள். அதைப் பார்த்த பின் ஷெர்லி டெம்பிள் ஒன்றும் பிரமாதமில்லையென்றுதான் தோன்றுகிறது. இதற்காக நீங்கள் சிரமப் பட்டு இந்த டிராம் வண்டியில் ஏற வேண் டாம். வீடு போய்ச் சேருங்கள்" என்றேன். அவர் தமது முகத்தில் ஓர் அபார திகைப் புக்குறியைக் காட்டிவிட்டு நின்றார்.

எழும்பூர் ஸ்டேஷனை நான் அடைந்த போது ரயில் கிளம்புவதற்கு ஐந்து நிமிஷந் தான் பாக்கியிருந்தது. டிக்கட் துவாரத்தில் கைவிட்டு "மாயவரம் ஒன்று" ,என்றேன். அந்த டிக்கட் குமாஸ்தா எனக்குத் தெரிந்த வராயிருக்க வேண்டுமா? "எங்கே, ஸார்! பயணம்? எலெக்ஷன் எல்லாம் எப்படி யிருக்கிறது?" என்றார்.

"ரொம்ப நெருக்கடியாய்த்தான் இருக் கிறது. காங்கிரஸ் விரோதிகளுக்கு; எனக்கும் இப்போது அப்படியே; மூன்றரை நிமிஷந் தான் பாக்கி; தயவுசெய்து மாயவரம் ஒரு டிக்கட்!" என்றேன்.

அவர் டிக்கட்டைக் கையில் வைத்துக்

**அமரர் கல்கி**

கொண்டே, "இருக்கட்டும், ஸார்! நீங்கள் 'பாலயோகினி' டாக்கி பார்த்திருப்பீர்களே? ஸரோஜா நடிப்பு எப்படி? "...ஓ! இங்கிலீஷ் கூடச் சொல்லித் தராளே!... டான்ஸ் கூடப் பண்ணுவேனே... 'பேபி, லிட்டில் பேபி...'" என்று ஆரம்பிக்கவும், நான் அவருடைய வாயிலிருந்த வார்த்தைகளைப் பிடுங்கி, "... அதிலே அந்த ஸரோஜா என்கிற குழந்தை எவ்வளவு அற்புதமாய் நடிக்கிறது, பார்த்தீர்களா? என்னமோ ஷெர்லி டெம்பிள், ஷெர்லி டெம்பிள் என்கிறீர்களே? ஷெர்லி டெம்பிளைக் கொண்டு போய் போட் மெயிலில் போடுங்கள்" என்று சொல்லி விட்டு, அவர் கையிலிருந்த டிக்கட்டைப் பிடுங்கிக் கொண்டு ஓடினேன். பிளாட்பாரத்தின் கேட்டில் நின்ற தொப்பி துரையைப் பார்த்து "பாலயோகினி ஸீன்; ஸரோஜா ஒண்டர்புல்; ஷெர்லி டெம்பிள் நதிங்" (Balayogini seen - Saroja wonderful; Shirley Temple nothing) என்று கூறிக் கொண்டே ஓடிப்போய் ரயில் ஏறினேன். ஏறினேனோ, இல்லையோ, ரயிலும் கிளம்பிற்று. ரயில் கிளம்பிற்றோ, இல்லையோ, இரண்டு பெஞ்சிகளுக்கு அப்பாலிருந்த மனிதர் எழுந்து என் பக்கத்தில் உட்கார்ந்து, "எங்கே பயணம்? எலெக்ஷன் எல்லாம் எப்படியிருக்கிறது? இருக்கட்டும்; நீங்கள் 'பாலயோகினி' பார்த்தீர்களல்லவா? அந்தக் குழந்தை ஸரோஜா என்ன அற்புதமாய் நடிக்கிறது, பார்த்தீர்களா, ஸார்! 'எங்கப்பா பங்களூருக்குப் போகப் போறா; அப்ப, அவர் வேலையை உங்க அப்பாவுக்கு பண்ணி வைக்கச் சொல்றேன். என்ன சமத்து, ஸார்! அடாடாடாடா...." என்று ஆரம்பித்தவர் மாயவரம் ஸ்டேஷனில் நான் இறங்குகிற வரையில் ஓயவே இல்லை.

இப்படியாக "பாலயோகினி"யைப் பார்த்தவர்கள் எல்லாரும் ஸரோஜா பிரமை பிடித்தவர்களாவதைப் பற்றி எனக்குத் துளிக் கூட ஆச்சரியம் கிடையாது. மேனாட்டு சினிமாத் திரையில் தோன்றி ஒளி வீசும் நடிக நட்சத்திரங்களையும் பார்த்து, நமது தமிழ் டாக்கி திரைகளில் தோன்றும் கிரகங்கள், கிரகசாரங்களையும் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு, நம்முடைய தமிழ்த் திரையிலும் ஒரு நிஜ நட்சத்திரம் திடீரென்று தோன்றிப் பூரணமாய்ப் பிரகாசித்தால் ஏன் பிரமை உண்டாகாது?

தமிழ் டாக்கி உலகில் இதற்கு முன்னும் நாம் சில நல்ல நடிகர்களைப் பார்த்திருக்கிறோம்; நல்ல நடிப்பையும் பார்த்திருக்கிறோம். ஆனால், அவற்றில் ஏதாவது ஒரு வித குறை இல்லாமல் நாம் பார்த்ததில்லை. உருவம் சரியாயிருந்தால், குரல் சரியாயிராது. இரண்டும் சரியாயிருந்தால் குறிப்பிட்ட வேஷத்துக்குப் பொருத்தமாயிராது. அதுவும் பொருத்தமாயிருந்தால், நடிப்புத் திறமை இராது; அல்லது பேசுவது இயற்கையாயிராது. இவ்வளவும் நன்றாயிருந்தால் கூட, டைரக்டரும், காமிராமானும், ஒலிப்பதிவு செய்பவரும் சேர்ந்து குட்டிச் சுவர் பண்ணியிருப்பார்கள்.

அப்படியெல்லாம் ஒன்றுமில்லாமல், அப்பழுக்குச் சொல்ல முடியாதபடி தமிழ் டாக்கியில் நடித்து முதன் முதலாக வெற்றி பெற்றிருப்பது இந்த "ஸரோஜா கண்ணு" தான்.

நிகழும் 1937-ம் வருஷத்தில் அரசியல் உலகத்தில் பல அற்புதங்கள் நிகழ்வதாக நமது தலைவர்கள் சொல்லியிருக்கிறார்கள். கலை உலகத்திலும், "அற்புதங்கள்" நிகழும் வருஷம் இதுவென்றே தோன்றுகிறது. இம்மாதிரி நமது தமிழ் நாட்டிலும் ஒரு குழந்தை நடிக்கப் போகிறதென்று, "பாலயோகினி"யை நான் பார்ப்பதற்கு முன் யாராவது என்னிடம் சொல்லியிருந்தால், அவர்களுக்குப் பைத்தியம் என்று எண்ணியிருப்பேன்.

**"...ஓ! இங்கிலீஷ் கூடச் சொல்லித் தராளே! நான் டான்ஸ் கூடப் பண்ணுவேனே!... 'பேபி, லிட்டில் பேபி'..."**

அந்தக் குழந்தையின் நடிப்பில் எங்கேயாவது ஓரிடத்தில் கொஞ்சம் விரசமாயிருந்தது, இயற்கைக்கு மாறாயிருந்தது என்று சொல்வதற்கு இடமிருக்க வேண்டுமே? கிடையாது. முகத்திலேதான் எத்தனை வித விதமான பாவங்கள்! கோபம், ஆத்திரம், அன்பு, அருவருப்பு, கருணை, சோகம், ஆச்சரியம், பயங்கரம் முதலிய உணர்ச்சிகளையெல்லாம் எப்படித்தான் அந்தக் குழந்தை அறிந்து முகத்தில் பிரதிபலிக்கச் செய்தது? மற்றதெல்லாம் ஒருபுறமிருக்கட்டும். சுரம் வந்து படுத்த படுக்கையில் கிடக்கும்போது பிதற்றுவதும், அந்தப் படுபாவி சாஸ்திரிகளுக்

குப் பணம் கொடுக்க வேண்டாமென்று சொல்வதும் நடிப்புக் கலையின் சிகரம் என்றே சொல்ல வேண்டும்.

நமக்கு அடுத்த தலைமுறையில் வரப் போகும் நமது சந்ததிகள் விடுதலை பெற்ற தேசத்தில் வீர சுதந்தரத்துடன் வாழப் போகிறார்களென்று நாமெல்லாரும் நம்பியிருக்கிறோமல்லவா? அது போலவே, கலைச் செல்வத்திலும் அவர்கள் நம்மை விட எத்தனையோ மேம்பட்டு விளங்கப் போகிறார்கள் என்பதில் எனக்கு இப்போது எள்ளளவும் சந்தேகமில்லை. "பக்த குசேலர்" படத்தில், பால ஸரஸ்வதியைப் பார்த்த பின்னர்



எனக்கு அந்த நம்பிக்கை ஏற்பட்டது. "பால யோகினி"யில் ஸரோஜாவையும், பாலஸரஸ்வதியையும் பார்த்த பின்னர், அந்த நம்பிக்கை பன்மடங்கு உறுதிப்பட்டிருக்கிறது.

"சரிதான்; பால யோகினி டாக்கி எப்படியிருந்தது?" என்று கேட்கிறீர்கள்? அதைப் பற்றி மற்றொரு தடவை எழுதுகிறேன். என்ன அவசரம், ஸார்? பூகம்பமா வரப் போகிறது?

# போகுது பார் ரயில் வண்டி! போகாரா புண்ணியவான்?

"ஆகா! அதிசயம்! அற்புதம்! எஸ்.ஐ.ஆர். ரயில் வண்டிகள் ஓடுகின்றன! தண்டவாளங்களில் உருண்டு உருண்டு ஓடுகின்றன! கிட்டத்தட்ட எல்லா வண்டிகளுமே ஓடுகின்றன! அரைமணி ஒரு மணிக்கு மேல் தாமதித்துக் கிளம்புவதில்லை! ஆறு மணி ஏழு மணிக்குமேல் தாமதமாய் வந்து சேருவதில்லை! தூத்துக்குடிக்குப் புறப்பட்ட வண்டி விழுப்புரத்தில் நின்று விடுவதில்லை. மதராஸுக்குப் புறப்பட்ட வண்டி ஜோலார்பேட்டையில் முகாம் போட்டு விடுவதில்லை!... எப்படி என் சாமர்த்தியம்! இந்த டிரைவர் - பயர்மேன் வேலை நிறுத்தத்தை எவ்வளவு ஜோராகச் சமாளித்தேன் பார்த்தீர்களா?" என்பதாக எஸ்.ஐ.ஆர். ஜெனரல் மானேஜர் மிஸ்டர் ரெயினால்ட்ஸ் மார்பைத் தட்டிக் கொண்டு பேசுவார். ஏன் பேசமாட்டார்? பேஷாகப் பேசுவார்! அறிக்கைகளும் விடுவார். யார் அவரைத் தடுக்க முடியும்?

ஆனால் சென்ற ஒருமாத காலமாகத் தென்னிந்தியாவில் ஏற்பட்ட ரயில் போக்குவரவுக் குழப்பங்களினால் ஜனங்களுக்கு ஏற்பட்ட கஷ்டநஷ்டங்களை நினைத்துப் பார்க்கும்போது மிஸ்டர் ரெயினால்ட்ஸைப்போல் நாம் திருப்தியடைய முடியாது; பெருமை கொள்ளவும் முடியாது. "புண்ணியவான் ரெயினால்ட்ஸ் போய்த் தொலைய மாட்டாரா?" என்று விரும்பாமலிருக்கவும் முடியாது.

எத்தனை முக்கியமான காரியங்களை முன்னிட்டுப் பிரயாணம் புறப்பட்டவர்கள் நடு வழியில் திண்டாடி நின்றார்கள்? கலியாண முகூர்த்தத்தை வைத்து விட்டுப் புறப்

பட்டவர்கள் எத்தனை பேர் நடு வழியில் ஸ்திரீகள் குழந்தைகளுடன் நிற்க இடம் இன்றி, உண்ண உணவின்றி முன்னுக்கும் போக முடியாமல் பின்னுக்கும் போக முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள்? எத்தனை வியாபாரிகள் சமயத்துக்குப் பொருள்களைக் கொண்டு சேர்க்க முடியாமல் நஷ்டப்பட்டார்கள்? எத்தனை முக்கியமான காரியங்கள் தடைப்பட்டுப் போயின! எவ்வளவு லட்சம் ஜனங்களின் பொன் போன்ற விலையுயர்ந்த நேரம் வீணாயிற்று! இதற்கெல்லாம் யார் பொறுப்பு?

நாளாகக் கரிப் புகையோடு அதிருப்திப் புகையும் சேர்ந்து குமுறிக் கொண்டிருந்தது என்பது தெரிந்த விஷயம். வேலை நிறுத்தம் ஏற்படலாம் என்பதற்குப் பல அறிகுறிகள் தென்பட்டன. முன்னறிக்கையும் கிடைத்தது. அப்படி டிரைவர்கள் - பயர்மேன்கள் வேலை நிறுத்தம் செய்தால் பொது மக்கள் எவ்வளவு கஷ்டங்களுக்கு உள்ளாவார்கள் என்பது மிஸ்டர் ரெயினால்ட்ஸுக்குத் தெரியாமலிருந்திருக்க முடியாது. ரயில்கள் நடு வழியில் நின்றால் பிரயாணிகள் எவ்வளவு தொல்லைப்படுவார்கள் என்பதும்



முறை தவறி வேலை நிறுத்தம் செய்து பொது மக்களைத் தொல்லைப்படுத்திய என்ஜின் டிரைவர்களும் பயர்மேன்களும் பொறுப்பாளிகள்தான். அவர்கள் முறை கேடாக நடந்து கொண்டது பற்றி வருந்துகிறோம்.

ஆனால் அவர்கள் முறை தவறி நடந்து கொண்டதற்கு ஓரளவு காரணமும் சமாதானமும் சொல்லலாம்.

மிஸ்டர் ரெயினால்ட்ஸ் துரையின் முன் யோசனைக் குறைவுக்கும் மூட நிர்வாகத்துக்கும் சமாதானமே சொல்ல முடியாது.

எஸ்.ஐ.ஆர். என்ஜின்களில் நீண்ட

அவருக்குத் தெரியாமலிராது. அப்படியானால் அந்தக் கஷ்டங்களும் தொல்லைகளும் ஏற்படாமல் தடுப்பதற்கு மிஸ்டர் ரெயினால்ட்ஸ் என்ன செய்தார்?

பத்திரிகைகளுக்கு அறிக்கைகள் அனுப்பினார். ரிடயர் ஆன டிரைவர்களும் பயர்மேன்களும் 'தாற்காலிக'மாய்த் தேவை என்று விளம்பரம் செய்தார். பல வண்டிகளை ரத்து செய்தார். எச்சரிக்கை நோட்டீஸுகள் விட்டுக் கொண்டிருந்தார் - மற்றபடி என்ன செய்தார்?

**வே**லை நிறுத்தம் கூடாது; சந்தேக

யில்லை. அதிலும் சுதந்தர 'யாவின் ஆரம்ப காலத்தில் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்யவே கூடாது.

ஆனால் நிர்வாகிகளும் அ ரிகளும் வேலை நிறுத்தத்தை வருந்தி ழைக்கவும் கூடாது.

"திருடக் கூடாது" என்று சாஸ்திரம் சொல்கிறது; சட்டம் விதிக்கிறது. திருட்டைத் தடுப்பதற்குப் போலீஸாரும் இருக்கிறார்கள். – ஆனால் இதையெல்லாம் நம்பி வீட்டுக் கதவுகளைத் திறந்து போட்டு விடலாமா? அப்படிச் செய்வது, "திருடனே! வருக! வருக!" என்று வருந்தி அழைப்பதாகாதா?

"வேலை நிறுத்தம்" ஒரு திருடன். அவன் நாட்டின் உற்பத்திச் செல்வத்தைக் கொள்ளை கொள்கிறான். வேலை நிறுத்தத்தினால் தேசமும் சமூகமும் எவ்வளவோ கஷ்ட நஷ்டங்களை அடைகின்றன.

ஆனாலும் வேலை நிறுத்தம் வந்தே தீரும் படியான நிலைமையை யாரும் ஏற்படுத்தக் கூடாது.

சில சமயம் சர்க்காரும் அதிகாரிகளும் அம்மாதிரி நிலைமையை ஏற்படுத்துகிறார்கள்.

**கோ**யமுத்தூரில் மூன்று மாதம் நடந்த முப்பதினாயிரம் தொழிலாளர் வேலை நிறுத்தத்தைப் பற்றி நேயர்களுக்குத் தெரியும். அதைப் பல முறை நாம் பலமாகக் கண்டித்தும் இருக்கிறோம். ஆயினும் அந்த வேலை நிறுத்தத்தை வருந்தி அழைத்தவர்கள் நமது சென்னை சர்க்காரின் மந்திரிமார்கள் என்பதைச் சொல்லியாக வேண்டும்.

ஆலைத் தொழிலாளரின் சம்பளத்தையும் வேலை அளவையும் நிர்ணயிப்பதற்காக ஒரு ஜட்ஜைச் சென்னை சர்க்கார் மத்தியஸ்தராக நியமித்தார்கள். அவருடைய தீர்ப்பின்படி 14 ரூபாய் சம்பளம் பெற்றுப் பஞ்சு பொறுக்கும் வேலை செய்த கிழவியின் சம்பளம் ரூ. 26 ஆயிற்று! மாதம் 26 ரூபாய் சம்பளம் வாங்கிய தொழிலாளிக்கு வேலை அளவு அதிகம் ஆயிற்று! அந்த அளவின்படி வேலை செய்தால் பதினாயிரம் தொழிலாளிகளுக்கு வேலை போவதாயிற்று!

இத்தகைய அழகான தீர்ப்பை முன்யோசனையின்றிச் சென்னை சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வந்தபடியினாலேயே முப்பதினாயிரம் ஆலைத் தொழிலாளிகளின் வேலை நிறுத்தமும் அதன் பயனாகக் கோடி கோடி கஜம் துணி உற்பத்தி நஷ்டமும் பண நஷ்டமும் நேர்ந்தன.

பதினாயிரம் தொழிலாளருக்கு வேலையில்லாமல் செய்யக்கூடிய எந்த ஏற்பாடும் குழப்பத்தை விளைவிக்கும் என்று அரசியல் வாதிகளாகிய மந்திரிகளுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அதற்குத் தகுந்தபடி முன்யோசனையுடன் மத்தியஸ்தரின் தீர்ப்பை அமுல் நடத்தியிருக்க வேண்டும்.

**ஆ**ற்றில் வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. ஒருவன் அந்த ஆற்றைக் கடக்க விரும்பினான். ஆற்றின் ஆழம் என்ன என்று ஒரு என்ஜினியரை விசாரித்தான். "சராசரி ஆழம் நாலரை அடி!" என்று என்ஜினியர் சொன்னார். அதை நம்பி அந்த மனிதன் ஆற்றில் இறங்கினான். பாதி வரையில் இரண்டு அடி மூன்று அடி ஆழந்தான் இருந்தது. திடீரென்று எட்டு அடி ஆழம் ஆகி விட்டது. நீந்தத் தெரியாத அம்மனிதன் வெள்ளத்தில் மூழ்கிக் காலமானான்.

சர்க்கார் நியமிக்கும் மத்தியஸ்தர்கள், கமிட்டிகள், கமிஷன்கள் – இவர்கள் செய்யும் தீர்ப்பு பெரும்பாலும் என்ஜினியர் சராசரி ஆழம் சொன்னது போலத்தானிருக்கும்.

சிந்தனா சக்தி உள்ள அரசாங்க மந்திரிகள் யோசித்துக் குறைபாடுகளை நீக்கித் தீர்ப்பை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும்.

**ர**யில்வே கம்பெனி ஊழியர்களின் சம்பள விகிதங்களைப் பற்றி விசாரித்து நிர்ணயிப்பதற்காக இந்திய சர்க்கார் ஒரு கமிஷன் நியமித்தார்கள். இந்த சம்பளக் கமிஷன் விசாரணை நடத்தி முடிவுகளைத் தெரிவித்தது. அந்த முடிவுகள் சில ரயில்வே ஊழியர்களுக்கு நியாயம் செய்தன; சிலருக்கு நியாயம் செய்யவில்லை; வேறு சிலருக்கு அநியாயமே செய்து விட்டன.

முக்கியமாக, எஸ்.ஐ.ஆர். ரயில்வேயைச் சேர்ந்த என்ஜின் டிரைவர்களுக்கும் பயர்மேன்களுக்கும் மேற்படி சம்பளக் கமிஷன் அநியாயம் செய்து விட்டது என்று சொல்லலாம்.

பின் வரும் மாதச் சம்பள ஜாபிதாவைப் பாருங்கள் :–

| உத்தியோகம் | சம்பளக் கமிஷன் சிபார்சுக்கு முன் | சம்பளக் கமிஷன் சிபார்சுப்படி | விளைவு |
|---|---|---|---|
| 1. குமாஸ்தா | ரூ. 25 முதல் ரூ. 40 வரை | ரூ. 55 முதல் ரூ. 130 வரை | 120 சதம் அதிகம் |
| 2. பிட்டர் | ரூ. 25 | ரூ. 55 | 120 ச.அ. |
| 3. கண்ட்ரோலர் | ரூ. 80 | ரூ. 200 | 150 ச.அ. |
| 4. காங்கி ஆள் | ரூ. 13 | ரூ. 30 | 250 ச.அ. |
| 5. கார்டு | ரூ. 45 | ரூ. 60 | 33.13 ச.அ. |
| 6. பயர்மேன் | ரூ. 42½ | ரூ. 40 | 27½சதம் குறைவு |
| 7. டிரைவர் | ரூ. 76 (எம்.எஸ்.எம்.) | ரூ. 60 | 27 ச.கு. |
| | ரூ. 100 (எஸ்.ஐ.ஆர்.) | ரூ. 60 | 40 ச.கு. |

இந்த ஜாபிதாவைப் பார்த்தவுடனே பயர்மேன்களுக்கும் டிரைவர்களுக்கும் இழைக்கப்பட்டுள்ள அநீதி தெரிய வரும். ரயில்வே சம்பந்தமான உத்தியோகங்களில் மிகவும் முக்கியமானவையும் கஷ்டமானவையும் பயர்மேன் - டிரைவர் வேலைதான் என்று எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள். மற்ற வேலைகளுக்கெல்லாம் சம்பளம் உயர்த்தியிருக்க அந்த வேலைகளுக்கு மட்டும் சம்பளம் உயர்த்தவில்லை. உயர்த்தாதது மட்டுமா? சம்பளத்தைக் குறைத்தே இருக்கிறது?

ஏன் தெரியுமா? இந்தியாவிலுள்ள மற்ற ரயில்வேக்களில் பயர்மேன்களுக்கும் டிரைவர்களுக்கும் சம்பளம் ரொம்பக் குறைவாயிருந்ததாம். அதைக் கொஞ்சம் அதிகமாக்கி மாதம் ரூ. 60 என்று தீர்மானித்தார்களாம்.

ஆனால் எம்.எஸ்.எம்., எஸ்.ஐ.ஆர். இரண்டிலும் ஏற்கெனவே சம்பளம் அதிகமாயிருந்தது. அதைப் பற்றிக் கமிஷன் கவனிக்க முடியுமா? முடியாது! இந்தியா பூராவுக்கும் சராசரிச் சம்பளம் சரிக்கட்ட வேண்டும் என்பதுதான் அவர்களுடைய கவலை. அதை நிறைவேற்றி விட்டார்கள்!

இதே சராசரி சம்பளக் கணக்கை முன்னிட்டுத்தான் எஸ்.ஐ.ஆர். டிரைவர்களும் பயர்மென்களும் சம்பளத்தைப் பற்றி அதிகமாய்ப் புகார் சொல்ல முடியவில்லை. சம்பள விஷயத்தில் ஏற்பட்ட ஆத்திரத்தையும் கோபத்தையும் வேறு துறையில் காட்டினார்கள். "பதினாலு மணி நேரம் சேர்ந்தாற்போல் நெருப்படியில் எப்படி இருப்போம்? எங்களுக்கும் எட்டு மணி நேர வேலை கொடுங்கள்!" என்று கேட்டார்கள்; மகஜர் எழுதினார்கள்; தீர்மானம் செய்து அனுப்பினார்கள்; ஒன்றுக்கும் கேள்வி முறையில்லாமற் போகவே, எட்டு மணி நேரம் ஆனவுடனே என்ஜினிலிருந்து இறங்கிச் சென்றார்கள்.

மிஸ்டர் ரெயினால்ட்ஸ் துரை கொஞ்சம் கற்பனா சக்தி உடையவராயிருந்தால், பிறருடைய மன வேதனையை உணரும் சக்தி உள்ளவராயிருந்தால் அவரும் அனுதாபப்பட்டிருப்பார். சட்டத்தையும் விதியையும் சம்பளக் கமிஷன் சிபார்சையுமே நம்பியிராமல் டிரைவர்களையும் பயர்மேன்களையும் நேரில் சந்தித்துப் பேசியிருப்பார். தம்முடைய அநுதாபத்தைத் தெரிவித்திருப்பார். பரிகாரமும் தேடுவதாக உறுதி கூறியிருப்பார். ஏதோ ஒரு பரிகாரமும் தேடிக் கொடுத்திருப்பார்.

எஸ்.ஐ.ஆர். தொழிலாளிகளின் கம்யூனிஸ்ட் ஆதிக்கத்துக்கு உட்படாதவர்கள் என்ஜின் டிரைவர்களும், பயர்மேன்களும், கார்டுகளுமே. இவர்கள் எந்த அரசியல் கட்சியின் ஆதிக்கத்துக்கும் உட்படாமல் தங்களுக்கு என்று தனியாகச் சங்கம் ஏற்படுத்தி நல்ல முறையில் நடத்தி வருகிறார்கள். அப்படிப்பட்ட அருமையான, பொறுப்பு வாய்ந்த, கடமையில் பற்றுள்ள ஊழியர்களை வேலை நிறுத்த ஊழலில் இறங்கும்படி செய்த பெருமை மிஸ்டர் ரெயினால்ட்ஸுக்கே உரியதாகும். ஆகையினாலேயே அந்தப் புண்ணிய புருஷர் போகாரா என்று கேட்கிறோம். போகும் போது பெருமையுடன் போவதுதானே புண்ணியவான்களுக்கு அழகு! ●

**(கல்கி, ஜூன் 6, 1948 இதழில் அமரர் கல்கி எழுதியது)**

**சென்னை மைலாப்பூரில் உள்ள தெற்கு மாடவீதி காய்கறி வியாபாரிகளை அந்த இடத்திலிருந்து காலி செய்து சித்திரக்குளம் பகுதியில் குடியேற்ற மாநகராட்சி முடிவெடுத்தது. இம்முடிவை எதிர்த்து வியாபாரிகள் கொடுத்த வழக்கை உயர்நீதி மன்றம் தள்ளுபடி செய்துவிட்டது. இதனால் தெற்கு மாட வீதி சுத்தமாகும் என்றாலும் சித்திரக்குளம் பகுதி குப்பை மேடாகாதா என்கிறார்கள் அப்பகுதி மக்கள்!**

# சித்திரக்குளத்துக்குச் சித்திரவதையா?

மயிலையைப் பொறுத்தவரை லஸ் பகுதியில் ஏற்கெனவே ஒரு காய்கறி மார்க்கெட், 'தண்ணித்துறை மார்க்கெட்' என்ற பெயரில் இயங்கி வருகிறது. என்றாலும் அங்கு காலையிலிருந்து மதியம்வரைதான் விற்பனை. தெற்கு மாட வீதி காய்கறி பிஸினஸ் மாலையில்தான் வெகு சுறுசுறுப்பாக நடக்கிறது.

சுமார் இருபது வருடங்களாக மைலாப்பூரில் வசித்து வரும் கண்ணம்மா சுந்தர் நீதிமன்றத் தீர்ப்பை வரவேற்கிறார். "வர வர தெற்கு மாட வீதி என்பது நடக்கும்படியாகவே இல்லை. வண்டி ஓட்டுவது என்பது பெரும் அவஸ்தை. பல வியாபாரிகள் கிட்டத்தட்ட தெருவின் மையப்பகுதிவரை காய்கறிகளைப் பரப்பிக் கொண்டிருக்கிறார்கள். மாலை நான்கு மணியிலிருந்து இரவு எட்டு மணி வரை அதை ஒரு வழிப்பாதையாக மாற்றியும் நிலைமையில் முன்னேற்ற மில்லை. இந்த மார்க்கெட்டை வேறு பகுதிக்கு மாற்றினால் கபாலி கோவிலைச் சுற்றியுள்ள தெருக்களில் மக்கள் கொஞ்சம் காலாற நடக்கலாம்!" என்கிறார் சந்தோஷத்தோடு.

ஆனால் சித்திரக்குளம் பகுதியில் வசிக்கும் லலிதா ரகுபிரசாத், "சித்திரக் குளத்தை சுற்றியுள்ள வீதிகள் அகலக் குறைவானவை. இந்த நிலையில் காய்கறி மார்க்கெட் இங்கே வந்தால் தெருக்கள் மிகவும் நாசமத்துப் போய் விடும். மழைக்காலமென்றால் கேட்கவே வேண்டாம். இங்கு வரும் சாக்கடை நீரும் தேங்கத் தொடங்கி, சாலையெல்லாம் ஆறுகள் போல காட்சியளிக்கும். இங்கு வியாபாரிகளும் மெட்ரோ வாட்டரைப் பயன்படுத்தத் தொடங்கினால் எங்களுக்குக் கிடைக்கும் சப்ளை குறைந்து விடும். வம்பு



• லலிதா ரகுபிரசாத்



• கண்ணம்மா சுந்தர்



• கவுன்சிலர் ராணி கிருஷ்ணன்

தும்புக்குப் போகாத ஜனங்கள் என்பதால் எதிர்க்க மாட்டார்கள் என்ற தைரியத்தில் மாநகராட்சி இப்படி ஒரு முடிவை எடுத்திருக்கிறது என்று தோன்றுகிறது!'' என்கிறார்.

கபாலி கோயில் குளத்து நீரைத் தங்கள் அசுத்தங்களை களைவும் தெற்கு மாட வீதிக் காய்கறி வியாபாரிகள் பயன்படுத்துகிறார்கள் என்று கணிசமானவர்கள் குறிப்பிட்டார்கள். இடமாற்றத்திற்குப் பிறகு அவர்கள் இதே செயலைச் செய்து சித்திரக் குளத்தை (மேலும்) அசுத்தமாக்கக் கூடும் என்ற பயமும் நிலவுகிறது.

மற்றவர்கள் எதிர்ப்பது ஒரு புறமிருக்க, (சித்திரக் குளத்துக்கு உரிமை உள்ள ஸ்ரீ கேசவப் பெருமாள் தேவஸ்தானமும் தங்கள் பகுதிக்கு காய்கறி மார்க்கெட் மாற்றப்படுவதை எதிர்க்கிறது.) மாநகராட்சியின் கவுன்சிலரே இந்த மாற்றத்தை ஆதரிப்பதாகத் தெரியவில்லை. த.மா.க. வைச் சேர்ந்த கவுன்சிலர் ராணி கிருஷ்ணன் ''தெற்கு மாட வீதி மார்க்கெட் மாற்றப்பட வேண்டும்தான். ஆனால் சித்திரக்குள சாய்ஸ் சரியில்லை. அருகில் உள்ள மந்தைவெளி மார்க்கெட்டை ஒரு வட இந்தியர் அடிமாட்டு விலைக்கு வாங்கிச் சொந்தம் கொண்டாடுகிறார். ராயபுரத்தில் செய்தது போல மாநகராட்சி இந்த மார்க்கெட்டை வாங்கிக் கடைகள் கட்டி விட வேண்டும். மாறாக சித்திரக்குளப் பகுதிக்கு மாற்றினால் ஒருபுறம் வேடி சிவசாமி பள்ளி, மறுபுறம் கேசவ பெருமாள் கோயில் இவற்றுக்கு நடுவே மார்க்கெட் என்றால், சிறு பொறிகள் கூடக் கலவரங்களுக்கு வித்திடலாம். தவிர சித்திரக் குளத்தைச் சுற்றி நாற்புறமும் சுற்றுச் சுவர் எழுப்பி அத்தனை குப்பை கூளங்களையும் குளத்துக்குள் கொட்டினால், தூர் வாரப்பட்ட நோக்கமே மறைந்து விடும். என்னுடைய இந்தக் கருத்துக்களை மாநகராட்சி மன்றத்திலும் முன் வைத்திருக்கிறேன்!'' என்கிறார். ●

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி



# நோபல் நாவல்!

**ஜோ**ஸ் சாரமாகோ என்கிற போர்ச்சுக்கிசிய எழுத்தாளருக்கு, இந்த ஆண்டுக்கான நோபல் இலக்கியப் பரிசு கொடுக்கப்பட்டிருக்கிறது.

பெரிதும் பரபரப்பாகப் பேசப்பட்ட இவரது நாவல் 'ரிகார்டோ ரீஸின் இறந்த வருடம்', 1936ல் போர்ச்சுக்கிசிய நாட்டில் நிலவிய ஏதேச்சாதிகாரத்தைப் பின்னணியாக வைத்து எழுதப் பட்டது. அதற்குப் பிறகு வெளியான இவரது நாவல்கள் மூன்றுமே இவருக்குப் பெயரும், புகழும் தேடித் தந்தன.

சாரமாகோவின் நாவல்கள் சுமார் இருபத்தைந்து மொழிகளில் பெயர்க்கப்பட்டிருக்கின்றன. காலத்தால் மறக்கப்பட்ட நிகழ்வுகளையும், வீரர்களையும் தமது நாவல்களில் படைப்பவர் சாரமாகோ என்று போர்ச்சுக்கல் நாட்டில் இவரைக் கொண்டாடுகிறார்கள்.

நாட்டின் தெற்குப் பகுதியான அலென் ஜோவில் மிக மிக எளிய ஏழைக் குடும்பத்தில், 1922 நவம்பர் 16ஆம் தேதி பிறந்தவர் சாரமாகோ. கல்லூரிப் படிப்புக்குப் பகுதி நேர வேலை செய்து சம்பாதிக்க வேண்டியிருந்தது. விவசாயிகள், தொழிலாளிகள், கொடுமைக்கு ஆளாகிப் பாதிக்கப்பட்டவர்கள் என்று, இவரது கதாபாத்திரங்கள் எல்லாருமே சமுதாயத்தின் அடித்தட்டு மக்கள். சிந்தனையாலும், எழுத்தாலும் இவர் தீவிர கம்யூனிஸ்ட்.

கனரி தீவில் வாழும் சாரமாகோவுக்கு இப்போது வயது 76. ஆனால் 60 வயது வரை இவர் எழுதிய நாவல்களை யாரும் பெரிதாகக் கண்டு கொள்ளவில்லை. இந்தப் பதினைந்து வருடங்களில் ஏராளமான பரிசுகளை வாங்கிக் குவித்து விட்டார்.

''நான் ஒன்றும் ஜீனியஸ் இல்லை. ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறேன்!'' என்கிறார், அடக்கமாக. ●

— சித்தார்த்



# புற்றுநோயா!
# பக்க விளைவு இல்லாத தெய்வீக மூலிகை மருத்துவம்!



புற்று நோய் தீர்க்கப்பட முடியாத ஒன்று என்ற கருத்து இன்று மக்களிடமும், மருத்துவர்களிடமும் நிலவி வருகின்றது. புற்று நோயில் இரத்தப் புற்று, தசைப்புற்று, எலும்புப் புற்று என பல வகைகள் உள்ளன. இரத்த அணுக்கள் தேவைக்கு குறைந்தோ அதிகரித்தோ மாறும் போதும், இரத்தத்தின் அளவு தேவைக்கு குறைந்திருக்கும் சமயத்திலும், கழிவுப் பொருட்கள் வெளியேறாமல் இரத்தத்தில் தங்க நேரிடும் போதும், இரத்த அணுக்களை தாக்கக் கூடிய கிருமிகள் இரத்தத்தில் சேரும் போதும், சிகரெட், மது, புகையிலை போன்றவைகளை உபயோகிப்பதாலும் இரத்தப் புற்று நோய் உண்டாகும். தாடைப் புற்று, கழுத்துப் புற்று, லிங்கப் புற்று, யோனிப் புற்று, கர்ப்பப்பை புற்று, கல்லீரல் புற்று போன்றவைகள் தசைகளின் செல்களில் திறன் குறையும்போது ஏற்படுகின்றன. இரத்தக் கோளாறுகளே எலும்பு மஜ்ஜைகளிலும் புற்று நோய்களை உண்டாக்குகின்றன. இத்தகைய புற்று நோய்களை வேப்பிலை, வில்வம், துளசி, அருகு, அத்தி போன்ற தெய்வீக மூலிகைகள் மற்றும் தூய்மையான இயற்கை உணவுகளான பச்சை காய்கறிகள், பழங்கள் முதலானவைகளை உண்பதன் மூலம் எவ்வாறு குணமடையச் செய்யலாம் என்பது பற்றிய விரிவான ஆலோசனை கீழ்க்கண்ட முகவரியிலும், முகாம்களிலும் கிடைக்கும்.






தெய்வீக மூலிகை வைத்தியர்கள்

**தலைமை முகவரி : Dr. M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

**சென்னை கிளை** : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8

✆ : 6424285, 6427638

**Singapore Enquiry : Mrs. Renuka, Blk 101, #04,-176, Jurong East Street-13, Singapore - 600 101. ✆ : 0065-5621218**

## 1998 வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மருந்தினைப் பெற முகாம் விவரம்.
## (முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| தேதி | ஊர் | நேரம் / இடம் |
|---|---|---|
| 2-ந் தேதி | வேலூர் (N.A.) | பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (கங்கா), 16, ஆஃபீசர்ஸ் லைன், ✆ : 0416 / 23060. |
| 2-ந் தேதி | காஞ்சிபுரம் | மாலை 5 to 6 ராஜும் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு, ✆ : 04112 / 22519. |
| 1,3,10,17,18,19,20,27,28-ந் தேதி | சென்னை | காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ✆ : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி | கடலூர் (S.A.D.) | காலை 9 to 11 ஆர்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல், ✆ : 04142 / 30707, 30717 |
| 4-ந் தேதி | விழுப்புரம் | பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ✆ : 04146 / 22962. |
| 4-ந் தேதி | திருவண்ணாமலை | மாலை 5 to 6 ராதா லாட்ஜ் பஸ் நிலையம் எதிரில் ✆ : 04175 / 22536. |
| 8-ந் தேதி | பெங்களூர் | காலை 11 to 12.30 ஹோட்டல் பிராட்வே, (கல்பனா தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட் ✆ : 2266374 |
| 8-ந் தேதி | ஓசூர் | மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ✆ : 04344 / 22699. |
| 8-ந் தேதி | கிருஷ்ணகிரி | மாலை 5 to 6 அமராவதி லாட்ஜ், ✆ : 04343 / 22120. |
| 12-ந் தேதி | சேலம் | காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ✆ : 0427 / 449333. |
| 12-ந் தேதி | ஈரோடு | மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்ஃபோர்டு, பஸ் நிலையம் எதிரில், ✆:0424 / 226611 / 12 / 13 / 14/15/16/17/18 |
| 13-ந் தேதி | கோயம்புத்தூர் | காலை 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ✆ : 0422 / 302211, 302220 |
| 14-ந் தேதி | மதுரை | காலை 9 to 11 ஹோட்டல் கிராண்ட்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு, ✆ : 0452 / 743941 |
| 14-ந் தேதி | தஞ்சாவூர் | மாலை 5 to 6 அசோகா லாட்ஜ், ✆ : 04362 / 30021 / 30022 |
| 15-ந் தேதி | திருச்சி | காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த், (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில், ✆ : 0431 / 460545. |
| 15-ந் தேதி | நாமக்கல் | பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ✆ : 04286 / 20433. |
| 22-ந் தேதி | தர்மபுரி | காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ✆: 04342 / 60226. |
| 22-ந் தேதி | திருப்பூர் | பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ✆ : 0421 / 740418. |
| 22-ந் தேதி | உடுமலைபேட்டை | மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், (பஸ் நிலையம் எதிரில் ✆ : 04252 / 24353. |
| 23-ந் தேதி | திண்டுக்கல் | காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, (பஸ் நிலையம் பின்புறம் ✆:27017. |
| 23-ந் தேதி | தூத்துக்குடி | மாலை 5 to 6 ஹோட்டல் ஆல்வின், தேவர் புரம் ரோடு, ✆ : 0461 / 327780 |
| 24-ந் தேதி | திருநெல்வேலி | காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தாபதி, மதுரை ரோடு, ✆ : 0462 / 333312. |
| 24-ந் தேதி | நாகர்கோவில் | பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரண்யா, மீனாட்சிபுரம், ✆: 04652 / 25689. |
| 25-ந் தேதி | விருதுநகர் | காலை 9 to 10 அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு, ✆ : 04562 / 45537. |
| 25-ந் தேதி | கரூர் | பிற்பகல் 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார், ✆ : 63763. |




**தகவல்** : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 23 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

**7-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589**



விரும்பறேன்னு சொல்லிட்டான். இப்ப இதை ரியாஸ்கிட்ட சொல்றதுக்கு முன்னாடி உங்க கிட்ட சொல்றதுதான் நியாயம்னு பட்டுது. நீங்கதான் ஆரம்பத்திலிருந்தே இதை விசாரிச்சிங்க!''

''தாங்க் யு சங்கர். ரியாஸ்கிட்டயே அதை சொல்லிடு. அந்தாளே மேற்கொண்டு விசாரிக் கட்டும். எனக்கு வேற ட்யூட்டி போட்டுட் டாங்க. மேலும் என்னால முடியலைன்னு சொன்ன வங்க, தானாகவே உணர்ந் துக்கிட்டு என் பொறுப்பில நடந்த விசாரணையின் கடைசி விளைவுதான் - முடிவு தான் இதுன்னு உணரட்டும்!''

''அதை ரியாஸ் கட்டா யமா சொல்வார்ன்னு நினைக்கிறேன். அந் தாளைப் பார்த்தா மற்ற பேர் பாராட்டை

சங்கருக்கு அந்தச் செய்தியை எப்படிப் பயன்படுத்துவது என்பது முதலில் தெளிவில்லா மல் இருந்தது. சி.பி.ஐ அதிகாரி ரியாஸிடம் அதை முதலில் சொல்ல வேண்டுமா? இல்லை ப்ரபாகர்ராவிடம்தான் சொல்வது என்று தீர்மானித்தார். அதுதான் கிரமம். ப்ரபாகர் ராவ்தான் இந்த கேசில் ஆரம்பத்திலிருந்து மன்றாடியவர். அவரிடம் முதலில் சொல் வதுதான் நியாயம்.

போனை எடுத்து அவரை வீட்டில் கூப்பிட்டார். ''அந்த ரியாஸ் ரொம்ப லக்கி ஸார். விசாரிக்கத் தொடங்குவதற்கு முன்னாலேயே கேஸ் சால்வ் ஆயிடுச்சு.''

''என்ன சொல்ற சங்கர் நீ?''

''சேகர் ஒப்புக்கிட்டான் ஸார், தான் தான் கொலை செய்ததா!''

''சேகரா? ஆச்சரியமா இருக்குதே?''

''பொதக்குன்னு விழுந்திருச்சு. ஆனந் தின் மனைவி பாரதியை விசாரிக்கப் போனோம். அங்க சேகர் இருந்தான். ஆனந்த் துப்பாக்கி வாங்கினது உங்களுக்குத் தெரியுமான்னு ரெண்டு பேரையும் கேட் டோம். அப்பவே அவன் முகம் மாறிடுச்சு... என்னவோ தெரியலை, ஆபீஸ் வரேன். டீப்ராண்டிக்கா ரெண்டு மூணு தடவை போன்ல கூப்பிட்டு குற்றத்தை ஒப்புக்க

தான் ஏற்றுக்க விரும் பறவரா தெரியலை. சிஸ்டமாட்டிக்கா இங்க் பண்றார்! லூஸ் எண்ட்ஸே கூடாதுங் கறார், உங்க மாதிரி!''

''பார்க்கலாம்!''

ரியாஸ் இரவு எட்டு மணிக்கும் அலு வலகத்தில் இருந்தார் ''ரியாஸ்! கேஸ் முடிஞ்சுருச்சு'' என்றார் சங்கர்.

''எப்படி?''

''உங்க அதிர்ஷ்டம்னுதான் சொல் லணும். சோமசேகர், தான் கொலை செய்ததா போன்ல ஒப்புக்கிட்டான்.''

''இப்ப அவனை சந்திச்சு வாக்குமூலம் வாங்கப் போறேன். நீங்க வரிங்களா?''

''நான் இல்லாமயா?'' என்றார் ரியாஸ்.

ஜீப்பில் போகும்போது ''சோமசேகர் பத்தி மேல் விவரங்கள் சொல்லுங்க சங்கர்.

**சுஜாதா**

நான் இன்னும் ஃபைலைப் பார்க்கலை."

"ஃபைல்ல அவன் பேரே இருக்காது. முழுக்க முழுக்க ஒரு ஆச்சரியமான எதிர் பாராத திருப்பம் இது. சோமசேகர், ஆனந்தின் மனைவியுடைய உறவு. ஒரு மாதிரி முறைப்பையன்னு வெச்சுக்கலாம். பாரதியுடைய தந்தை, கிட்டத்து உறவில் சம்பந்தத்தை விரும்பாததினால அவனை பாரதி கல்யாணம் பண்ணிக்கலைனு தெரியுது."

"அதற்காக ஆனந்தை எதற்குக் கொல்லணும்?"

"விசாரிக்கணும்," என்றார் சங்கர்.



# 14

# ஆர்யபட்டா

**சோ**மசேகர் கொடுத்திருந்த விலாசம் – மல்லேசுவரத்தில் ஐந்தாவது கிராஸின் அருகில் ஒரு ப்ளாட். வாசலில் உற்சாகமாக பேசிக் கொண்டிருந்தவர்கள், போலீஸ் ஜீப் வந்ததும் பேச்சை நிறுத்தி விட்டனர்.

சேகர் பதற்றமில்லாமல் காத்திருந்தான். சிறிய பையில் இரவு மாற்று உடை வைத்திருந்தான். தயார் நிலையில் தலைவாரி தன்னை அலங்கரித்திருந்தான்.

"உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டு இருக்கேன். போலாமா?"

"மிஸ்டர் சேகர், யு வாண்டு டு மேக் ஸ்டேட்மெண்ட்?" என்றார் ரியாஸ்.

"ஸ்டேட்மெண்ட் இல்லை. கன்பெஷன். குற்ற ஒப்புதல். ஆனந்தை நான்தான் கொன்றேன் அன்றைக்கு."

"எதற்காக? காரணம் சொல்ல முடியுமா?"

"காரணம், நான் பாரதியை நேசித்தது தான். ஏன், காதலித்ததுதான்."

அவன் கண்களில் இயல்பாகக் கண்ணீர் நிறைந்தது. "அவளை அவன் நடத்திய விதம் சரியில்லை, எனக்கு மனைவியாகப் போகிறாள் என்று சிறுவயதிலிருந்தே எண்ணியிருந்தவளை மிகவும் அலட்சியப் படுத்தி, கொடுமைப் படுத்தி கவனிக்காமல் தனிமையில் வாட விட்டது. ஆராய்ச்சி ஆராய்ச்சி என்று கருவுற்றவளுக்குச் சரி

யான கவனம் - பராமரிப்பு இல்லாமல் அவளை வாட வைத்து, அழ வைத்து... அந்த விவரங்களைச் சொன்னால் நீங்களே அவனைக் கொன்றிருப்பீர்கள். அதிர்ச்சி அடைவீர்கள்."

"சொல்லுங்கள் பரவாயில்லை."

"எனக்கு ஆனந்த் துப்பாக்கி வைத்திருந்தது தெரியும். அதை எங்கே வைத்திருந்தான் என்பதும் தெரியும். ஆர்யபட்டா அவார்டு விழாவுக்கு அவன் கிளம்பும் தருணத்தில் நான் அங்கே சென்றிருந்தேன். 'நீ பாரதியை நடத்தும் விதம் சரியில்லை. அவளுடைய ஆரோக்கியத்துக்கும் பத்திரத்தும் உறவினன் என்கிற முறையில் நான் பொறுப்பு' என்று சொன்னேன். அவன் அன்று தனக்கு அவார்டு கிடைக்கவில்லை; தன் ஆராய்ச்சிக் கருத்தை யாரோ பயன்படுத்தி விட்டார்கள் என்கிற கோபத்தில் இருந்தான். அதனால் என்னை கன்னா பின்னா என்று பேசினான். பாரதியுடன் நான் கள்ள சகவாசம் வைத்திருப்பதாகவும் பாரதியின் வயிற்றில வளரும் குழந்தை தன்னுடையதா என்று இப்போது சந்தேகம் வருவதாகவும் பேசினான். அதனால்தான் அவளை கவனிக்கவில்லை என்று பைத்தியக்காரன்போல் பேசினான்."

"அப்போது பாரதி இருந்தாளா?"

"இல்லை. சென்னையில் இருந்தாள். நான் உணர்ச்சிவசப்பட்டு, மிகுந்த கோபத்தில் அவனைச் சுட்டு விட்டேன்."

"அதன் பின்?"

"வெளியே வந்து அந்தத் துப்பாக்கியை எதிர்வீட்டுக் கிணற்றில் போட்டு விட்டேன்."

ரியாஸ் சேகரையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"மிஸ்டர் சேகர், உங்களுக்கு ஒரு லாயரின் உதவி தேவைப்படும். நீங்கள் இப்போது சொன்னதை அப்படியே ஒரு ஸ்டேட்மெண்டாக எடுத்துக் கொண்டால் அதைப் பின்னர் நீங்கள் மறுக்கக் கூடாது. அதற்காக."

"அதெல்லாம் தேவையில்லை. ஆனந்தை நான்தான் கொன்றேன். அதற்கான தண்டனையை அனுபவிக்கவே விரும்புகிறேன்.

"உங்கள் விரல் ரேகையை எடுத்துக் கொள்ளலாமா? நீங்கள்தான் சுட்டீர்கள் என்றால் துப்பாக்கியில் உங்கள் விரல் ரேகை அடையாளம் இருக்க வேண்டுமல்லவா?"

"இருக்கலாம். ஆனால் ட்ரிக்கரில் என் கைக்குட்டையால் துடைத்தது ஞாபகம் வருகிறது."

"இல்லை. சில விரல் அடையாளங்கள் எங்களுக்குக் கிடைத்திருக்கின்றன."

"நான் தாரானமாக என் விரல் ரேகையைப் பதிவு செய்து தருகிறேன்."

"சேகர், எங்களுக்கு வியப்பாக இருக்கிறது. திடீர் என்று குற்றத்தை ஒப்புக் கொள்ள எப்படித் தீர்மானித்தீர்கள்? எந்த விதத்திலும் நாங்கள் உங்களைச் சந்தேகப்படாதிருக்கும்போது எங்கள் வேலையை எளிதாக்கி விட்டீர்கள்!"

"நீங்கள் இன்று பிற்பகல் பாரதியிடம் வந்து ஆனந்தின் துப்பாக்கி பற்றி எங்களிடம் விசாரித்தபோது, சி.பி.ஐ தீவிரமாகக் கேசை எடுத்துக் கொண்டு விசாரிக்கப் போகிறது என்று செய்தி வந்தபோது, இனி அவர்கள் மெல்ல மெல்லக் கண்டுபிடித்து என்னிடம் வருவதற்கு - அதிக நாட்களில்லை என்று தெளிவாகத் தெரிந்து விட்டது. இனியும் கொலைக் குற்றத்துடன், அதை மூடி மறைத்த குற்றத்தையும் செய்ய விரும்பவில்லை. அதற்கு என் மனச்சாட்சி இடம் கொடுக்கவில்லை. நான்தான் ஆனந்தைக் கொன்றேன். நான்தான் நான்தான். அவன் மிகச் சிறந்த விஞ்ஞானியாக இருக்கலாம். ஆனால் ஒரு மோசமான கணவன்.

---



**"சில ஃபைல்ல மகாலெட்சுமி படமும் சில ஃபைல்ல வெங்கடாஜலபதி படமும் ஒட்டி வச்சிருக்கீங்களே...?"**

**"லெட்சுமி படம் ஒட்டினது சம்திங் வரக்கூடியது; வெங்கடாஜலபதி படம் உள்ளது கோவிந்தாதான்!"**

**- சீர்காழி வி.ரேவதி**

---

பாரதியை அவன் வீணடித்த விதத்தை இனியும் என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. அதனால்தான் கொன்றேன். எழுதிக் கொடுத்து விடுகிறேன்."

"சங்கர்! இவரை போலீஸ் கஸ்டடியில் வைத்துக் கொள்ளலாமா?... சேகர், நீங்கள் ஒரு லாயரை கலந்தாலோசிப்பது நல்லது. உங்கள் ஸ்டேட்மெண்ட்டை அவர்கிட்ட கலந்தாலோசித்துக் கொடுங்க. மேலும்... பாருங்க, நீங்க எங்ககிட்ட ஒத்துக்கறது ஸிஆர் பிஸி படி செல்லாது. அதை நாங்க ரிகார்டு பண்ணிக்கவும் மாட்டோம். இது எக்ஸட்ராஜுடிஷியல் கன்பெஷன் ஆயிரும். காலைல நல்லா யோசிச்சு வையுங்க. ஒரு மாஜிஸ்ட்ரேட் முன்னால செக்ஷன் 164ம் படி வாக்குமூலம் கொடுக்க ஏற்பாடு செய்யறோம்!" என்ற ரியாஸ், "அதுவரை இவருக்கு ஒரு வாரண்ட் ஆப் அரஸ்ட் தயார் செய்ங்க. மாஜிஸ்ட்ரேட்டுக்கு ஏற்பாடு செய்யுங்க!" என்றார் சங்கரிடம்.

"அதுக்குள்ள நான் தப்பிச்சுப் போய்ட்டா?"

"போக மாட்டிங்க. உங்க மேல நம்பிக்கை இருக்குது," என்றார் ரியாஸ்.

சங்கர் ரியாஸை வினோதமாகப் பார்த்தார்.

"எதுக்கும் ஒரு லாயரை கலந்தாலோசிக்கிறது உங்களுக்கு நல்லது. எங்களுக்கும் நல்லது" என்றார் ரியாஸ்.

"சரி. நாங்க வரட்டுமா!"

சேகர், "நானும் உங்ககூட வரேன்" என்றான்.

"ஏன்?"

"எனக்கு இந்த இரவு தனியாக இருக்க விருப்பமில்லை."

"யாருக்காவது பயப்படுகிறீர்களா?"

"இல்லை. மனம் மாறி சொன்னதையெல்லாம் வாபஸ் வாங்கி விடுவேனோ என்று பயப்படுகிறேன்."

"அது சாத்தியமாகத் தோன்றவில்லை."

"எனக்கு அதற்கு எப்படிப்பட்ட தண்டனை கிடைக்கும்? மரண தண்டனையா?"

"உணர்ச்சி வசப்பட்ட ஒரு கணத்தில் முன் தீர்மானம் இல்லாமல் கொன்றீர்கள் என்றால் மேன்ஸ்லாட்டரில் சிறைத் தண்டனைதான் கிடைக்கும்."

"எத்தனை வருஷம்?"

"சொல்ல முடியாது. ஏழு எட்டு வருஷம்."

"என்ன தண்டனையாக இருந்தாலும் அனுபவிக்கிறேன்" என்றான்.

"சேகர் யு மஸ்ட் ஸீ எ லாயர். போலீசை திசை திருப்புவதும் தப்பான தகவல் தருவதும் ஒரு குற்றம்!" என்றார் ரியாஸ்.

"புரியவில்லை! நான் எதற்காக உங்களுக்குத் தப்பான தகவல் தருவேன்? குற்றத்தை நேரடியாக ஒப்புக் கொள்கிறேன்."

"சேகர் ரொம்பக் குழப்பத்தில் இருக்கிறீர்கள். காலை சந்திக்கலாம். உங்கள் வாக்குமூலத்தை ஒரு மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் கொடுக்க வேண்டும். அதற்காக ஏற்பாடு செய்றோம்" என்றார் ரியாஸ்! "சங்கர் போகலாம் வாருங்கள்!"

"நான்கூட வருகிறேனே பயமாக இருக்கிறதே!"

"மிஸ்டர் சேகர்!" என்று அழுத்தமாக அவர் கையைப் பிடித்து "நீங்கள் எதற்கும் பயப்பட வேண்டாம்!"

"நீங்கள் எங்கே போகிறீர்கள் என்று தெரிய வேண்டும்!"

"ஷட் அப் மேன்!" என்று அதட்டினார்.

(தொடரும்)

---




- கை கொடுக்கும்போது மூன்று விரல்களை மட்டும் குலுக்குபவர்கள் மனம் விட்டுப் பேச மாட்டார்கள்.
- இரண்டு கைகளால் குலுக்குவோர் அதிகமான அன்பைப் பொழிவார்கள்.
- பட்டும் படாமலும் கை குலுக்குவோர் தம்முடைய நலத்திற்காக எதையும் செய்வார்கள்.
- கைகளை மிகவும் அழுத்திக் கை குலுக்கு பவர்கள் உறுதியான நெஞ்சம் உடையவர்கள்.

– மகாராம் திருப்பதி

பெசன்ட் நகர் க்ரீமடோரியத்தில் ஒரு சிறு தண்டவாளத்தின் மீது பயணப் பட்டு, வைகுந்தனின் உடல் மின்சாரச் சிதையின் தணல் ஜ்வலிஜ்வலிப்பில் ஐக்கிய மாகி ஷட்டர் மூடிய பின்புதான் அகல்யா வந்தாள்.

அரக்கப்பறக்க அவள் படியேறியபோது கூடவே அவள் மகன் தியானேஷ் கையில் ஒரு பெரிய ரோஜா மாலையின் இதழ்கள் உதிர உதிர மூச்சிறைக்க இரண்டு படிகளை ஒரே தாண்டில் தாண்டி அவளை முந்த முயன்றான்.

வெளியே, வாசலில், படிகளில் என்று பெருங் கூட்டம். திரும்புகின்ற கூட்டம்.

ஒரு காந்திக் குல்லாய் அவர்கள் இரு வரையும் பார்த்து எல்லாம் முடிந்து விட் டது என்பது போல் தலையாட்டியது.

''பாடி ஓவனுக்குள்ளற போயிடுச்சு'' பக்கத்தில் வந்த ஒரு பன்னீர்ப் புகையிலை திருவாய் மலர்ந்தார்.

"ச்சே" என்று தியானேஷ் மறு கை உதறி சத்தமாக அலுத்துக் கொண்டான்.

"எத்தனை மணிக்கு எஸ்.டி.டி. வந்தது?" என்று சாவகாசமாக ஒரு மலையாளத் துவர்த்துத் துண்டு போர்த்திய தொந்திக் காரர் அவளை விசாரித்தார்.

'இது வேறயா?' என்று மனசில் சலித்த வாறு அவள் படியேறினாள்.

சதாப்தி எக்ஸ்பிரஸில் டிக்கெட்டே நானூறு ரூபாய். பணம் தொலைகிறது! என்ன பாடு... எவ்வளவு பதட்டம்... என்ன தவிப்பு.

கடைசியாக ஒரு முறையாவது இந்த அறுபது வயசில் கூட நாணமுள்ள கன்னிப் பெண் போலச் சிரிக்கும் அவர் முகத்திட மிருந்து ஓர் இறுதி விடை பெற்றுக் கொள்ள மாட்டோமா என்று மனசு ஏங்கியது!

அகல்யாவின் கண்கள் எல்லோரையும் ஒதுக்கிக் கொண்டு ஆனந்தவல்லியைத் தேடின.

சாஸ்திரமோ சம்பிரதாயமோ காலமான வைகுந்தனின் மனைவி என்று ஆனந்த வல்லியைத் தடுத்து நிறுத்த முடியாது. தெரி யும். அவள் வந்திருப்பாள்.

அதோ. எல்லோருக்கும் கடைசியில் உறுமுகின்ற மின்சாரச் சிதையின் மூடிய கதவைப் பார்த்தவாறு 'ஸ்பெக்'ஸை உயர்த் திச் சரி செய்கிறாள் ஆனந்தவல்லி.

யார் யாரை இடித்துக் கொண்டு போகிறோம் என்ற நினைவின்றி சரசர வென்று அகல்யா அவளை நெருங்கினாள். கையை மேலே உயர்த்தி ஆனந்தவல்லியின் தோளைத் தொட்டாள்.

ஆனந்தவல்லி கை உயர்த்த வேண்டிய அளவு உயரம். ஆறடி. அகல்யா நாலரை அடி. உயர்நிலைப் பள்ளியில் அவர்கள் பெயர் கல்லிவர், லில்லிபுட்...

முகம் திரும்பி ஆனந்தவல்லி அகல் யாவைக் குனிந்து பார்த்தபோது, அவள் உதடு லேசாகக் கோணியது. இமைகள் இரண்டு மூன்று முறை படபடத்தன. நெற்றி சற்றே சுளிந்து பின் நேராயிற்று.

உடனே ஆனந்தவல்லியின் பௌருஷ கம்பீரம் மீண்டு விட்டது.



**''தலைவர் தன்னை எப்பவும் கேர் ஆப் பிளாட்பாரம்னு சொல்லிக்கறாரே... ஏன்?''**

**''இது தெரியாதா? நடைபாதைல நிறைய கடைகள் கட்டி வாடகைக்கு விட் டிருக்கிறதைத்தான் அப்படிச் சொல்றார்!''**

**– அம்பை தேவா**

---

"எப்ப எஸ்.டி.டி. கெடைச்சது?" அவள் குரலில் நடுக்கமில்லை.

"ஏழரைக்கே கெடைச்சுட்டுது. சதாப்தி யில தான் பொறப்பட்டேன். கரெக்ட் டயம்... இங்க வந்து டிலே. ராஜ்பவன் வழியிலே நேர வந்திருந்தா கடைசியா மொகத்தைப் பாத்திருப்பேன்."

துக்கம் அகல்யாவின் தொண்டையை அடைத்தது.

''வழியிலே ட்ராபிக் டைவர்ஷன். யாரோ சென்ட்ரல் மினிஸ்டர் வர்றாராம். பந்தோபஸ்துக்காகச் சுத்தி வளைக்க வச்சுட் டாங்க. எனக்குக் கொடுத்து வக்கலே."

அகல்யாவின் கண்களிலிருந்து நீர் முத்துக்கள் ஒவ்வொன்றாக உருண்டன.

வைகுந்தன் இவளையும் இவள் வைகுந் தனையும் எவ்வளவு பரிசுத்தமாக நேசித்த

னர் என்று ஆனந்தவல்லி அறிவாள்.

உயரத்தூக்கித் தன் தோளில் பதிந்திருந்த அகல்யாவின் கையை அவள் அழுத்திப் பிடித்தவாறே விலக்கி இறுகப்பற்றினாள்.

அவள் மனோ உணர்வுகள் தெரிந்தது போல ஆனந்த வல்லி வருத்தமாக, ஆதரவாகப் புன்னகை செய்தாள்.

அகல்யாவுக்குக் குடல் பிசைந்தது.

இவள் இறுகக் கட்டிப் பிடித்துக் கதறப் போகிறாள் என்று ஆனந்தவல்லிக்குத் தோன்றியதோ என்னவோ. அகல்யாவின் புஜத்தை அவள் அழுந்தப் பற்றினாள்.

''கடைசியிலாவது வாய்விட்டுப்



**''தூங்கியெழுந்தவுடனே காபி சாப்பிடுவீங்களா, டீ சாப்பிடுவீங்களா?''**

**''எங்க ஆபீஸ்ல அந்த வசதியெல்லாம் கிடையாது. வீட்டுக்கு வந்துதான் சாப்பிடுவேன்.''**

**— டி.என். பாலகிருஷ்ணன்**

பேசினியா இல்லையாடீ ராட்சஸி?'' என்று ஆனந்த வல்லி காதில் மட்டும் விழுகிறபடி தொனி குறைத்துச் சீறினாள் அகல்யா.

அதற்குள் தியானேஷ் கையில் மாலையோடு வந்து விட்டான்.

''வெரி ஸாரி ஆண்டி! நாங்க அங்கிள் மொகத்தப் பார்க்கக் கொடுத்து வைக்கலே.''

அவன் முகத்தில் பொய்க்கலப்பற்ற துக்கம். முன்னைக்கு இப்போது அவன் மீசை கறுத்திருந்தது. பெருத்துமிருந்ததாக ஆனந்த வல்லி நினைத்தாள்.

''இட்ஸ் ஓக்கே!'' என்று அந்த துக்கத்தை ஆற்றுவது போல ஒரு பரிவுப் புன்னகையோடு தலை குலுக்கினாள் ஆனந்தவல்லி.

''என்ன கல் நெஞ்சம்மடீ ஒனக்கு!'' என்று கத்தி விட்டு எம்பி அவள் கன்னத்தில் அறைய வேண்டும் போல் ஒரு கொதிப்பு வந்தது அகல்யாவுக்கு. அடுத்து ஐயோ ஐயோ என்று அவள் இடுப்பைத் தழுவிக் கொண்டு குமுறி அழவேண்டும் போல் துக்கம் பீறிட்டது.

ஆனால் அடக்கினாள்.

''அந்த மாலையை ஏன் சொமந்துட்டு நிக்கறே! அப்படி பிளாட்பாரத்து மேலே வச்சுடு'' என்று யோசனை கூறினாள் ஆனந்தவல்லி.

தியானேஷ் தலை உயர்த்தி அவளைப் பார்த்தான். பிறகு அதற்குக் கீழ்ப்படிந்தான்.

''சாங்கியம் சம்பிரதாயத்துக்காவது கொஞ்சம் அழுது தொலையேண்டீ'' என்று மறுபடியும் அகல்யா மனசுக்குள் குமுறினாள்.

தூரத்தில் நின்ற மலையாளத் துண்டு போட்ட தொந்திக்காரர் இவர்கள் அருகே நெருங்கினார்.

''அஸ்தி தர்றதுக்கு நாலரை மணி நேர மாவுமாம்.''

ஆனந்தவல்லி ஸ்பெக்ஸை உயர்த்திச் சரி செய்தபடியே அவரைக் குனிந்து பார்த்தாள்.

அந்தப் பார்வையில் ஒரு பிரம்படிபட்ட மாதிரி அவரது உயர்த்திய குரலின் சுருதி தாழ்ந்தது.

''நாளைக்குக் காலம்பற வந்து 'கலெக்ட்' பண்ணிப்பமா?''

''இல்லே... நானும் இவளும் இருந்து வாங்கிண்டு வந்துடறோம். நீங்க மத்தவங்களை வேனில அழைச்சுண்டு போய்டுங்க.''

தொந்திக்காரர் ''இங்கியேவா வெய்ட் பண்ணப்போற... வேணும்னா நாங்க ரெண்டு பேர் கூட இருக்கமே...'' அவர் குரல் ஸ்வரம் இன்னும் தாழ்ந்தது.

''இவ இருக்கான்னு சொன்னேனே. கூட தியானேஷும் இருக்கான். போறும். நீங்க போய் ஆக வேண்டியதைக் கவனியுங்கோ.''

தீர்ப்பு முடிவாகித் திரும்புகிறவர் போலத் தலை தொங்கி அவர் புறப்பட்டார். நாலடி போனார்.

''ராமண்ணா...'' ஆனந்த வல்லி அவரைக் கூப்பிட்டாள்.

அவர் ஓடோடி வந்தார்.

''என்னோட ப்யட் சாவியை மோகன் கிட்டே கொடுத்தேன்... வாங்கிட்டு வாங்க.''

அவர் ஓடினார்.

ஆனந்தவல்லி மாறவில்லை.

விழுந்து விழுந்து அவளைக் காதலித்து

நூறு பிரச்னைகளோடு போராடி அவளை மணந்த வைகுந்தன் எதிரே மின்சாரச் சிதையில் தகனமாகிக் கொண்டிருக்கிற போதும் மாறவில்லை.

'இதோ இவரும் போய்ட்டார். பெரிய பையன் திருமலை டோக்கியோவிலே. பெண் பாலா மசா சூசெட்ஸ்லே. மூணு கிரவுண்ட் போட் க்ளப் ரோடு பங்களாவிலே, தன்னந்தனியா ஹோன்னு மரஞ் செடி சலசலப்பில் இன்னும் கூட நீ அநாதைமையைப் புரிஞ்சுக்கிலயாடி' என்று அகல்யா மனசிற்குள் கேட்டாள்.

ஆனந்தவல்லி தியானேஷைப் பார்த்து ஒரு சோகப் புன்னகை செய்தவாறே கேட்டாள்.

"எப்படி இருக்கே தியானேஷ்?"

அவன் சங்கடமாக நெளிந்தான்.

அது கேட்க வேண்டிய இடமுமில்லை. நேரமுமில்லை.

அவன் தலையை அசைத்தான்.

"ஓக்கே?"

"ம்ம்ம்."

"நீ சிடியிலே ட்ரைவிங் பண்ணுவே இல்லே" என்று மேலே தொடர்ந்தாள்.

"ஊம்ம்."

"ஒரு ஹெல்ப்..."

"சொல்லுங்க ஆண்ட்டி..."

"ம்ஹூம் நீ வேண்டாம். பாவம் டென்ஷனோட டிரெய்ன்ல வந்திருக்கே!"

"நோ நோ... நான் ஒண்ணும் அவ்வளவு டயர்டா இல்லே."

ஆனந்த வல்லி சற்றுத் தயங்குவது போல நிறுத்தினாள்.

"இப்படியே மசானத்து அடுப்பு முன்னாடி நாலரை மணி நேரம் கழிக்க வேண்டாம். சாந்தோம் பீச் வரைக்கும் மூணு பேரும் போய்ட்டு வருவோமா?"

தியானேஷ் முகத்தில் ஒரு வியப்புக் குறி. இதை அவன் எதிர்பார்க்கவில்லை. எனினும் பதிலளித்தான்.

"ஓ...ஓக்கே... இஃப் யூ விஷ் இட்."

"ஐ விஷ்."

ஆனந்தவல்லி மறுபடியும் ஒருமுறை ஷட்டர் மூடிய மின்சாரச் சிதையைப் பார்த்தாள். அவள் இடது கை அகல்யாவின் தோளில் பதிந்தது.

"போவோம்." சட்டென்று எல்லாம் முடிந்த மாதிரி அவள் விரைவாக நடக்கத் தொடங்கினாள்.

அவள் முதுகுக்குப் பின்னால் தியானேஷ் கேள்விக்குறியோடு தன் அம்மாவைப் பார்த்தான். அகல்யா தோள்களை உயர்த்தி, இருகைகளையும் உயர்த்தி, மயானக் கூரையைக் காட்டி தோள்களை உயர்த்திக் குலுக்கினாள்.

வெளியே தூய வெண்மையில் துப்புரவாய்த் துடைத்தது போல் ப்யட். ஏறி அமர்ந்து எஞ்சின் திறந்து ஸ்டியரிங் தொட்டதும் அதன் சூப்பர் கண்டிஷன் புரிந்தது.

"வழி தெரியுமில்லே?"

மயானத்து வாசல்கேட் கடந்ததும் பின் ஸீட்டில் அகல்யாவின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஆனந்தவல்லி, கண்ணாடியில் பார்த்த தியானேஷைக் கேட்டாள்.



**''நீங்க ஆபீஸ்ல நிறைய சம்திங் வாங்கறவரா இருக்கலாம்; அதுக்காக சாமி உண்டியல்ல போட்ட காசை டைரில 'சாமிக்கு சம்திங்'னு கணக்கு எழுதி வச்சிருக்கிறது நல்லா இல்லே சொல்லிட்டேன்!''**

**– சீர்காழி வி.ரேவதி**

"சொல்லணும் ஆண்டி... ஒரே ஒரு முறைதான் இந்த வழியில வந்திருக்கேன்."

"சரி சொல்றேன்... லெஃப்ட்."

தியானேஷ் ஃபியட்டை இடது புறம் வளைத்தான்.

எஞ்சினின் சிறு உறுமலில் மூவர் இருந்த காரினுள் மௌனம் ஏகமாய்க் கனத்தது.

'லெஃப்ட்... ரைட்... லெஃப்ட்' என்று தியானேஷுக்குத் திசை சொல்லும் ஆனந்தவல்லியின் குரல் தவிர, பதினைந்து இருபது நிமிஷம் அங்கே வேறு பேச்சில்லை.

முடிவில் அவள் கட்டளைப்படி சாந்தோமில் சாலை ஓரத்தில் காரை நிறுத்தினான் தியானேஷ்.

"ஆனந்தா... அவனும் நம்மளோட இருக்கணுமாடீ?"

காரினுள் பின்னால் சாய்ந்து எம்பிக் கதவுக் கண்ணாடியை தியானேஷ் ஏற்றிக் கொண்டிருந்த போது வெளியே தள்ளி நின்ற ஆனந்தவல்லியிடம் அகல்யா கேட்டாள்.

அவன் பாஸ்பரஸ். சொரேலென்று புரிந்து கொண்டாள்.

"அதை நான் தானே ஒன்னைக் கேக்கணும்?"

"என்னடீ சொல்றே?"

"ஒம்பையன் இன்னும் லவ் பண்ணிட்டே இருக்கானா?"

"ஆனந்தா... ட்ரை டு பிஹேவ் நார்மலி. அதைப் பேச இது நேரமில்லே."

தியானேஷ் காரின் கதவுகளைப் பூட்டிக்



**"நாடு ரொம்ப முன்னேறிப் போச்சு, சே!"**

***"அதை ஏன் சலிப்பா சொல்றீங்க?"***

***"என் அம்மாவும், மனைவியும் இன்டர்நெட் மூலமா சண்டை போட்டுக் கறாங்களே!"***

**— பா. ஜெயக்குமார்**

கொண்டு அதை ஒரு பிரதட்சணம் சுற்றிக் கொண்டு வந்தான்.

அவனையே கண்கொட்டாமல் பார்த்தாள் ஆனந்தவல்லி.

"ஊக்... அவனைப் பாரேன்! இறந்த காலங்களை நோக்கி ஒரு நிகழ்காலம் நடந்து வர்றாப்பிலே இல்லே" என்றாள்.

ஒற்றை விரலில் சக்ரதாரி போல் சாவி சுழற்றி வந்த தியானேஷ் காதில் அது விழவில்லை.

அவன் நெருங்கி வந்தான்.

"தியானேஷ், நீ ஒண்ணு பண்றே!"

"சொல்லுங்க ஆண்ட்டி."

"நேரா பீச் ரோட்லயே போய் ஒனக்குப் பிடிச்ச ரெஸ்டாரெண்ட்ல நீ ஏதாவது சாப்பிடறே. எனக்கும் அகல்யாவுக்குமா ஒரு நல்ல காப்பி வாங்கி வர்றே. டாஷ் போர்டுக்குக் கீழே ஓரமா ஒரு பிளாஸ்க் இருக்கு."

தியானேஷின் பார்வை பொருள் விளங்கியது போல் பளிச்சிட்டது.

அவர்களுக்குத் தனிமை வேண்டும்.

"நாங்க அதோ அங்கே ஒக்காந்திருக்கோம்."

தலை திருப்பி ஆனந்தவல்லி ஒரு கரையோர விளிம்பைக் காட்டினாள்.

தலையசைத்து விட்டு தியானேஷ் காரை நோக்கித் திரும்பி நடந்தான்.

"கடைசியிலயாவது வைகுந்தோட பேசினியா இல்லியாடீ..."

அகல்யாவின் கேள்விக்கு ஆனந்தவல்லி பதில் சொல்லவில்லை. மேற்கே மறைந்த சூரிய சோகம் கிழக்குச் சிவப்பாய் பிரதிபலிக்கும் வானத்தைப் பார்த்தாள்.

அகல்யா அடுத்த படி ஏறினாள்.

"நீ ஒரு ராட்சஸி... மகா கர்வி."

"அப்புறம்?"

"ஒரு பொம்பிளயே இல்லைடீ."

"ப்ரொஸீட்."

"பதினஞ்சு வருஷம் வாய்ப்பேச்சே இல்லாம ஒரு மகான் மாதிரி வாழ்ந்துட்டு எரிஞ்சுண்டிருக்காரே ஒரு மனுஷன்! ஒரு சொட்டுக் கண்ணீர் விட்டியாடீ.. ம்ஹ்ம்... டிட் ஹி நாட் லவ் யூ லைக் அன் ஏஞ்சல்?"

ஆக்ரோஷமாய்ச் சீறி வந்த ஒரு பேரலை தூரத்தில் நெடிய பெருமூச்சாகச் சரிந்தது. ஆனந்த வல்லி அதைக் கவனித்தாள்.

"நீ எதுக்கும் கலங்காத மகாமேருன்னு காட்டிப் பீத்திக்க முயற்சி பண்றேடீ. ஆனந்து... வேண்டாம்.. ட்ரை பீ நார்மல்.. அவர் ஒம்மேல உசிரையே பொழிஞ்சு தள்ளியிருக்காருடீ..."

என்ன பித்துக்குளித்தனமான நினைவூட்டல் என்பது போல் அவளைத் துச்சமாகப் பார்த்துவிட்டு ஆனந்தவல்லி 'ஹ்ம்' என்று லேசாய் விசும்பினாள்.

"ஒன்னைத் தவிர அவர் வேற ஒரு பொம்பளயத் தொட்டத்தில்லே. நோ விக்கர், நோ ட்ரக்ஸ்.. நோ ஸ்மோக்கிங்.. நோ கேம்ப்ளிங்... அவருக்கு ஒரே ஒரு வீக்னஸ், இஃப் யூ கால் இட் எ வீக்னஸ்.. சோஷல் சர்வீஸ்..."

அவள் வினாசலை, ஆனந்தவல்லி இப்படி யாராவது தன் ஆளுமையை இழுத்துத் தரையில் கிடாசி சவுக்கெடுத்து விளாசுவது போல் விலாசமாட்டார்களா என்று ஏங்கியிருந்து அனுபவிப்பது போல் கேட்டுக் கொண்டிருந்தாள்.

"அந்த கிராமம்... அதும் பேரென்ன?" அகல்யா கேட்டாள்.

ஆனந்தவல்லி சொல்லுகிற மனோ நிலையில் இல்லை.

"சம் சமுத்திரம். திப்ப சமுத்திரம்? சென்ன சமுத்திரம்? வெங்கட சமுத்திரம்? ம்ஹூம். கிரி சமுத்திரம். எஸ், அதான்... அங்க போய் அவர் ரெண்டு மாசம் சோஷல் வர்க் பண்ணிட்டு வர்றச்ச தானே அது நடந்தது?"

ஆனந்தவல்லி கண் தாழ்த்தி சற்று தூரத் தில் ஒரு வளை தோண்டும் நண்டின் தற் காப்பான சுறுசுறுப்பைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

"என்ன சொல்லிட்டார் அப்போ? இது வரைக்கும் வாழ்க்கையையே வேஸ்ட் பண்ணிட்டேன்னு தானே, என்னவோ சொன்னார்?

ஆனந்தவல்லியின் பார்வை அவள் மீது தாழ்ந்தது.

"ப்ளீஸ்... ஆனந்து.. ப்ளீஸ்... ட்ரை டு பீ கம்யூனிகேட்டிவ்.. எதாவது பேசுடி!"

"ஒம் பையன் இன்னும் லவ் பண்ணிண் டிருக்கானா?"

"என் கேள்விக்குப் பதில் சொல்லு."

ஆனந்தவல்லி மீண்டும் துருவிக் கேட் டாள். "அதே கோவாக்காரி தானே!"

அகல்யாவின் தொண்டைக்குழி எதையோ விழுங்குவது போல ஏறி இறங்கி யது.

"விட்டுடு அகல்யா! லீவ் தெம்... லைஃப் ஈஸ் எ வெரி பேட் பேட் பேட் அஃபேர். நீ தடுத்தியானா அது இன்னும் மோச மாயிடும்..."

அகல்யா பேசவில்லை. ஆனால் அவள் கண்கள் பளபளத்தன.

"பட்... இந்த ஆம்பளைங்க எல்லாம் ஒரு நாள் இல்லேன்னா இன்னொரு நாள் பேத்தாம போக மாட்டாங்க. ஐ ஹாவ் வேஸ்டட் ஆல் ஆஃப் மை லைஃப்னு! லெட் தெம் ரியலைஸ்."

"இட்ஸ் எ ஃபெமினிஸ்ட் ஸ்டேட் மெண்ட்" என்று குறுக்கிட்டாள் அகல்யா.

"கொத்தவரங்கா! "பெமினிஸமாவது... டொமினிஸமாவது. யூ பிலீவ் சம்திங்... தென் யூ ஆர் கெட் லாஸ்ட்.. தட்ஸ் ஆல்."

"இதெல்லாம் ப்ளக்கவேஷன்ஸ்.. ஏற்ற இறக்கங்கள்."

"எது? எது?..." என்று சீறியவாறு எழுந்தே நின்று விட்டாள் ஆனந்தவல்லி. அகல் யாவுக்கு இந்த ரௌத்திராகாரமும் இந்த பத்ரகாளித் தோற்றமும் பழக்கமானவை. அவள் பொருட்படுத்தவில்லை. சப்புக் கொட்டினாள்.

ஆனந்தவல்லி மேலே குமுறினாள்.

"இத்தினி காலம் ஓங்கிட்டேய ஒனக்காக வேன்னு விழுந்துண்டு கெடக்கறதெல்லாம் வெறுமே ஒரு மயக்கம்தான்னு மொகத்துக்கு எதிரே ஒருத்தர் சொல்வாரு. அதை ஒரு ஜன்மம் தலை குனிஞ்சு அதுவும் ஒரு சாபல்ய சித்தின்னு வாங்கிக்கணும்!



***"அந்த எழுத்தாளர் வீட்டுல வேலை செய்யமாட்டேன்னு சொல்லிட்டி யாமே?"***

***"ஆமாம்டி! அப்பப்ப கதாபாத்திரங் களையும் விளக்கச் சொல்றாரு!"***

***– டி.என். சத்யா முருகவேல்***

---

இல்லே?"

"வாங்கிண்டா நீ என்ன கொறைஞ்சு போயிடுவே?"

"பேஷ்... இதாண்டி... இதனாலதாண்டி பொம்பளை இங்க இப்படி இருக்கா...இந்தப் பித்தலாட்டப் போலிக் கலாசார அடிமைத் தனத்துக்குப் பேரு பண்பாடு..."

இதுவும் புதிதல்ல. இதற்கு மேலும் கேட்டதுண்டு. அகல்யா தூரத்தில் சாந்தி தேடி அலையும் கடலைப் பார்த்தவாறே விடாமல் துருவினாள்.

"ஸோ... நீ வைகுந்த்கிட்டே கடைசி வரைல பேசவே இல்லே..."

ஆனந்தவல்லி உட்கார்ந்தாள். தலை குனிந்து கடற்கரை மணலில் மூன்று விரல் களைச் செருகி வெளியே இழுத்தாள்.

சுண்டி ஒட்டிய மணலை உதறினாள்.

அகல்யா தொடர்ந்தாள்.

"போனதரம் அவரைப் பார்க்க வந்தப்ப ஒங்க வீட்டு வேலைக்காரி என்னண்ட என்ன சொன்னா தெரியுமா? வைகுந்த் மொகம், தாய்ப்பாலுக்கு ஏங்கற கொழந்தை யாட்டமா, நீ பேசமாட்டியான்னு கெஞ்ச றாப்பில ஏங்கித்துன்னா. நீ அவளைக் கேட்டு வைக்காதே!"

என்ன உயரம் போனால் என்ன? இவள் மட்டம் இவள் மட்டம்தான்! 'ம்ஹ்ம்ஹ்ம்' என்று கண் மூடிக் கூசுவது போல் ஆனந்த



**"இது ஒரு வித்தியாசமான, நாடு, மதம், வயது எல்லாத்தையும் மீறிய காதல்கதை. இந்திய விண்வெளி வீரர் சந்திரனில் இறங்கி, அங்கே வடை சுடும் பாட்டியை லவ் பண்றதுதான் கதை."**

**– குல்லு**

வல்லி பெருமூச்சு விட்டாள்.

அகல்யா யோசனை தோய்ந்த குரலில் பேசினாள்.

"நீ தூக்கு மாட்டிண்டு தொங்கப் போனியே... அந்த மனுஷன் ஓடி வந்து ஒங்காலைப் பிடிச்சு 'தப்பு தப்பு. சொன்னது தப்புன்னு' கதறினாரே..."

தொடு வானத்தில் ஒரு துல்லியமான நட்சத்திரம் முளைத்திருந்தது. அதைப் பார்த்த ஆனந்தவல்லிக்கு ஒன்று தோன்றியது.

'இவள் என்ன நீதிபதியா? என் கட்சியை நிலை நாட்டி ஒரு வாக்கு மூலம் இவளிடம் அவசியமா?

'நியாய நிலை நாட்டல். யாருக்கு வேண்டும் அது? கலசச் சட்டியை நடுத் தெருவில் வீசி உடைத் தெறிந்து கங்கா ஜலம் சாக்கடையில் இறங்கிய பிறகு என்ன சமாதானம்? சமரசம்?

'இருக்கிற காலத்திற்கு இனித்துக் கொண்டு வாழ ஒரு சமரசம்?'

மனம் மறு மடக்குப் போட்டது.

'இருந்தாலும் இவள் பால்ய சிநேகிதி. எதைப் பேசவும் தெரிந்து கொள்ளவும் சகல உரிமையுள்ளவள்.'

"அகல்யா" என்று ஆரம்பித்தாள் ஆனந்தவல்லி. குரல் கரகரத்தது.

"சொல்லு."

"நீ பேசி முடிச்சுட்டே இல்லே?"

அகல்யா பேசவில்லை.

"ரொம்பப் பெரிசு, ரொம்ப ஒசத்தின்னு எதை நம்பி நீ எப்போ ஏமாந்திருக்கே? ஒனக்கு இது புரியாது."

அகல்யாவின் கண்கள் இறுக மூடின.

"ஒருத்தர் வாய்க்கு வந்தது எதை வேணும்னாலும் சொல்விட முடியாது.. வச்சிருந்த காதல்.. வாழ்ந்த வாழ்க்கைன்னு எல்லாமே வேஸ்ட்னு எந்த சோஷல் வீழ்ச்சியப் பாத்தும் சொல்லிடக் கூடாது."

அகல்யா கண் திறந்தாள். இவளை விடக் கூடாது.

"அது 'வேஸ்ட்' இல்லேன்னு நீ நிரூபிச்சிருக்கணும்" என்று மெதுவாய்ச் சொன்னாள்.

"அதுதான் வேஸ்ட். ஒடஞ்ச பீங்கானுக்குப் போடற ஃபெவிகால் ஒட்டு."

"சமரசம்தான் வாழ்க்கை."

"உன் பார்வை அப்படி!"

"உண்மைங்கறது ரிலேடட். அது மாறும். வளரும்."

"இல்லாமயே கூடப் போயிடும். இல்லே?"

இந்த எகத்தாளத்திற்கு என்ன பதில்? அகல்யா தலையைக் கண் மூடி மறுத்து இரு முறை ஆட்டினாள்.

"என்னளவிலே நான் புரிய வச்சேன். இன்னிக்குக் காலம்பற நாலரை மணிக்கு பால் கஞ்சி காய்ச்சி அவர் உசிர் போறதுக்கு முன்னாடி நாலு ஸ்பூன் வாயிலே விட்டேன்."

சட்டென்று கண் மலர முகம் விரிய அகல்யா பூரித்துப் போனாள்.

"பேசினியா?"

"இல்லே... பேச வேற வேணுமா?"

அகல்யா அவள் இரு கரங்களையும் பிடித்துப் பிசைந்தவாறே பரவசமான போது ஆனந்தவல்லியின் குரல் தாழ்ந்தது.

"இப்ப... அவர் அஸ்தியை வாங்கிண்டு போகக் காத்திருக்கேன். அதுதான் நான் கண்ட உண்மையோட டோடல் மிச்சம்."

அகல்யாவின் கண்களிலிருந்து கரகர வென்று கண்ணீர்த் தாரை ஒன்று புறப் பட்டது. அவளுக்கு முழுசாய்ச் சிலிர்த் திருந்தது. அதைப் பார்த்த ஆனந்தவல்லி கண்ணாடியைக் கழற்றித் துடைத்து மாட்டினாள்.

"இது மன்னிப்பு இல்லே. கடமை... ஒரு ஃபெலோஷிப்'' என்றாள்.

அகல்யா நெடுமூச்செறிந்தாள். கடல் சற்று அமைதியாயிருந்தது.

"இந்த ஒம்பது வருஷமா நானும் சேரி சேரியா, குப்பம் குப்பமா, கிராமம் கிராமமா எது உண்மைன்னு தேடி அலஞ்சுட்டிருக் கேன்'' என்று ஆனந்தவல்லி மீண்டும் தொடங்கினாள்.

"கண்டுபிடிக்கலியா?''

"கண்டுபிடிச்சுட்டேன். அதான்... அவர் சொன்னதுதான் உண்மை. பட் இட் மேக்ஸ் யூ வெரி ஸாட்.''

"ஏன்?''

"ரொம்ப நாள் கழிச்சுப் புரியறதே! அதுக்கும் ஹி ஈஸ் ரெஸ்பான்ஸிபிள். அவர் தானே பொறுப்பாளி.''

அதன் பிறகு ஆனந்தவல்லி பேச வில்லை. அகல்யாவும் கேள்வி கேட்க வில்லை.

எதிரே நிலாவின் நிதானமான உதயத்தை அடிவானம் கொண்டாடிக் கொண்டிருந் தது. இருவரும் அதையே பார்த்தனர்.

பேச்சு அநாவசியம். இருவருக்குமே அவரவர் அளவில் அது புரிந்தது

வெகு நேரம் கழித்து நியானேஷ் பிளாஸ்கோடு வந்தான். காப்பி அற்புதமாக இருந்தது.

"புறப்படலாமா?'' என்று ஆனந்தவல்லி கேட்டாள்.

இன்னும் அகல்யாவுக்கு அங்கே இருக்கத் தோன்றியது.

ஆனால் நியானேஷ்?

அவனைப் பற்றி ஆனந்தவல்லி சொன்னதை அகல்யா நினைத்துக் கொண்டாள்.

"சரி... உன்னிஷ்டம்'' என்றாள்.

மூவரும் எழுந்து காரை நோக்கி நடந்தபோது உடைகளில் ஒட்டிச் சிதறிய மணல், காற்றில் எதிர்த்துப் பறந்து வந்து முகத்தில் மோதிற்று. அகல்யா நின்று தன் சேலையைச் சுத்தமாகத் தட்டித் தட்டி உதறிய பின் நடக்கத் தொடங்கினாள்.

# நீங்கள் கேட்டவை

## — தராசு


• பாதி மகிழ்ச்சி!

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

*? தந்தை பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கையை மிகத் தீவிரமாகக் கடைப்பிடிக்கும் ஒரு குடும்பம், தீபாவளி பண்டிகையைக் கொண்டாடக் கூடாது என்று பிரசாரம் செய்கிறது... ஆனால் கடந்த பல வருட காலமாக அக் குடும்பத்தினர் தீபாவளியை யொட்டி பட்டாசு வியாபாரம் செய்கிறார்கள். இது முரண்பாடுதானே...?*

! பணம், பகுத்தறிவையும் மழுங்கச் செய்யும் என்பதற்கு இதுவே உதாரணம்!

● சி.தேவி, விருதுநகர். ❑

*? மத்திய அமைச்சர் சுஷ்மா சுவராஜ் டில்லி முதல்வராகப் பொறுப்பு ஏற்றிருக்கிறாரே? திறமையாகச் செயல்படுவாரா...?*

! திறமையாகச் செயல்படக் கூடியவர்தான். ஆனால் ஒரு நெருக்கடியில் அவரை முதல்வராக்கிவிட்டு தேர்தல் முடிவுகளைப் பொறுத்து அவர் திறமையை எடை போடுவது நியாயமல்ல.

# ஜெமினியை மன்னிப்பாளுடன் ஒப்பிடலாமா..?

● சு.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

*? பொருளியல் துறைக்கான நோபல் பரிசு அமார்த்ய சென்னுக்குக் கிடைத்திருப்பது பற்றி...?*

! மகிழ்ச்சியான விஷயம். அப்படிப்பட்ட ஒருவர் நமது பல்கலைக் கழகங்களுள் ஒன்றில் பணியாற்றவில்லை; அதற்கேற்ற வசதி, சூழ்நிலை இங்கு நிலவவில்லை என்பது வருத்தத்துக்குரிய விஷயம். இது மகிழ்ச்சியைப் பாதியாகக் குறைத்து விடுகிறது.

● கே.ஆர். வெங்கடேஷ், சீர்காழி.

*? ஜாதியின் பெயரால் வன்முறையைத் தூண்டும் சுவரொட்டி, சுவர் வாசகங்களுக்குத் தமிழக அரசு தடை விதிக்க முடிவெடுத்திருப்பது பற்றி...?*

! பிரயோஜனமில்லையே! கிண்டியிலிருந்து தாம்பரம் செல்லும் வழி முழுவதும், ஒரு சுவர் பாக்கியில்லாமல், ஒரு குறிப்பிட்ட சாதியினர்தான் நிஜமான தமிழர் என்று பிரிவினை மேளா கொண்டாடியிருக்கிறார்களே!

● வைகை வளவன், மதுரை – 17.

*? மகாத்மா காந்தியின் கொள்கைகள் நடைமுறைக்கு ஒத்து வராதவை எனச் சொல்லி விட்டாரே ராஜேஷ் பைலட்...!?*

! உண்மையும் ஒழுக்கமும் நேர்மையும் எப்படி இன்றைய அரசியல்வாதிகளுக்கு ஒத்து வரும்?! அவர் சொல்லி விட்டார்; பிறர் சொல்லவில்லை... அவ்வளவுதான்.

● ஜெ.தி. சசிராமன், கும்பகோணம்.

*? ஒரு பொருள் அதிக வியாபாரம் ஆவதன் காரணம் தரமா? விளம்பரமா...?*

! விளம்பரத்தால் பெருகும் வியாபாரம் தரத்தால் மட்டுமே நிரந்தரம் பெறும்.

● கே.வி. ராமன், சென்னை – 73.

*? டால்ஃபின் சிடியில் அந்த விலங்குகள் பரிதாபமாக மரணமடைந்தனவே... இதுதான் விலங்குகளிடம் மனிதர்கள் காட்டும் ஜீவகாருண்யமா...?*

! என்னதான் டால்ஃபின்கள் சிநேக பாவம் உள்ளவை என்றாலும்கூட, அவற்றை இயற்கையான சுதந்தரச் சூழலிலிருந்து நீக்கி வித்தை காட்டப் பழக்குவது கொடுமை. காசு கொடுத்து அதைப் பார்க்கப் போவது அதைவிடக் கொடுமை. அவற்றை கவனமாகப் பராமரிப்பதாகச் சொல்வதெல்லாம் அடிப்படையான கொடுமையை மறைக்க சப்பைக் கட்டு!


• நெருக்கடி முதல்வர்!



• தகுதிக்கேற்ப...



• ... மதிப்பு...



• முதலிட முயற்சி...

தான். தமிழகத்தில் அதற்கான வாய்ப்பும் சூழலும் இருக்கின்றன. முதல்வருக்கும் சொன்னதைச் செயல்படுத்தும் ஆற்றல் இருக்கிறது. முயற்சியும் அமைச்சரவையினரின் ஒத்துழைப்பும் மத்திய அரசின் பாரபட்சமற்ற போக்கும் இணைந்தால் நடக்கும்.

● பா. சுகுமார், தூத்துக்குடி – 1.

*? இந்த வயதில் வாழ்க்கைத் துணையைத் தேடியிருக்கும் ஜெமினியை மண்டேலாவுடன் ஒப்பிட முடியுமா...?*

! வாழ்க்கைத் துணை தேடுவதில் மட்டும் மண்டேலாவாக விளங்கினால் போதுமா? இமயம் எங்கே? பறங்கி மலை எங்கே?... இரண்டையும் அதனதன் தகுதிக்கேற்ப மதிக்கக் கற்றுக் கொள்வோம்.

● ராமதாஸ், கணபதி அக்ரஹாரம்.

*? சமூகத்தை உயர்த்துவதில் முக்கிய பங்கு வகிப்பது கல்வியா? சுகாதாரமா? பொருளாதாரமா?*

! கல்விதான் என்பதைப் பொருளாதார நிபுணர்களும் சுகாதார வல்லுனர்களும்கூட எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். கல்வி பரவலாகாவிட்டால் பொருளாதார சீர்திருத்தத்தின் முழுப் பயனை அடைய முடியாது என்று மன்மோகன் சிங்கூட கூறியுள்ளார்.

● மு. இரவிச்சந்திரன், சேலம் – 9.

*? 'எனது குழந்தைகளைப் பால் விற்ற காசில்தான் படிக்க வைக்கிறேன்' என்கிறாரே ராப்ரி தேவி...?*

! அப்பாவியாக இருந்தவர் முழு அரசியல்வாதியாக உருவாகிக் கொண்டிருக்கிறார் என்று தெரிகிறது. இனி லாலுதான் தம் மனைவியே தமக்கு அரசியல் எதிரியாகி விடுவாரோ என்று பயப்பட வேண்டும்.

● ஜான் சாமுவேல், மும்பை – 19.

*? 'தமிழ்நாட்டைத் தொழில் வளர்ச்சியில் முதலிடத்திற்குக் கொண்டு வருவேன்' என்கிறாரே முதல்வர்... சாத்தியம் தானா?*

! சாத்தியம்



• கணவருக்குப் போட்டி...!

● பா. அச்சுதன், சென்னை – 35.

*? சமீபத்தில் படித்த புத்தகம்...?*

! Erma Bombeck என்கிற அமெரிக்க எழுத்தாளரின் நகைச்சுவை கட்டுரைத் தொகுப்பு At Wit's End. சம்சார சன்னைகளின் அற்புதமான நையாண்டி! இந்தியப் பெண்கள் படித்தால், 'உலகெங்கும் ஒரே கதைதான் – தாங்கள் மட்டும் தனியே இல்லை' என்று உணரலாம்; மூச்சு முட்ட சிரிக்கலாம்.



• 'அ' பிளஸ் 'அ'

● வி. சிவா, அரசரடி.

*? மான்களைச் சுட்டுக் கொன்றதாக ஹிந்தி நடிகர் சல்மான்கான் கைது செய்யப்பட்டுள்ளாரே...?*

! அதைவிடப் பரபரப்பான செய்தி – குற்றம் சாட்டப்பட்டுள்ள அவருடைய படங்கள் தங்கள் மாநிலத்தில் ஓடக் கூடாது என்கிற அளவுக்கு ராஜஸ்தான் மக்கள் விழிப்புணர்வோடு இருப்பதுதான்! பாராட்டுதலுக்குரிய விஷயம்.



• வெளிப்படைப் பேச்சு!

● தேனி முருகேசன், தேனி.

*? மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம், சரி.... கணவன் அமைவதெல்லாம்...?*

! மனைவி செய்த தவம்!

❑ **ரூ. 50 பரிசு பெறுபவர்:**

**சி. தேவி,**
6/968, ஐ.டி.பி.டி. காலனி,
பேரளி ரோடு,
விருதுநகர்.

"புதுசாக வீட்டைக் கட்டிவிடலாம்; ஆனால் பழைய வீட்டை ரிப்பேர் செய்து பாருங்கள்... 'அப்புறம் கல்யாணத்தைப் பண்ணிப்பார், வீட்டை புதுப்பித்துப்பார்' என்ற புது மொழியையே இயற்றிவிடுவீர்கள்" எனும் பரமேசுவரனின் கூற்றில் உண்மை இருக்கத்தான் செய்கிறது.

வீட்டை புதுப்பிப்பதற்கே இந்த நிலை என்றால், மூவாயிரம் பேர் அமரக்கூடிய ஆடிட்டோரியத்திற்குப் புதுவடிவம் கொடுப்பதென்பது சாதாரண செயலா? அதுவும் மும்பைவாசிகளைப் பொருத்தவரை ஷண்முகானந்தா ஹால் வெறும் கலைக் கூடமல்ல; 'கலைக் கோயில்!' ஒரு கோயிலின் புனருத்தாரணத்துக்கு எடுத்துக் கொள்ளும் சிரத்தையுடன் தான் இதுவும் புதுப்பிக்கப்பட்டு 'கும்பாபிஷேகத்துக்கு' தயாராய் நிற்கிறது.



புதுக் கமிட்டியின் முக்கியஸ்தர்களான சேஷாத்ரி, பரமேசுவரன், ஜெயராவ், ராவ் ஆகியோர் அத்திருநாளை (நவ 1) வரவேற்கும் பரவசத்தோடு நம்மிடம் உரையாடுகின்றனர்.

ஜிபின் மேத்தாவிலிருந்து, அரசியல் 'நேத்தா'க்கள் வரை, அரியக்குடியிலிருந்து அறியாப் பருவத்துக் குழந்தைகள் வரை, அவரவர் திறமையை வெளிப்படுத்த ஒரு நிலைக்களனாய் நின்ற இந்த மண்டபம், கடந்த 90-ல் நடந்த தீ விபத்தில் சாம்பலாயிற்று; ஒரு காலத்தில் ஆசியாவிலேயே மிகப் பெரியதும் நவீனமானதுமாய் விளங்கிய ஷண்முகானந்தாவை மீண்டும் அதன் பழைய பெருமைகளுடன், புதுச் சிறப்புகளையும் கூட்டி, பொலிவுடன் திகழச் செய்திருக்கின்றனர்.

"மொத்தம் பன்னிரண்டு கோடி பிராஜக்ட்; நிதி திரட்ட பெரிதும் உதவியவர் எங்கள் பிரசிடெண்ட் (முன்னாள் அமைச்சர்) டாக்டர் வி. சுப்பிரமணியம்தான்!" என்றார் சேஷாத்ரி. சரத்பவார் மூலம் 50 லட்சம், மத்திய அரசு 50 லட்சம், ஆந்திர அரசு 5 லட்சம், தமிழக அரசு (கவர்னர் ஆட்சியில்) 5 லட்சம், இன்றைய மராத்திய அரசு 25 லட்சம் என்று வழங்கியவைதான் பெரிய தொகைகள். இதன் மூவாயிரத்து சொச்ச உறுப்பினர்களிடமிருந்து வந்த மொத்த உதவித் தொகையே 20,000 ரூபாய் தானாம்! "இவற்றுடன் ஏனைய நன்கொடைகளையும் சேர்த்து, புத்திசாலித்தனமாக முதலீடு செய்து தொகையைப் பெருக்கினோம்!" என்கிறார் ஜெயராவ். கட்டட வடிவமைப்புப் பணிகளை சுத்ரி ஒரு பைசா வாங்காமல் செய்து கொடுத்தாராம்.

"இருந்தாலும் எட்டு வருட காலமென்பது மிக நீண்ட இடைவெளியாகத் தெரியவில்லையா?" என்றதற்கு, "முதல் நான்காண்டு காலம், ஹாலை மட்டும் புதுப்பிப்பதா? கட்டடம் முழுவதிலும் கை வைப்பதா? என்ற சர்ச்சையிலேயே கழிந்து விட்டது; அதன் பிறகுதான் பூரண புதுப்பித்தலுக்கு பச்சைக் கொடி காட்டப்பட்டது!" என்கிறார் ராவ்.

"இடைப்பட்ட காலத்தில் புறநகர்ப் பகுதிகளில் சபாக்கள் எக்கச்சக்கமாக முளைத்து, உங்கள் அங்கத்தினர்களை அபகரித்துக் கொள்ளவில்லையா?" என்றபோது "இல்லவே இல்லை!"என்று அடித்துச் சொல்கிறார் சேஷாத்ரி. "மாறாக, அதிகரித்திருக்கிறது; ஹால் மூடப்பட்டிருந்த போதும், மாதாந்திர நிகழ்ச்சிகளை இதன் அருகிலேயே வேறோரிடத்தில் நடத்திக் கொண்டிருந்தோமே!" என்கிறார்.

புதிய ஷண்முகானந்தாவின் சிறப்

# மும்பையின் ஃபீனிக்ஸ் உயிர்த்துவிட்டது!

பம்சங்களை ஆர்வத்துடன் விவரிக்கிறார் பரமேசுவரன். முழுவதுமே-கான்டீன் பகுதி உட்பட, ஏ.ஸி. மயமாக்கப்பட்டிருத்தல்; கம்ப்யூட்டரைஸ்டு லைட்டிங் வசதிகள்; எண்ணிக்கையில் குறைந்த ஆனால் வசதிகளில் சிறந்த (மடங்காத, ஸ்பெஷல் குஷன்) 2,900 இருக்கைகள்; அகன்ற இடைவெளிகள்; அதிநவீன ஆம்ப்ளிஃபயர், ஸ்பீக்கர், மிக்ஸர் வகையறாக்கள்; நவீன வசதியுடன், மறைவான ஸ்பீக்கர்கள் கொண்ட ஸ்டேஜ்; கார்கள் வருவதற்கும் செல்வதற்கும் தனித்தனி வழிகள்; வி.ஐ.பி.க்களுக்கென்று சிறப்பு நுழைவாயில்; முன்பு மெழுகுவர்த்தி நடனத்தின்போது திரை தீப்பற்றிக் கொண்டு, அருகிலிருந்த ஏ.ஸி. தீப்பிடித்ததால் விபத்து ஏற்பட்டது. எனவே இப்போது ஏ.ஸிக்களில் "டாம்பர்" பொருத்தியுள்ளனர். ஏதாவது பிரச்னையென்றால் இது தானாகவே மூடிக் கொண்டுவிடுமாம்! எல்லா இடங்களிலும் தீக்கான அறிகுறிகளைக் கண்டு அலறும் 'ஸ்மோக்-டிடெக்டர்கள்' உண்டு!

புதிய ஆறு மாடிக் கட்டடத்தில் ஆடிட்டோரியம் முழுவதுமாக தனிமைப்படுத்தப்பட்டிருக்கிறது. கர்நாடக சங்கீதத்தில் டிப்ளமா வழங்கும் ம்யூசிக் ஸ்கூல் (அயல்நாட்டு மாணவர்களுமுண்டு), குறைந்த செலவில் மருத்துவ வசதிகளுடன் யோகா, ஃபிஸியோதெரபி போன்றவற்றையும் வழங்கும் மெடிகல் சென்டர், ஒரு வங்கி, ஏனைய கான்ஃபரன்ஸ் ஹால்கள் என்று நிறைய இருந்தாலும், இவற்றுடன் ஆடிட்டோரியத்துக்குத் தொடர்பில்லாமல், தனித்தனி நுழைவுகள், லிஃப்டுகள், மாடிப்படிகள் அமைத்திருப்பதால், ஒரே சமயத்தில் வெவ்வேறு நிகழ்ச்சிகள் இடையூறின்றி நடக்க முடியும்!

அதிக வசதிகளென்றால் உறுப்பினர் கட்டணம் அதிகமா என்றதற்கு "குறைந்த செலவில் நிறைந்த பயன்களை அளிப்பதே என்றும் எங்கள் நோக்கம்!" என்கிறார் சேஷாத்ரி. "இப்போது மெம்பர்ஷிப் ஃபீஸை வருடத்திற்கு 240 ரூபாய் என்று உயர்த்தியுள்ளோம், அவ்வளவுதான். இன்னும் கூட ம்யூசிக் கிளாஸ் ஃபீஸ் மாதம் 45 ரூபாய்தான்!"

புதிய கமிட்டிக்கான தேர்தல் அண்மையில்தான் நடந்து முடிந்தது; "கமிட்டியில் இள ரத்தம் புகுவதை இவர்கள் விரும்பவில்லை. 3075 உறுப்பினர்களில் 377 நபர்கள்தான் வோட்டுப் போட்டனர்; அவர்களையும் வேட்பாளர்களே கார்களையும் டூரிஸ்டு வேன்களையும் வைத்து அழைத்து வர வேண்டியிருந்தது! கட்டடத்தின் பிரதான தெய்வமான ஷண்முகனுக்கு விதானமமைக்க ஒருவர் 10,000 ரூபாய் நன்கொடை கொடுத்திருக்கிறார், என்றாலும் இவர்கள் வேலை எதையும் தொடங்கவில்லை!" என்றெல்லாம் இதே எலெக்ஷனில் போட்டியிட்டு வெற்றியிழந்த ஸ்ரீதரின் குற்றச்சாட்டுகளையும் இவர்கள் முன் வைத்தோம்.

"ஸ்ரீதர் இளைஞர்தானே! அவர் போட்டியிடுவதை அனுமதிக்கவில்லையா? 10,000 நன்கொடை கொடுத்தவர் நேற்றுத்தான் இன்னுமொரு பத்தாயிரத்துக்கு வாக்களித்திருக்கிறார். எந்த வேலையை எப்போது செய்ய வேண்டும் என்ற நியதியில்லையா?" என எதிர்க்கேள்வி கேட்கிறார் சேஷாத்ரி! "கான்டீன்காரர் ராஜா விஷயம் தான் கோர்ட்டில் இழுபறியாயிருக்கிறது. நாங்கள் காலி செய்யச் சொல்கிறோம். அவர் டெனன்ஸி ரைட்ஸ் க்ளெய்ம் பண்ணுகிறார்!" என்கிறார்கள்.

அருகிலுள்ள வீணா விஹார் ஹவுஸிங் சொஸைட்டிக்காரர்கள் வேறு அவர்கள் அமைதி கெடுவதாக (கார்கள் அதிகரிப்பால்) எதிர்ப்புக் குரல் கொடுத்திருக்கிறார்களாம்!

இவை எல்லாம் சிறு நீர்க் குமிழிகள்தாம்! ஷண்முகானந்தா சபை இயங்க ஆரம்பித்துவிட்டால், அந்தக் கலை வெள்ளத்தில் இந்தக் குமிழிகளெல்லாம் அடித்துச் செல்லப்படும் என்பது தெரிந்த விஷயம் தானே! ●

— ஜெயஸ்ரீ ராஜ்

# விவசாயிகளுக்கு ஒரு கிரீடம்!

ர், தங்கம், வெள்ளி இன்னபிற பரிசுகளை அறிவித்து, ஆளாளுக்கு பிலிம் காட்டியதைப் பார்த்தோமல்லவா? ஆனால், டாஃபே நிறுவனம் நிஜமாகவே ஒரு போட்டி நடத்தி, அதில் வெற்றி பெறுகிறவருக்கு மூணு லட்சம் ரூபாய் மதிப்புள்ள ஒரு டிராக்டரையே பரிசாகத் தருகிறது. ஆனால், இந்தப் போட்டியில் யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ள முடியாது. டிராக்டர் வைத்து விவசாயம் செய்கிற விவசாயிகளுக்கான போட்டி இது. வெற்றி பெறும் விவசாயிக்கு, உபரியாக 'கிருஷி ரத்னா' (விவசாய ரத்தினம்) என்ற பட்டமும் வழங்கப்படும். இரண்டாவது, மூன்றாவது பரிசுகள் கூட டிராக்டர்கள்தான். அடுத்த மாதத்தில் இந்தியாவெங்கும் இந்தப் போட்டி நடக்கவிருக்கிறது.

சென்ற வருடத்திலிருந்துதான் இந்த போட்டி நடத்தப்பட்டு வருகிறது. போன தடவை 'கிருஷி ரத்னா' விருதும், பரிசும் யாருக்குக் கிடைத்தது? பஞ்சாபைச் சேர்ந்த ஜக்ரூப் சிங்கிற்குத்தான்.

சென்ற வருடத்து அனுபவம் எப்படி இருந்தது?

டாஃபேயின் துணைப் பொது மேலாளரான விஜயகுமார் பிரவுனிங் கூறுகிறார்.

"நாங்கள் எதிர்பார்த்ததைவிட பெரும் அளவில் விவசாயிகள் இந்தப் போட்டியில் கலந்து கொண்டார்கள். இந்தியாவெங்கும் நாற்பத்து மூன்று மையங்களில் இந்தப் போட்டி நடைபெற்றது. மொத்தத்தில் ஆயிரத்துக்கும் அதிகமானவர்கள் பங்கேற்றார்கள். நான்கு பிராந்தியங்களிலும் முதல் மூன்று இடம் பெற்றவர்கள் பங்கேற்ற இறுதிச் சுற்றுப் போட்டி மதுரையில் நடைபெற்றது.

போட்டியில் மொத்தம் ஐந்து சுற்றுகள்.

முதலாவது குவிஸ். டிராக்டர் பற்றிக் கேட்கும் கேள்விகளுக்கு பதில் சொல்ல வேண்டும். இரண்டாவது சுற்று, நினைவாற்றல் போட்டி. டிராக்டரின் பத்து ஸ்பேர் பார்ட்களை வைத்திருப்பார்கள். சில நிமிட நேரம்



• ஜக்ரூப் சிங்

அவற்றைப் பார்க்க அனுமதி. அதன் பின், பார்த்தவற்றை, ஒன்று விடாமல் ஞாபகப்படுத்தி, எழுத வேண்டும். அடுத்தபடியாய் '8' போடும் போட்டி. டிரைவிங் லைசென்ஸ் வாங்கப் போனால், ஆர்.டி.ஓ. ஆபிசில் போடச் சொல்லுகிறாற் போல, டிராக்டரில் "8" போட்டுக் காட்ட வேண்டும். ஆனால் என்ன? '8'ஐ ரிவர்சில் டிராக்டர் ஓட்டியபடி போட வேண்டும்; அது மட்டுமில்லை. உங்கள் டிராக்டருக்குப் பின்னால், ஒரு டிரெயிலர் இணைக்கப்பட்டிருக்கும்.

நான்காம் சுற்றும் சற்று வித்தியாசமானதுதான். டிராக்டரைப் பயன்படுத்தும் போது, தேவைக்கேற்ப இணைக்கப்படும் 'அட்டாச்மெண்ட் சமாசாரங்கள்' உண்டு. டிராக்டரை ஓட்டிக் கொண்டு போய், குறிப்பிட்ட அட்டாச்மெண்ட்டை, தனி ஆளாகவே இணைத்துக் கொண்டு வர வேண்டும்.

இறுதிச் சுற்றில், ஒருவரது உண்மையான உழவுத் திறன் பரிசோதிக்கப்படும். ஆளுக்கு 300 ச.மீ. பரப்பளவுள்ள நிலம் தரப்படும். அதை டிராக்டர் கொண்டு உழ வேண்டும். இதுவே மிகக் கடினமான சுற்று எனலாம். காரணம், சீக்கிரமாய் உழுது முடிக்க வேண்டும். அதே நேரம் சிறப்பாகவும் உழவேண்டும். தவிர, எந்த ஒரு சிறு பகுதியையும் உழாமல் விட்டு விடக்கூடாது.

போட்டி தவிர, விவசாயிகள் பங்கேற்க பலவிதமான பொழுதுபோக்கு விளையாட்டுகளும் ஆங்காங்கே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

இந்தப் போட்டியில் ஒரு விசேஷம் என்னவெனில், ஒரு பெண்மணியும் பங்கேற்று டிராக்டர் ஓட்டியதுதான்! அவர் பெயர் வசந்தி தேவி. ஈரோட்டைச் சேர்ந்தவர். அவர் போட்டியில் வெற்றி பெறவில்லை என்றாலும், அவரை ஊக்குவிக்கும் விதமாய், சிறப்புப் பரிசு அளிக்கப்பட்டது.

விவசாயப் பெருங்குடி மக்களே! 'கிருஷி ரத்னா' கிரீடம் சூட்டிக் கொள்ளத் தயாராகுங்கள்! ஆல் தி பெஸ்ட்.

— எஸ். சந்திரமௌலி

## போட்டாரே ஒரு போடு!

ஒரு கம்பெனியில், சார்டர்டு அக்கவுண்டென்ட்களுக்கான இன்டர்வியூ நடைபெற்றது. அமெரிக்கா, பிரான்ஸ், ஜெர்மனி, இந்தியா ஆகிய நான்கு நாடுகளைச் சேர்ந்த சார்டர்டு அக்கவுண்டென்ட்கள் இன்டர்வியூவுக்கு வந்தனர். ''இரண்டும், இரண்டும் எவ்வளவு?'' இதுதான் இன்டர்வியூவின் போது கேட்கப்பட்ட கேள்வி. அமெரிக்கர், ''இதெல்லாம் ஒரு கேள்வி என்று கேட்டு, என் அறிவைச் சோதிக்கிறீர்களா! உங்கள் வேலையே எனக்கு வேணாம்'' என்று சொல்லி விட்டுப் போய்விட்டார். பிரெஞ்சுக்காரர், கால்குலேட்டரில் கணக்குப் போட்டுப் பார்த்துவிட்டு, ''நான்கு'' என்று விடை சொன்னார். ஜெர்மானியர், தமது மினி கம்ப்யூட்டரில் கணக்குப் போட்டு, பிரின்ட் அவுட் எடுத்துக் கொடுத்து விட்டார். ஒரு வார்த்தை பேசவில்லை. அடுத்து வந்த இந்தியர், ''உங்களுக்கு என்ன விடை வேண்டுமென்று சொல்லுங்கள். அதற்கேற்ப, அட்ஜெஸ்ட் பண்ணிக் கொடுக்கிறேன்'' என்றாரே பார்க்கலாம்!

– *போலாரிஸ் சாஃப்ட்வேர் நிறுவன பத்திரிகையாளர் சந்திப்பில் கேட்டவர் : மௌலி*



பிரபல நாவலாசிரியர் அலெக்சாந்தர் டூமாஸ் ஒரு சமயம் விக்டர் ஹியூகோவிடம் ஒரு யோசனையைத் தெரிவித்தார். ''நாம் இருவரும் சேர்ந்து ஒரு நாவல் எழுதலாமே?'' ''அது எப்படி இயலும்? குதிரையும், கழுதையும் சேர்ந்து வண்டி இழுக்க முடியுமா?'' என்று ஹியூகோ கேட்டார். உடனே டூமாஸ் ''என்னுடன் சேர்ந்து எழுத இஷ்டமில்லையென்றால் பரவாயில்லை. அதற்காக என்னைக் குதிரை என்று கூப்பிட வேண்டாம்!'' என்றார்.

– இரா. பார்த்திபன்

# அக்னிசர்மா பக்கம்

**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*



குருவும் கேதுவும் உங்க பக்கம் ரொம்ப ஸ்ட்ராங்கா சப்போர்ட் பண்றதால தன்னம்பிக்கை எக்கச்சக்கமா எகிறி, எந்த வேலையானாலும் சூப்பரா செய்து முடிப்பீங்க. பணப் பிரச்னை இருக்காது. சிலருக்கு வெளியூர்லேருந்து நல்ல செய்தி ஏதாவது வரும். பெண்கள், குடும்பத்தாரை அனுசரிச்சிப் போகணும். அநாவசியமான வம்பு விவகாரங்கள்ல தலையிடாம இருக்கறது எல்லாருக்குமே நல்லது.

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசிரிஷம் 2-ம் பாதம் வரை)*



எதிரிப்படை அதிகமாயிட்டே போவுது. உங்களை ஒரு சாதனையாளரா ஆகவிடாம நிறையப்பேர் தடை போட்டுட்டே இருக்காங்க. நீங்க என்ன பண்றீங்க; எதைப் பத்தியும் கவலைப்படாம சுறுசுறுப்பா வேலைல கவனம் செலுத்துங்க. சோம்பேறித்தனத்தை விட்டொழிச்சாலே முக்காவாசி வெற்றி உறுதி. இந்த வாரம் கடுமையான பொருளாதார நெருக்கடியைச் சந்திக்க வேண்டி வரும். உறுதியா, கவனமா இருங்க.

**மிதுனம் :** *(மிருகசிரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*



அதிர்ஷ்ட தேவதை கதவைத் தட்டப் போவுது. பொருளாதார ரீதில நல்ல முன்னேற்றம், புதிய வாய்ப்புகள் வந்து சேரும். அலுவலகத்துல இருந்த பிரச்னைகள் நீங்கி, மேலதிகாரிகளோட நெருக்கமான உறவு நிலை ஏற்படும். கலைத் துறையினருக்குப் புதிய ஒப்பந்தங்கள், பரிசு, விருந்துன்னு ஏதாவது மகிழ்ச்சிகரமான சம்பவம் கட்டாயம் உண்டு.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*



கொஞ்சம் சிரமப்பட்டுத்தான் உங்க காரியங்களை வெற்றி பெறச் செய்ய முடியும். எதிலும் அகலக்கால் வைக்காதீங்க. யாரையும் எடுத்தெறிஞ்சி பேசாதீங்க. இந்த வாரம் உடல் நலத்துலயும் ரொம்ப கவனம் காட்டறது நல்லது. சிலருக்கு பூச்சிக்கடியால அலர்ஜி மாதிரி வரலாம். பெண்களுக்குப் பயணத்துல ஏதாவது பிரச்னை வரலாம்! உஷார்.

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*



உங்களோட முக்கியமான மைனஸ் பாயின்ட், உங்க பதற்றம். எந்த வேலையையும் பதறாம செய்யுங்க. சில பெரிய மனிதர்களோட தொடர்பால இந்த வாரம் உங்களுடைய முக்கியமான சில பிரச்னைகள் தீரும். மனசுல தெம்பும் உற்சாகமும் பிறக்கும். வீட்ல ஏதாவது கல்யாணப் பேச்சு தொடங்கலாம். பெண்களுக்கு இது காதல் கைகூடும் வாரம்.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*



சமயோசிதமா செய்யற காரியங்கள் வெற்றியடையும். அதே சமயம் எதையும் அதிக சிரமப்பட்டுத்தான் முடிக்க வேண்டி வரும். பெற்றோரால் பையன்களுக்கு ஏதாவது நல்லது நடக்கும். தொழில் தொடங்க விருப்பப் படறவங்கன்னா, பேங்க் லோன் இப்ப சாங்க்ஷன் ஆகும். விளையாட்டு வீரர்கள், எழுத்தாளர்களுக்கு இது ஏற்றமான வாரம்.

**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல்*

சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)



குரு பலன் கூடியிருக்குங்க. பலருக்குக் கல்யாண யோகம் வந்திருக்கு. உங்க கனவுகள் கைகூடும் தருணம் இது. பண நடமாட்டம் தாராளமா இருக்கும். சிலருக்கு விருந்துகள்ல கலந்துக்கற வாய்ப்புக் கிடைக்கும். ஷேர் கூட லாபமாகவே இருக்கும். பார்த்துக்கங்க. பசங்க விளையாட்டு நேரத்துல எச்சரிக்கையா இருக்கணும். கைல கால்ல அடிபட சான்ஸ் இருக்குது.

**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*



பணப் பிரச்னை இல்லைங்க. அதுவே பெரிய ரிலீஃப் இல்லீங்களா? இப்ப உங்களுக்குப் பல வழிகள்லேயும் உதவி செய்யறவங்க அதிகரிச்சிருக்காங்க. நீங்க திட்டமிட்ட காரியங்கள் எல்லாம் பிரமாதமா நடக்கும். ஆனாலும் நீங்க பயணத்துலயும் உடல் நலத்துலயும் எச்சரிக்கையா இருக்கணும். குறிப்பா வயசானவங்களுக்கு வயிறு சம்பந்தமான பிரச்னைகள் வரலாம், கவனம்!

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



குறுக்கீடுகள் நெறைய இருக்கும். ரொம்ப விழிப்போட இல்லாட்டி உங்களைக் கவிழ்க்க ஒரு கோஷ்டியே காத்துட்டு இருக்கு. யார் கிட்டவும் கடன் வாங்காதீங்க. அன்பை மட்டுமல்ல; எலும்பையும் முறிக்கும் அது! வெளியூர்ப் பயணங்கள் இருக்கும்னாலும் குறிப்பா விசேஷம் எதுவும் அதனால ஏற்படாது. ஷேர், ரேஸ் பக்கம் தலை வெச்சுப் படுக்காதீங்க. உடல் நலத்துல எச்சரிக்கையா இருங்க.



துலா ராசிக்காரரான கங்கை அமரனுக்கு விருந்துகள்ல கலந்துக்கற வாய்ப்புக் கிடைக்குமாம். கனவுகள் கைகூடுமாம்!

**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*



உங்களுக்கு டைம் கொஞ்சம் சரியில்லைங்க. எதிர்பார்த்தபடி வளர்ச்சி இருக்காது. குறிப்பா வியாபாரிகளுக்கு நிறைய சோதனைகள் வரலாம். அநாவசிய பேச்சுகள் வேணாம். வீண் வம்பு விவகாரங்கள்ல தலை கொடுக்காதீங்க. பெண்களுக்குக் குழாயடிச் சண்டை ஏற்படலாம், எச்சரிக்கை! ஒரு இக்கட்டான நேரத்துல எதிர்பாராத உதவி ஒண்ணு உங்க சகோதரர் மூலமா கிடைக்கும்.

**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*



உங்களுடைய கஷ்டங்கள் எல்லாம் தீர்ந்து போச்சு! எதிரிகள் பணாலாயிட்டாங்க. அப்புறம் என்ன கவலை? இந்த வாரம் கோவில் குளம் சுத்தற வாய்ப்பு பலருக்கு உண்டு. புதிய நகைகள் வாங்குவீங்க. பெண்களுக்கு கல்யாணம் கை கூடும். அதிர்ஷ்ட வாய்ப்புகள் பெருகும். தலைவலி மாதிரி லேசான உபாதைகள் இருக்கும்.

**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*



பொருளாதார நிலை அத்தனை திருப்தியா இருக்காதுங்கறதுனால அநாவசிய செலவுகளைத் தவிர்க்கப் பாருங்க. ஆபீஸ்ல யாரைப் பத்தியும் கமென்ட் அடிச்சி மாட்டிக்காதீங்க. குறிப்பா காவல் துறையினர் ரொம்ப எச்சரிக்கையா இல்லாட்டி, அதிகாரிகளோட கண்டனத்துக்கு ஆளாகலாம்! கணவன் மனைவி உறவுல லேசா ஊடல்கள் வரும். பெரிசு படுத்தாம விட்டுக் கொடுத்து நடந்துக்கிட்டீங்கன்னா நல்லது. டாக்டர்களுக்கு நிறைய பேஷன்ட்ஸ் வர்ற வாரம் இது!

வட்டமேஜை

✉ சேரனின் பேட்டி அவர் படத்தைப் போலவே பிரம்மாண்டம், ஆர்ப்பாட்டமில்லாமல் இருந்தது. பாராட்டுக்கள்.
தூத்துக்குடி - 1,
எஸ். ராமசுப்பிரமணியன்.

✉ கல்கி வழங்கிய உணவு ஸ்பெஷல் மிகவும் அருமை. பெண்களுக்கு என்றே வெளியாகும் பத்திரிகைகளில்கூட இத்தகைய உணவு வகைகளைப் படித்ததில்லை. உணவு சம்பந்தப்பட்ட ஜோக்குகளை உடன் வெளியிட்டது மேலும் மெருகூட்டியது!
சிதம்பரம் -1, ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ பிரமாண்டமான ஆங்கில எம்.ஜி.ஆர். படமான 'THE MASK OF ZORRO'வுக்கு எழுதியிருந்த விமர்சனம் படு 'ZORRA' (ஜோரா) இருந்தது
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

# கோடி கோடி வணக்கமப்பா!

✉ பொதுவாகவே பா.ராகவனின் கதைகள் கருத்துச் செறிவுள்ளதாகவும், அதே சமயத்தில் நகைச்சுவையும் மிளிர்ந்து காணப்படும். "தீபாவளி மலர் எழுத்தாளர்" அதற்கு இன்னொரு எடுத்துக்காட்டு.
விழுப்புரம்-2, வை. வெங்கடேசன்.

✉ சினிமா ஸ்பெஷல் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தது. படையப்பாவுக்கு ஏசி ரூம் போட்டு கதை பண்ணாமல் கேட்டவுடன் பளிச்சென்ற கதை சொன்ன இவருக்கும் பாராட்டுகள்.
சென்னை - 74, லலிதா செல்லப்பா.

✉ 'பிரிவு' என்னும் சிறந்த கவிதையைத் தந்து விட்டு கவிஞர் நா. சி. வரதராஜன் அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார். நெஞ்சம் வருத்துகிறது கவிஞரின் மறைவு. தமிழுக்குப் பேரிழப்பு!
நாகர்கோவில்,
நாஞ்சில் உ. ராமநாதன்

✉ பாரப்பா கல்கியப்பா! படையப்பா அட்டையப்பா! கூறப்பா நன்றியப்பா! கோடி கோடி வணக்கமப்பா!
சித்தோடு, டி. சந்திரன்

✉ அருமையான தலையங்கம்! பொறுப்புள்ளவர்கள் படித்துத் தங்கள் பொறுப்பை உணர்வார்களா? ஜாதியின் பெயரால் மக்கள் ஒருவரை ஒருவர் வெட்டிச் சாய்த்து மடிவதை மனிதாபிமான அடிப்படையில் தடுக்க முயல்வார்களா? இந்த ஒரு விஷயத்திலாவது ஆளுங்கட்சி எதிர்க்கட்சி அரசியலை மறந்து, ஒன்றுபட்டு ஜாதிக் கலவரங்களைத் தடுக்க முயல்வதே உயர்ந்த மனிதநேயமாகும்.
தஞ்சாவூர் - 4, ஏ. ஜெயகிருஷ்ணா

✉ 18.10.98 இதழ் தராசு பதில்கள் பகுதியில், 'அமெச்சூர் நாடகங்களை நாம் கெட்ட கனவாக மறந்துவிட வேண்டும். எதிர்காலத்தில் சபா நாடகங்கள் எதிர் நீச்சல் போட முடியாது' என்று நான் சொன்னதாக ஒரு வாசகர் கேட்க, அதற்கு பதிலளித்திருந்தீர்கள். நான் அவ்வாறு பேசவே இல்லை. நான் சொன்னது இதுதான்: 'அமெச்சூர் நாடகங்களுக்கும் நாடகங்களுக்கும் போட்டியே கிடையாது. நாடகங்கள் காலத்தில் நிலைத்து நிற்கும்.'
சென்னை, இந்திராபார்த்தசாரதி.

✉ ஈசா யோகா மையத்தில் நடைபெற்ற "ஈசா திருவிழா '98" பற்றிய செய்தி வெளியிட்டிருந்தீர்கள். "ஈசா திருவிழா" சற்குரு ஜக்கி வாசுதேவ் அவர்களால் நடத்தப்படுவது கிடையாது. அவர் ஞானம் அடைந்த நாளை திருவிழாவாக அவரது சீடர்கள் கொண்டாடுகிறார்கள். அன்றைக்கு அவர் பார்வையாளர் மட்டுமே. "ஈசா யோகா மையம்" வனத்துறைப் பகுதியில் அமைந்துள்ளதால் வனத்துறை சாலையைப் பயன்படுத்தும் எந்த ஒரு வாகனமும் ரூ. 20/ செலுத்த வேண்டியுள்ளது. அதற்காக அந்தப் பணம் வசூலிக்கப்பட்டது. விழாவுக்கு வந்திருந்த தியான அன்பர்கள் சுமார் நான்காயிரம் பேர் இருக்கலாம். நடனத்தின் மூலம் இறைத்தன்மையை உணருதல் பகவான் கிருஷ்ணர் காலம் முதல் இருந்து வருவதுதான். பாலமுரளி கிருஷ்ணா அவர்கள் மேடையில் ஏறியதும் சற்குரு அவருக்கும் அவரது குழுவினருக்கும் நினைவுப்பரிசுகள் வழங்கினார். பின்னர் நிகழ்ச்சி முடியும்வரை அமர்ந்திருந்தார். சற்குரு அவர்கள் வடிவமைத்திருக்கும் பிராணாயாமம் மற்றும் தியானம் மூலம் எண்ணற்றவர் உடல் நலத்திலும், ஆன்மீக நிலைகளிலும் வளர்ச்சி அடைந்துள்ளனர்.
திருச்சி - 1, என். ஸ்ரீராம், சி. ராமசுப்ரமணியன்

• ஜெர்மனியில்
தொழிலாளர் போராட்டம்




# ஜெர்மனியில் புதுக்குடித்தனம்!

பதினாறு வருடங்கள் (மேற்கு) ஜெர்மனியை ஆண்டவர் ஹெல்மட் கோல். ஆனால் அவரை 'என்றும் பதினாறாக' இருக்கவிடாமல் கடந்த தேர்தலில் வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள் மக்கள். இத்தனைக்கும் அவர் காலத்தில்தான் பெர்லின் சுவர் உடைக்கப்பட்டு இரண்டு ஜெர்மனிகளும் இணைந்தன.

அப்படி இணைந்தபோது மேற்கு ஜெர்மனி தன் கிழக்கு சகோதரனைவிட பல மடங்கு உயர்ந்த பொருளாதார நிலையில் இருந்தது உண்மைதான். ஆனால் 'இரு நதிகளும் இணைந்து விட்டால் ஒன்றாகிவிடும்' என்று கோல் போட்ட கணக்கு தவறிவிட்டது. இணைப்புக்குப் பிறகு, கடந்த ஏழு வருடங்களில் பலகோடி மார்க்குளை கிழக்கு ஜெர்மனி பகுதியில் செலவழித்து அங்கு தொழிற்சாலைகள் பெருகுவதற்கு வழி வகுத்தது அரசு. ஆனால் மேற்கு ஜெர்மனியில் உள்ள பல நிறுவனங்கள், கிழக்கு ஜெர்மனியில் புதிதாக உருவான நிறுவனங்களை அப்படியே விலைக்கு வாங்கி வளைத்துப் போட்டன. போதாக்குறைக்கு அவற்றிற்கு மூடு விழாவும் நடத்தி, கிழக்கு ஜெர்மனியில் தங்களுக்குப் போட்டியில்லாமல் பார்த்துக் கொண்டன! இதன் விளைவாக தங்கள் பகுதியில் வேலையில்லாத் திண்டாட்டம் எக்கச்சக்கமாக அதிகமாகிவிட, "அரசின் மாற்றாந்தாய் மனப்பான்மைதான் இதற்கெல்லாம் காரணம்" என்று கிழக்கு ஜெர்மனி மக்கள் நினைத்ததும் தேர்தலில் கோல் தோல்வியடைய முக்கிய காரணமாக அமைந்தது.

என்றாலும் மொத்த ஐரோப்பாவுக்குமாக ஒரே நாணயத்தை உருவாக்குவதில் கோல் மேற்கொண்ட முயற்சிகள் வெற்றியடைந்தன. அடுத்த ஐந்து வருடங்களில் 'யூரோ' என்ற ஒரே நாணயத்தைத்தான் அத்தனை ஐரோப்பிய நாடுகளும் பயன்படுத்தப் போகின்றன.

இப்போது ஜெர்மனியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பவர் ஜெரார்டு ஷ்ரோடர். சற்றே இடது சாரி கொள்கைகளைக் கொண்ட குடியரசுக் கட்சியைச் சேர்ந்தவர். (இப்போது பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளை ஆட்சி செய்வது ஓரளவாவது இடது சாரிக் கட்சிகள்தான் என்பது குறிப்பிடத்தக்கது).

உலகமயமாக்கலைத் தொடர்ந்து, 'சமூக நலனை' முக்கியமான கொள்கையாகக் கொள்ளாமல், சந்தைப் பொருளாதாரத்துக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்றும், உலகிலேயே தொழிலாளிகளுக்கு அதிகக் கூலி வழங்கும் நாடாக ஜெர்மனி இருப்பது மாற்றப்பட வேண்டும் என்றும் நிர்பந்தங்கள் தொடங்கிவிட்டன. இதன் காரணமாக இந்தப் புதிய தலைவரால் தமது தேர்தல் வாக்குறுதிகளை அப்படியே நிறைவேற்ற முடியுமா என்பது தெரியவில்லை. இத்தனைக்கும் உலகப் பொருளாதார வரிசையில் ஜெர்மனி நிற்பது மூன்றாவது இடத்தில்!

— குல்லூ

## மார்கழி நெருங்குகிறது!

சிவசேனைக்காரர்களை "saffron week" கொண்டாட விடாமல் இந்தப் பாழாய்ப் போன வானம் அழுது தீர்க்கிறதே! தாக்கரே, ராஜ், உதவ், ஏனைய மந்திரிமார் எல்லோரும் மஹாராஷ்ட்ரா முழுதும் சுற்றுப் பயணம் செய்து, உற்சாகமிழந்து தொய்ந்து கிடக்கும் ஆதரவாளர்களைத் தட்டி எழுப்பலாமென்று மேடை அமைத்தால் இந்த வருண பகவான் தப்புத் தாளங்களைப் போடுகிறானே? தொண்டர்களைத் திரட்டுவதே பெரும்பாடாகி, ஆங்காங்கே கூட்டம் கான்சலாகி, ஆரம்பமே சரியில்லை... இந்த இடைவெளியில் "விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் வழங்க வேண்டும்" என்று தசரா பேரணியில் தாக்கரே முழங்கியபோது "சரி...சரி" என்று கூடப்பாடிய பி.ஜே.பி.க்காரர்கள், இப்போது "சா...ரி...சாரி" என்று சோக கீதமிசைக்கிறார்கள். "இலவச வீடு வழங்கும் திட்டமே போணியாக வில்லை; இலவச மின்சாரம் வேறு வழங்கினால், கோரஸாக "கோவிந்த ஹரே... கோபால ஹரே" பாட வேண்டியதுதான். மஞ்சள்-ஸாரி- ஆரஞ்சுத் துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு" எனப் பலரும் நினைக்கிறார்கள். இப்போதெல்லாம் மும்பையில் அடிக்கடி நீண்ட நேரத்துக்கு மின்சாரத் தடை ஏற்படுவதைப் பார்த்தால், பஜனைக் காலம் நெருங்குகிறது போலல்லவா தெரிகிறது?



## ஒலி குறைந்தால் ஒளி பெருகுமா?

இந்த வருட தீபாவளியில் ஒலியுமில்லை; ஒளியுமில்லை; பிஸினஸ்காரர்கள்தான் அண்டர்வர்ல்ட் அராஜகத்தால் "Black Diwali" கொண்டாடுகிறார்கள் என்றால், பொது மக்களுக்கும் பொருளாதார சீர்குலைவால், பழைய தீவிரமில்லை; நகைக்கடைக்காரர்கள் முகத்தில் ஜ்வலிப்பே போய்விட்டது; "கிஃப்ட்" கடைகளிலும் முந்தைய படாடோபமில்லை; பெண்கள் தயவில் ஏதோ புடைவை, பாத்திரக் கடைகள் கொஞ்சம் கலகலத்தன. பட்டாசு சத்தம் பிரமாதமாகக் கேட்காதது, ஒரு விதத்தில் நிம்மதியளித்தது; CRY, YUVA போன்ற இயக்கங்களின் வேண்டுகோளுக்கிணங்க ஒலியற்ற தீபாவளி கொண்டாடினாலாவது, இதன் உற்பத்தியில் இளமைப் பருவத்தை வீணடித்துக் கொண்டிருக்கும் ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட குழந்தைகளின் வாழ்வில் ஒளி பிறக்குமா?

## மான் வலையில் சல்மான்

வனவிலங்கு வாரம் நடக்கையில், கைவிலங்கை மாட்டிக் கொள்வது வேதனைதான்; அதிலும் தமது படங்களெல்லாம் ஓஹோவென்று ஓடிக் கொண்டு, சூப்பர் ஹிட்டாகியிருக்கையில், ஓடிக் கொண்டிருந்த மானை வேட்டையாடிவிட்டு வனத்துறை ஹிட் லிஸ்டில் தாமாகவே இடம் தேடிக் கொண்டிருப்பது, 'சூப்பர்' பேதமை! ஜோத்பூரில், ஸோனாலி, நீலம், தபு போன்றோருடன் இந்திப்பட ஷூட்டிங்கை முடித்தோமா மும்பை திரும்பினோமா என்றில்லாமல், யாரிவரை இந்தச் சிங்காரிகளுடன் 'சின்காரா' ஷூட்டிங்குக்குப் போகச் சொன்னது? "ப்ளாக் பக்", "சிதால்", "சின்காரா"- இனத்துக்கு ஒன்று என மூன்று குற்றங்கள். பெயிலில் எடுப்பதே உன்பாடு என்பாடு என்றாகிவிட்ட நிலையில், தந்தை ஸலீம்கான் (ஸ்க்ரிப்ட் ரைட்டர்) வேறு மாட்டிக் கொண்டிருக்கிறார். அவரது ஃபார்ம் ஹவுஸிலிருந்து காட்டிலாகா அதிகாரிகள், போதை நிலையில் சில மான்களையும் மயில்களையும் (அசல் மான், மயில்

மும்பை மசாலா

தான்) பிடித்திருக்கிறார்கள். போரிவிலி ஜூவுக்குப் போகும் வழியில் ஒன்று உயிரை விட்டிருக்கிறது. இவற்றுக்கு அடைக்கலம் கொடுத்ததாக ஸலீம் சொல்கிறார்; தன்னை யாரோ வேண்டுமென்றே பழி வாங்குவதாக ஸல்மான் சொல்கிறார். மேனகா காந்தியோ, வேட்டையாடும் ஹீரோக்களின் படங்களை தியேட்டரிலிருந்தே விரட்டச் சொல்கிறார். பாலிவுட்டோ போலியாக 'ஐயோ பாவம்'

தீபாவளி!

என்கிறது. சிவசேனைக் காரரான வக்கீல் சிரோத்கர், கானை யாரும் அசைக்க முடியாது என்கிறார். மானின் வலையில் சிக்கிய சல்மானின் நிலை என்ன?– தீபாவளி ரிலீசுகளில் ''த்ரில்லர்'' இதுதான்! வேடிக்கை என்னவென்றால் World wide fund for Nature-India '99 ஸ்பெஷல் காலண்டரில் ஸல்மான் இடம் பெற்றிருக்கிறார்!

## வெங்காயத்துக்கு செக்யூரிட்டி!

இண்டலடிப்பதில் ஒவ்வொருவருக்கும் ஒரு தனி ஸ்டைல்– இது ஜஸ்பால் பட்டி "இஷ்டைல்"! அண்மையில் போலீஸ் கமிஷனர் மென் போன்காவுக்கு இவரிடமிருந்து கடிதம் பறந்தது – "நான் பத்து கிலோ வெங்காயம் வாங்குவதாக இருக்கிறேன்; இந்த விலையுயர்ந்த பொக்கிஷத்தை நான் எடுத்துச் செல்கையில், வழியில் துப்பாக்கி முனையில் யாராவது கொள்ளையடிக்கக் கூடிய அபாயமிருப்பதால், என் உயிருக்கே ஆபத்து என்ற நிலையில் எனக்கு இரண்டு செக்யூரிட்டி கார்டுகள் தேவை"– என்ற விண்ணப்பத்துடன்! கையோடு ஒரு பிரஸ் ரிலீஸ் வேறு– 'தீபாவளியை முன்னிட்டு 'ஃபெஸ்டிவல் அட்வான்சாக' வெங்காயம் கொடுக்க வேண்டும்; வங்கிகள் வெங்காய லோன் அளிக்க வேண்டும்' என்ற கோரிக்கைகளுடன்! டர்பனுக்குள் மனிதர் மூட்டை மூட்டையாக 'ஐடியா'க்களைச் சுமக்கிறார்!

## இலவச இணைப்புகள்

தீபாவளி மலரை வாங்க வைப்பதற்கே காரையும் ஸ்கூட்டரையும் காட்டி மயக்க வேண்டியிருக்கிறதென்றால் தீபாவளி சமயத்தில் தேனிலவு கொண்டாட வரும் இளசுகளைக் கவர "ரிஸார்டுகள்" எவ்வளவு இலவச இணைப்புகளை வாரி வழங்க வேண்டியிருக்கும்? மாதிரிக்கு, இதோ, மும்பையைச் சுற்றியியங்கும் விடுமுறை விடுதிகளைக் கொண்ட ஒரு நிறுவனம் வழங்கிய தேனிலவு "பாக்கேஜ்"– பெண்ணுக்கு டிஸைனர் நைட் கவுன்; threading, waxing manicure, pedicure வகையறாக்கள்; ஆண் பெண் இருவருக்கும் வாசனைத் திரவியங்கள்+ஆயில் மஸாஜ்; போதையூட்டும் மசாலா பால்... ஹூம்! மெடர்னிடி ஹோமில் ரூம் புக்கிங் ஒன்றுதான் பாக்கி!

## இந்த வாரக் கொலைகள்!

மும்பை மசாலாவில் நிரந்தரமாக இப்படி ஒரு 'காலம்' ஆரம்பித்து விடலாம் போலிருக்கிறது. இந்த வார 'கோட்டா'வாக சில பல கொலைகள். குரூரமானது குருப்பின் கொலை; 'குருப்பையே கொலை செய்பவர்கள் வேறு யாரை விட்டு வைப்பார்கள்?' என்று பிசினஸ்காரர்களெல்லாம் புலம்புமளவுக்கு நல்லவராம்! பாண்டுப்பில் உணவு விடுதி நடத்திக் கொண்டிருந்தவரை பட்டப்பகலில் குண்டுக்கு இரையாக்கியுள்ளனர்; ஏதோ நிலத்தகராறு என்று கூறப்படுகிறது. இதைவிடக் கொடுமை, கல்யாணில் தீபக் ஷெட்டி என்ற ஒரு டாக்டரை, பேஷண்டுகளாய் வேஷமிட்டு வந்த இருவர், அவரது நர்ஸிங் ஹோமிலேயே தீர்த்துக் கட்டியிருப்பது. அண்டர்வர்ல்டின் 'எக்ஸ்டார்ஷன்' பசிக்கு, அநியாயமாக இரையாகியுள்ளார். சுற்றியுள்ள பகுதியிலிருந்து மருத்துவர்கள் சமூகமே வெகுண்டெழுந்து, மோர்ச்சா நடத்தி, போலீஸ் கமிஷனரிடம் எதிர்ப்பைத் தெரிவித்திருக்கிறது. காவல் துறையிடம் நம்பிக்கை இழந்து ஏற்கெனவே 50% பிசினஸ் சமூகம் குஜராத்துக்கு ஓடிவிட்டது; ஏனையோர், வியாபாரிகள் சுரக்ஷா கமிட்டி என்று தாங்களாகவே அமைத்துக் கொண்டு, தற்காப்பு நடவடிக்கைகளில் ஈடுபடப்போகிறார்களாம். ●

– ஜெயஸ்ரீ ராஜ்

ஆர். வெங்கடேஷ்

"நீ போக வேண்டாம்மா?" என்றாள் அம்மா.

"ஏம்மா? எதுக்குப் போக வேண்டாம்னு சொல்றீங்க? இத்தனை நாள் நான் போய் வந்துக்கிட்டுத்தானே இருக்கேன்? இப்ப என்ன தப்பு?"

"நாலு பேரு நாலு விதமா பேசுவாங்க சுந்தர்."

"என்னம்மா புதுசா பேசறீங்க. மூணு நாலு வருஷப் பழக்கம் அவங்க. இதுவரைக்கும் யாரும் பேசலியே?"

"இல்லை சுந்தர். ஒரு விஷயத்தை நீ புரிஞ்சுக்கோ. எல்லார் கண்ணும் ஒரே மாதிரி இருக்காது."

"சரிம்மா. தெரியும்."

"நாம யார் வாயிலேயும் அடி படக் கூடாது."

"நீங்க பேசறது வேடிக்கையா இருக்கும்மா. வராத ஒண்ணை நினைச்சு பயப்படறதும், யார்னே தெரியாத நாலு பேர நெனைச்சு, நம்ம சுதந்திரங்களைக் கை விடறதும் ரொம்ப பைத்தியக்காரத்தனம்."

"எனக்கும் பைத்தியக் காரத்தனமாத்தான் இருக்கு. என்ன பண்றது சொல்லு? நம்மச் சுத்தி இருக்கறவங்களும் நாம யோசிக்கறா மாதிரியே யோசிப்பாங்கன்னு இல்லியே. ஜெயந்தி வீட்டுல அவங்க அப்பா தவிர்த்து வேற ஆம்பளையே இல்லை. நீ சுவாதீனமா போயிட்டு வரேன்னா, பாக்கறவங்க என்ன நெனைப்பாங்க? கதை கட்ட ரொம்ப நேரமாகாதுடா. அப்புறம் நீ அவஸ்தைப் பட மாட்ட. ஜெயந்திதான் தலை குனியணும். நான் சொல்றது ரொம்பப் பழைய வாதிக்கா தோணலாம். ஆனால் சமூகம் இன்னும் பழசாத்தான் இருக்கு. டீ.வி. வந்திருக்கலாம். கம்ப்யூட்டர் வந்திருக்கலாம். யோசிக்கறவங்க இன்னும் அப்படியேதான் இருக்காங்க.

சுந்தரால் அம்மாவை நம்பவே முடியவில்லை. அம்மாவை என்னவோவென்று நினைத்து விட்டோமே! அம்மாவுக்குள் தெளிந்த நீரெனக் கருத்துகள்.

மனிதனை வலையிட்டு இறுக்கும் இந்த சமூக சமத்காரங்கள் தன்னையோ, ஜெயந்தியையோ பாதிக்காது என்ற விஷயம் அம்மாவுக்குப் புதுசாயிருக்கலாம். பயமாக இருக்கலாம். அடங்கி நடப்பதே சிரத்தையான குடிமகனின் கடமையென்பது அந்தக் காலம். கேள்விகளோடு, எதையும் விசாரணைக்குட்படுத்துவதும், நல்லதை ஏற்பதும், பொய்மைகளை, மேற்பூச்சைத் தோல் உரிப்பதும் இந்தக் காலம்.

சொல்லை விடச் செயல் முக்கியம். இன்னும் பேசினால், அம்மா புண்படலாம் என்பதால், சுந்தர் அமைதியானான்.

எதைச் செய்ய வேண்டாமென இவ்வளவு நாட்கள் தவிர்த்தாளோ, அதைச் செய்யும்படி ஆகிவிட்டது. சுந்தர், மீராவுக்கு, தனக்கு தெரிந்த ஒரு பெண் வழக்குரைஞரை அறிமுகப்படுத்தியிருந்தான். சட்டரீதியாய் பிரிவு என்பதை நிரந்தரப்படுத்தி விட வேண்டும். கோவிந்துக்கு எந்த உரிமையும் இனி இல்லை என்றாக்க வேண்டும். என்றேனும் மனம் திருந்தும் குறைந்தபட்ச வாய்ப்பு கூட இனி இல்லை.

மீராவுக்கு மனம் கனத்தது. கோவிந்தைப் பிடிக்க வில்லை. அவனது குணங்கள், செயல்கள் பிடிக்கவில்லையென்பது உறுதி. ஆனால் கோர்ட் வாசல் ஏறவைப்பதும், பரஸ்பரம் குற்றம் சாட்டிக் கொள்வதும், பின்னொரு காலத்தில் முகம் காணவும் கூடச் சகியாத சூழ்நிலையை உருவாக்க விரும்பியதில்லை.

"நான் ஆம்பளையா நடந்துக்கலைன்னு கோர்ட்டுல சொல்லுவியா?"

மீரா பெட்டி படுக்கையுடன் கிளம்புவதற்கு முந்தின நாள் இரவு, கோவிந்த் கேட்டது இது.

"மாட்டேன்."

"உங்கப்பா அம்மாகிட்ட?"

"மாட்டேன்!"

"அப்ப ஏன் வந்தேன்னு கேட்பாங்களே. என்ன பதில் சொல்லுவ?"

"ஏதாவது சொல்லிக்கறேன்."

"அது உனக்கு அவமானம் இல்லை?"

"இங்க நான் படற அவமானத்தைவிட, அது தேவலையாக இருக்கும்."

கோவிந்த் பேசவில்லை. மீரா போய் விட்டாள் என்பதே முதலில் அவன் எண்ணத்தில் உதிக்கவில்லை. ஆண்டாண்டு காலமாய்க் கட்டுண்டு கிடக்கும் பிரிவுதானே இது? முகத்தில் எந்த இரக்கமும் இல்லாமல், தான் வீட்டை விட்டு வெளியேறப் போவதை மீரா சொன்னபோது, கோவிந்த் நிலை யிழந்தான்.

''நான் பிரச்னை பண்ணுவேன்னு நெனைக்கறியா?''

"யார் கண்டா?"

"என் மேல நம்பிக்கையே இல்லையா?"

"சுத்தமா இல்லை."



கையில் கிடைத்ததையெல்லாம் விசிறி எறிந்தான். கத்தினான். கூப்பாடு போட்டான். ஒரு நிலையில் கெஞ்சவும் செய்தான்.

மீரா அமைதி காத்தாள். இவையெல்லாம் அவள் எதிர்பார்த்தது. இன்னும் மோசமாய்க் கூட எதிர்பார்த்தாள். அவளது அமைதியும் உறுதியும் அவனை வெகுவாகத் தாக்கின. மீராவை எப்படியும் சமாதானப்படுத்த முடியாது என்பதை உணர அவனுக்குக் கொஞ்சம் அவகாசம் தேவைப்பட்டது. அப்புறம் அவன் கேள்விகள் எல்லாம் ஒருவித தற்காப்புத் தன்மையைக் கொண்டிருந்தன.

"டிவோர்ஸுக்கு அப்ளை பண்ணுவியா?"

"நீங்க ஏதும் பிரச்னை பண்ணாத வரைக்கும், நான் கோர்ட்டுக்குப் போக மாட்டேன்."

"சொந்தக்காரங்க கேட்டா என்ன சொல்லுவே?"

"பிரிஞ்சுட்டோம்னு சொல்வேன்."

"ஏன்னு கேட்டா?"

"எல்லாருக்கும் ஏன்னு விளக்கம் சொல்லணும்னு அவசியமில்லை."

ஒரு வகையில், தான் செய்ய நினைப்பது, அவனது சமூக முகத்தைப் பாதுகாப்பதாகவே அமையும் என்று தோன்றியது. பெண்டாட்டியை வைத்து வாழத் தெரியவில்லை. முன்கோபி. அகங்காரன். தற்குறி. இவையெல்லாம் தெரியவந்தால் என்ன தவறு? தானே எதற்கு அனாவசியமாக இதையெல்லாம் மறைக்க முயல வேண்டும்?

தெரியவில்லை. ஆண்டாண்டுகாலமாய் ஜீனில் ஒட்டி வரும் மனைவியின் குறைபாடுகளில் இதுவும் ஒன்றாக இருக்கலாம். முழுதாக அவனைத் தன் நினைவுகளிலிருந்து நீக்கி விட முடியும் என்று தோன்றவில்லை. உருவத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சலித்துக் கொள்ள வேண்டும். இது ஒரு நாள் காரியமில்லை.

கேஸ், கோர்ட், விசாரணை எல்லாம் வலி தருவது. அனுபவித்தே ஆக வேண்டியது. மீரா வாசலில் ஆட்டோ பிடித்து, சுந்தர் சொன்ன வழக்குரைஞர் வீட்டுக்குப் போனாள்.

**கா**தும் காதும் வைத்தாற்போல், விஷயம் கையாளப்படும் என்று உறுதியளிக்கப்பட்டும் புருஷோத்தமனுக்கு நம்பிக்கையில்லை. துணைக் கமிஷனர் அலுவலகத்திலிருந்து வெளி வந்தவர் முகத்தில் கலவரம் இன்னும் மிச்சம் இருப்பதை சுந்தரால் பார்க்க முடியாது. துணை கமிஷனர், சுந்தருக்குத் தெரிந்தவர். பொறுமைக்குப் பெயர் வாங்கியவர். கூடவே அசாத்திய உறுதி.

"இது ஏதோ பெரிய விஷயம்னு நெனைச்சேன். ஒண்ணுமேயில்லை. நான் பாத்துக்கறேன். நீங்க கவலப்படாம போங்க." துணை கமிஷனர் புன்னகைத்தார்.

"இதுல ஏதும் ஏடா கூடமா ஆயிடாதே?"

"ஒண்ணும் ஆகாது. சம்பந்தப்பட்ட ஸ்டேஷன்ல கூப்பிட்டு விசாரிக்கச் சொல்றேன். வார்ன் பண்ணச் சொல்றேன். ஒரு விஷயம் புரிஞ்சுக்குங்க சார். இவனுங்களெல்லாம் தொடை நடுங்கிகள். போலீஸ்காரன் வந்து கூப்பிட்டான்னு அக்கம் பக்கத்துல நாலு வீட்டுக்குத் தெரிஞ்சாவே, இவங்க வாய மூடிப்பாங்க. அதுக்கப்புறம், எங்க போலீஸ்காரங்க கேக்கற கேள்வியில, இருக்கற கொஞ்சம் நஞ்சம் ஆட்டமும் அடங்கிப் போயிடும். இதையும் மீறி ஏதாவது பண்ணா, அப்புறம் இருக்கவே இருக்கு லீகல் மெதட்ஸ்."

புருஷோத்தமனுக்கு இன்னும் மனம் ஆறவில்லை. வெளியே வந்தவுடன்,

"நாம போலீஸ் போனோம்னு தெரிஞ்சா, அவன் ஏதாவது பண்ணுவானாப்பா?"

"ஒண்ணும் பண்ண முடியாது சார்."

"இல்லப்பா. அவனுக்கு கிரிமினல் புத்தி. ஆகா, நீ இப்படியா செஞ்ச, நான் என்ன பண்றேன் பாருன்னு, ஏதாவது ஏடாகூடமா செஞ்சுடப் போறான்பா."

நேற்று வரை போலீஸ்தான் ஒரே வழியென்றவர், இன்று நடுநடுங்குவது புதுசாக இருந்தது.

இவரே இப்படியென்றால், ஜெயந்தி? எதார்த்த வாழ்வின் குரூரம் தாங்குவாளா? அதுவும் தன்னைப் போன்ற பத்திரிகையாளனின் வாழ்வை ஏற்க முடியுமா? இதில் எப்போதும் இருப்பது ஸ்திரமற்ற தன்மை. பத்திரிகை போடுபோடென்று போடும்போது எல்லாம் சரிதான். படுத்துவிட்டால், வேலை செய்தவன் பாடு திண்டாட்டம்தான். அந்த மனநிலையெல்லாம் தாங்கும் உறுதி உண்டா ஜெயந்தியிடம்?

ஜெயந்தி துன்பப்படுவதை நிச்சயம் தன்னால் தாங்கிக் கொள்ள முடியாதென்றே சுந்தருக்குத் தோன்றியது.

**ஆ**வின் பூத்தில் மீரா போல் தெரிந்தது. வண்டியை மெதுவாக்கினான் சுந்தர். நன்றாக உடல் சில்லிட்டது. கண்டிப்பாய் மழை வரும் என்று சுந்தர் நினைத்தான். இன்று நாள் முழுவதும் வெயில் இல்லையே தவிர, வெக்கை. புழுக்கம். மாலையில்தான் ஈரக் காற்று மிதந்து வந்தது.

"ஹலோ, இப்பத்தான் ஆபீஸிலேருந்து வரீங்களா?" மீரா கேட்டாள். சுந்தர் வண்டியை அணைத்து விட்டு,

"டெய்லி இந்த நேரம் ஆகும். பாரம் பண்ணும்போதெல்லாம், ஆபீஸ்லேயே தூங்கறதும் உண்டு."

வண்டியைத் தள்ளிக் கொண்டே இருவரும் நடந்தார்கள்.

"லாயர்கிட்ட போனீங்களா?" என்றான் சுந்தர்.

"ம். போனேன். எல்லாம் சொன்னேன். வழக்கம் போல காரணம், அது இதுன்னு போச்சு. அப்புறம், திருப்பியும் போய் வாழ்ந்து பாருங்களேன்னாங்க. நான் சாத்தியமே இல்லன்னுட்டேன். கடைசியா, யோசிச்சுச் சொல்றேன்னாங்க. நான் என்



"என்ன இது, டெலிபோன்ல ஒரே இருமல் சத்தமா வருது?"
"அவசரப்படாதீங்க, மானேஜர் சார். கொஞ்ச நேரம் இருமிட்டு லீவு சொல்லுவாங்க, யாருன்னு கேட்டுக்குங்க."
– அம்பை தேவா

பாயிண்ட் கிளியர் பண்ணிட்டேன். அவங்களும் நம்பிக்கையுடந்தான் பேசினாங்க. ஐ ஹோப், எவ்வரி திங் வில் கெட் செட் ரைட். அத விடுங்க. நானே உங்களை ஒரு விஷயத்துக்காகப் பார்க்கணும்னு இருந்தேன்."

"என்ன விஷயமா?"

"ஜெயந்தி சம்பந்தமாதான். நான் பெருமைக்குச் சொல்றேன்னு நெனைக்காதீங்க. அவ உங்க ஒய்ப்பா ஆறது உங்களுக்குப் பெரிய அதிர்ஷ்டம்.

"தெரியும் மேடம். ஆனா. அந்த அதிர்ஷ்டத்துக்கு நான் தகுதியுடையவன்தானாங்கறதுலதான் எனக்குச் சந்தேகம். அதே போல என்னைக் கல்யாணம் பண்ணிக்கறதும், ஜெயந்திக்கு அதிர்ஷ்டமான விஷயமா இருக்கணும் இல்லியா."

"நிச்சயமா! நீங்க அவளுக்குப் பெரிய அதிர்ஷ்டம்தான். இதுல சந்தேகம் என்ன?"

"தெரியலை மேடம்."

"என்ன தெரியலைங்கறீங்க. உங்களுக்கு இவள மாதிரி பெஸ்ட் பொண்ணு கெடைக்க மாட்டா!"

"உண்மைதான். ஆனா, என்னை விட பெஸ்ட் பர்சன் அவளுக்குக் கிடைக்கலாமில்லையா?"

"இப்ப என்ன சொல்ல வர்றீங்க?"

"ஒண்ணும் இல்ல மேடம். என் தகுதி என்னன்னு எனக்குத் தெரியல. நான் அந்தப் பெரிய அதிர்ஷ்டத்துக்குத் தகுதியுடையவனான்னு தெரியலை."

"உங்களுக்கு என்ன கொறைச்சல்? நல்ல படிப்பு, உத்தியோகம்...."

"இதெல்லாம் கோவிந்துக்கும் இருந்துதே. அவரும் ஆரம்பத்துல நல்லாத்தான இருந்தாரு? நான் பின்னாடி எப்படி மாறுவேனோ?"

சட்டென அங்கே மௌனம் தொற்றிக் கொண்டது. தான் அவசரப்பட்டுக் கேட்டு விட்டோம் என்று சுந்தர் தன்னையே நொந்து கொண்டான்.

"நீங்க தப்பா புரிஞ்சுக்கிட்டிருக்கீங்க. கோவிந்தை ஒரு உதாரணமா எடுத்துக்கக் கூடாது. நான் அனுபவப்பட்டுச் சொல்றேன். உங்க பழக்க வழக்கத்துல இருக்கறது உண்மையான மரியாதை. உண்மையான கனிவு. பரிவு. உங்களால என்னிக்கும் கோவிந்தா மாற முடியாது. பிரச்னைகள் வந்தா, அத உங்களுக்கு ஹாண்டில் பண்ணத் தெரியும்."

"இதே நம்பிக்கையோடதானே நீங்களும் உங்க லைப்ப ஆரம்பிச்சிருப்பீங்க?"

"சுந்தர், திருப்பியும் நீங்க ஒரு தவறான



''மெகா பரிசுகள் எதுவும் இல்லாமலே உங்களோட தீபாவளி மலர் எப்படிங்க பிச்சுக்கிட்டு போச்சு?''

''தீபாவளிக்கு வந்த மாப்பிள்ளையை விரட்ட 30 வழிகள்'னு ஒரு கட்டுரை போட்டிருக்கோமே, அதுக்காகவே ஆயிரக்கணக்குல ஓடிச்சு!''

– சீர்காழி ரேவதி

உதாரணத்தையே எடுத்துக்கறீங்க. நான் சரியான உதாரணம் இல்லை. இதெல்லாம் விட, ஒரு முக்கியமான விஷயம். இந்த அன்பு செய்தல், கல்யாணம்ங்கற விஷயங்கள்ல முன்னுதாரணங்கள் பயன்படாது. ஏன்னா, வாழ்க்கைங்கறது எக்ஸ்பிரிமெண்ட் மாதிரி. ஒவ்வொருத்தரும், தாங்களே முயற்சி செஞ்சு தான் பார்த்தாகணும். தாங்களே அன்பு செஞ்சு, கல்யாணம் பண்ணி, வாழ்ந்து பார்த்தாக வேண்டிய விஷயம் இது.

"வெற்றி தோல்விங்கறது இதுல ஒண்ணுமே இல்ல. முயற்சிதான் முக்கியம். முயன்று பார்க்காமல், தூர நின்னு வரட்டு வாதம் பேசறது அபத்தம். நான் உங்ககிட்ட கேக்கறதெல்லாம் முயற்சி பண்ணிப் பாருங்கங்கறதுதான். நான் முயற்சி பண்ணினேன். தோத்துட்டேன். இன்பாக்ட், நான் தோத்துட்டதாகவே நெனைக்கலை! உப்பும் புளியும் உள்ளே ஊறிய ரணம் ஆறிச்சின்னா, நான் திருப்பியும் முயற்சி பண்ணுவேன். நீங்களும் முயற்சி பண்ணுங்களேன்?"

சட்டென என்னவோ தோன்றியவள், பேச்சை நிறுத்தி சுந்தரைப் பார்த்தாள்.

"சரி, நானே ரொம்ப நேரமா பேசிட்டே வரேன். நீங்க வாயே தெறக்கலியே..."

"தெறக்க முடியல..."

காற்று இன்னும் நெஞ்சைத் தொட்டது. படியேறி, காலிங் பெல்லை அழுத்தியபோது, கதவைத் திறந்தவள் ஜெயந்தி. அன்றலர்ந்த புன்னகை. கண்களில் நடுபாடு.

முயற்சி செய்தாலென்ன என்று நினைத்த படி சுந்தர் சோபாவில் உட்கார்ந்தபோது, பால்கனியில் மழைத் துளிகள் விழத் தொடங்கியிருந்தன. ஜெயந்தியைப் பார்த்துப் புன்னகைத்தான்.

(முற்றும்)

**82**

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# குறையொன்றுமில்லை

ஜடாயு, அந்த ராமனிடத்திலே ராவணன்தான் சீதையை அபகரித்துப் போனான் என்பதைச் சொன்னான். சொன்னதுமில்லாமல், விந்தம் என்கிற முகூர்த்தத்திலே அபகரிக்கப்பட்டதனாலே, சீதை கட்டாயம் திரும்பக் கிடைப்பாள் என்றும் சொன்னான்.

ஒரு வஸ்து தொலைந்துபோய் கிடைக்காவிட்டால், கார்த்தவீர்யார்ஜுனனை நினைக்க வேண்டும் என்பார்கள். அதற்கென்று ஒரு மந்திரம் இருக்கிறது. அந்த மந்திரத்தைச் சொல்லி ஜபம் பண்ணினால் தொலைந்த பொருள் கிடைக்கும். அதனால்தான் ஜடாயு அப்படி நம்பிக்கை ஏற்படும்படி ராமனிடம் சொன்னான்.

ஜடாயு காலமானதும் ராமன் துடித்துப் போனான். ஜடாயுவைச் சிதையிலே வைத்து ஈமச் சடங்குகள் பண்ணுகிறான். உயர்ந்த யக்ஞ யாகாதிகள் பண்ணுகிறவர்களுக்கு என்ன உயர்கதி கிடைக்குமோ, ஆத்ம சமர்ப்பணம் பண்ணினால் என்ன கதி கிடைக்குமோ... அப்படி, திரும்பி வருதல் இல்லாத சாச்வதமான நித்யானந்தத்தையே ஜடாயு அடைய வேண்டும் என்று அனுக்கிரஹம் பண்ணி விட்டான். அதன்படி ஜடாயுவுக்கு உயர்ந்த கதி கிடைத்தது. மஹாலக்ஷ்மி தொட்டு அனுக்கிரஹம் பண்ணினான் அல்லவா... பகவானுடைய அனுக்கிரஹம் அவனுக்குக் கிடைத்து விட்டது.

ஜடாயு, 'எனக்கு மோக்ஷம் வேண்டும்' என்று கேட்டானா? இல்லையே! ஆனால் கேட்காமலேயே கொடுத்து விட்டான் பரமாத்மா. ஆதலால் அல்ப விஷயங்களைப் போய் நாம் அவனிடம் கேட்டது அறியாமையேயாகும்.

அவனைத் தவிர்த்த மற்ற விஷயங்களெல்லாம் அல்பம்தான்.

'அது வேண்டும், இது வேண்டும்' என்று லோகத்தில் பல பேரிடம் கேட்டுப் பெறுகிறோம். பல விஷயங்களை அனுபவிக்கிறோம். அப்படிப் பெற்ற வஸ்துக்களினாலேயே நமக்குப் பலவித கஷ்டங்கள் ஏற்படுகின்றன.

சாப்பிடுகிற வஸ்துவினால் கஷ்டம். தன்னைச் சேர்ந்த வஸ்துக்களினாலே கஷ்டம் ஏற்படுகிறது. உலகத்தில் இப்படிப் பார்த்தோமானால் எதை எடுத்துக் கொண்டாலும் கஷ்டம்தான். கஷ்டமில்லாத, தோஷமில்லாத, உயர்ந்தவன் பரமாத்மாதான். அவன் திருவடியில் நாம் ஈடுபட்டோமானால் எந்தக் கஷ்டமும் இல்லை என்று தெரிந்து கொள்ள வேண்டும். இதை உணர்த்தத்தான் ஜடாயுவுக்கு உயர்ந்த கதியைக் கொடுத்தான் அவன். அதனால் தர்மார்த்த காம மோக்ஷாதிகளையும் விட்டு அவன் திருவடியையே பற்றுங்கள் என்று சொல்லியிருக்கிறது.

அவன் திருவடியையன்றி பிற விஷயங்களை நாடுவதால் விளையும் முதல் தோஷம்

இந்த அல்பத்வம். அடுத்ததாக வருவது அஸ்திரத்வம். எந்த விஷயத்தை நாம் பெற்றாலும் அது அஸ்திரம்தான் - அதாவது ஸ்திரமில்லாதது.

ஒருவர் பெரிய யக்ஞத்தைப் பண்ணுகிறார். நூறு அச்வமேத யக்ஞம் பண்ணுகிறார். இந்திர பதவி கிடைத்து விடுகிறது பத்து அச்வமேத யக்ஞம் பண்ணினால் உயர்ந்த சுவர்க்க லோகத்து யோகம் ஏற்படுகிறது. அந்தப் பலன் இருக்கிற வரைக்கும் அங்கே இருக்கலாம். அப்புறம் மறுபடியும் அவன் இங்குதான் வர வேண்டும். புனரேதி ஜன்மா!

யக்ஞம் பண்ணினாலும் ஜன்மம் மறுபடியும் கிடைக்கிறது! அந்த கிருஷ்ணனை சேவிக்கக் கூடியவர்கள் - அவன் திருவடியில் ஆத்ம சமர்ப்பணம் பண்ணுகிறவர்கள் மட்டுமே திரும்பி வந்து பிறப்பதில்லை. ஆகையினாலே, மீதி எதை எடுத்துக் கொண்டாலும் அஸ்திரம்தான்.

அதனால்தான் பிரும்ம சூத்ர பாஷ்யத்திலே அந்த பிரும்மம் தவிர மற்றதெல்லாம் அல்ப அஸ்திர பலங்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பரபிரும்மம் மட்டுமே சாச்வதமான பலம்.

ஒருத்தன் காட்டு வழியே அமாவாசை இருட்டிலே போய்க் கொண்டிருக்கிறான். நல்ல இருட்டு...! புலி ஒன்று பின்னாலே துரத்துகிறது! இவன் ரொம்ப வேகமாக ஓடினான். கால் தடுக்கி ஒரு பாழுங் கிணற்றிலே விழுந்தான். அங்கே பெரிய கல் ஒன்று. அது மண்டையிலே பட்டு, சரியான அடி! ரத்தமாகக் கொட்டுகிறது. மேலே புலி சுற்றுகிறது. அர்த்த ராத்திரி; நடுக்காடு! அப்போது அவனுக்கு என்ன சந்தோஷமாம்...? புலியிடமிருந்து தப்பித்தோமே என்று சந்தோஷமாம்! ரத்தம் வழிகிறதே என்று, மேல் துணியைக் கிழித்து கட்டுப் போட்டுக் கொண்டே, 'அப்பாடா' பிழைத்தோம்!" என்று சந்தோஷப்படுகிறான். ஆனால் அந்த சந்தோஷம் நிலைக்கவில்லை, - அஸ்திரம்! ஏன்...?

எதிரே என்னவோ சப்திக்கிறது- இலை அசைகிறது. என்னவென்று பார்த்தால், பிரும்மாண்டமான மலைப்பாம்பு - வாயைப் பிளந்து கொண்டு கிட்டே வருகிறது!

காட்டிலே பார்த்தால், மலைப்பாம்பு வாயைப் பிளந்து கொண்டு படுத்துக் கொண்டிருக்கும்... அஜகர விருத்தி என்று பெயர்! அதுவாகவே பிரயத்தனப்படாது.

## அருள்வாக்கு



''ஸௌந்தர்யலஹரீ சொல்கிறோம். அபிராமி அந்தாதி சொல்கிறோம்'' என்று பல பெண்கள் என்னிடம் வந்து ஆசீர்வாதம் கேட்கிறார்கள். நல்ல காரியம்தான். ஆசீர்வாதம் பண்ணுகிறேன். ஆனால் இதையெல்லாம்விட அதிகமாக அம்பாளுடைய பிரீதியை சம்பாதித்துக் கொள்ள வேண்டுமானால் இவர்கள் வரதக்ஷிணை,

ஆனால் அதன் வாயிலே ஏதாவது வந்து விழுந்தால் விழுங்கி விடும்! அந்த மாதிரி மகான்கள் எல்லாம் அஜகர விருத்தியோடு இருப்பார்களாம்! தங்கள் வீட்டை விட்டுப் போய் யாசிக்க மாட்டார்கள். ஆனால், யாராவது வீட்டிலே கொண்டு வந்து கொடுத்தால் அதை வாங்கிக் கொள்வார்கள். ஒருத்தரிடத்தில் கை நீட்டிக் கேட்க மாட்டார்கள். இதற்கு அஜகர விருத்தி என்று பெயர். உஞ்ச விருத்தி என்றால் வெளியில் பிக்ஷாடனம் போவது; அஜகர விருத்தி என்றால் வெளியிலே எங்கேயும் போய் யாரிடமும் கேட்காமல் இருத்தல்.

இந்தக் கிணற்றுக்குள்ளே மலைப்பாம்பு - இவனுக்கு முன் எப்போது விழுந்ததோ தெரியவில்லை... ஆகாரம் இல்லாமல் பட்டினியால் வாடிப் போயிருக்கிறது. இவன் கிட்டே நெருங்குகிறது அது!

நடுங்கிப் போய் விட்டான் அவன்! சர்வ பிரயத்தனம் பண்ணி தன் பலம் மொத்தத்தையும் இழுத்து... இவன் அதிர்ஷ்டம் பாருங்கள் - பக்கத்தில் இருக்கிற மரத்தின் கிளை ஒன்று வளைந்து கிணற்றின் உள்ளே போகிறது. தன் பலத்தை முழுவதும் இழுத்துப் பிரயோகித்து ஓர் எம்பு எம்பினான்... அந்த மரக்கிளையைப் பிடித்துக் கொண்டான்.

மேலே புலி சுற்றுகிறது. கீழே அஜகரப் பாம்பு - மலைப்பாம்பு!

மேலேயும் போக முடியாது; கீழேயும் விழ முடியாது. எத்தனை நாழிதான் பிடித்துக் கொண்டிருப்பது? இவனுக்கானால் கையை வலிக்கிறது!

வைரத்தோடு, சீர் செனத்தி என்ற கண்டிஷன் இல்லாமல் கலியாணங்களுக்கு மனப்பூர்வமாக சம்மதித்தால்தான் முடியும். தங்கள் மாதிரியான பெண்கள் வயசு வந்தும் கலியாணமாகாமல் நிற்பது, அதனால் மனோ விகாரப்படுவது, மானபங்கப்படுவது, அப்புறம் மான உணர்ச்சியும் மரத்துப் போய் விடுவது என்றிப்படி ஆகியிருக்கிற நிலைமையை மாற்றுவதற்கு இவர்களுக்கு மனசு இரங்கினால் இவர்களிடம் அம்பாளுக்கும் மனசு தானாக இரங்கும்.

'நாங்கள் கேட்காமல் பெண் வீட்டுக்காரர்களாகவே இத்தனை கொடுக்கிறோம் என்று ஸ்வயேச்சையாக வந்ததால் வாங்கிக் கொண்டோம்' என்று சொல்வதுகூடத் தப்பு. ஏனென்றால் ஒருத்தர் பண்ணுவதிலிருந்து இன்னொருத்தர் என்று இது செயின் மாதிரி போய்க் கொண்டிருக்கிற வழக்கம். கட்டாயப்படுத்தாமலே ஒருத்தர் வரதக்ஷிணை கொடுத்தாலும் இதனால் அவர் தன் பிள்ளைக்குக் கலியாணம் பண்ணும்போது வரதக்ஷிணை எதிர்பார்க்கத்தான் செய்வார். அதனால் அவர்களாகவே கொடுத்தாலும்கூட, ''வேண்டாம்'' என்று சொல்லுகிற உயர்ந்த மனோபாவம் வர வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

இத்தனைக்கும் நடுவிலே, இருட்டிலே அவன் காதிலே 'கடுக்கு கடுக்கு...' என்று ஒரு சப்தம்!

'என்னது இது... கடுக்கு கடுக்கு என்று சப்திக்கிறதே என்று பார்த்தால், இவன் எந்தக் கிளையைப் பிடித்துக் கொண்டிருக்கிறானோ அதனுடைய அடிப் பாகம் இருக்கிறது பாருங்கள்... அதை இரண்டு பெருச்சாளிகள் துருவுகின்றன! மறுபக்கத்தில் இன்னொரு கிளை இருக்கிறது... அதைத் துருவாமல் இந்தக் கிளையையே கடிக்கின்றன இரண்டும்... ரம்பம் போட்டு இரண்டு பேர் அறுக்கிறது மாதிரி!... இன்னும் இரண்டு நிமிடங்கள் கழித்தால் கிளை முறிந்து விடும்!

எப்படியாவது தான் பிழைக்க வேண்டும் என்கிற எண்ணத்தில் என்ன பண்ணினான்... உடம்மை ஊஞ்சல் மாதிரி, இப்படியும் அப்படியும் ஆட்டினான் - கிணற்றின் கரையைப் பிடித்துக் கொள்ளலாம் என்று... அப்போது இவன் உடம்பு கிணற்றின் கரையிலே பட்டது. கரையிலே தேனீக்கள் கூடு கட்டியிருக்கின்றன. இவன் உடம்பு பட்டவுடனே ஆயிரமாயிரம் தேனீக்கள் வெளியிலே வந்து, பாதாதி கேசம் கரீர் கரீர் என்று அவனைக் கொட்டித் தீர்த்தன! அவனால் வலியைத் தாங்க முடியவில்லை... ஆ... ஆ... என்று அரற்றுகிறான். அப்போது அந்தத் தேன் கூட்டிலேயிருந்து ஒரு சொட்டுத்தேன் அவன் நுனி நாக்கிலே விழுந்ததாம்... 'அடாடாடா! என்ன போக்கியம்! எவ்வளவு இனிமை! எவ்வளவு மதுரம்' என்று அதைச் சுவைத்தானாம் அவன்!

இந்தக் கதை இருக்கிறதே... காட்டிலே எங்கோ போன யாரோ ஒருத்தனின் கதையில்லை... நம் கதைதான் இது!

சம்சாரமாகிற காட்டிலே நாம் வாஸம் பண்ணிக் கொண்டிருக்கிறோம். புலி துரத்துகிறதே... அது என்ன என்று கேட்டால், ஜன்மாந்திரத்திலே பண்ணிய பாவ - புண்ணியம் என்கிற கர்ம வினை. அது ஒருவனை வெறுமனே உட்கார விடாது. எழுப்பும்! 'ஓடு' என்று ஓட வைக்கும். 'அடடா கொஞ்ச நேரம் அங்கேயே இருந்திருந்தால் இப்படி ஆகியிருக்காதே என்று பல சமயம் நான் நினைப்பதுண்டு! ஆனால் கர்ம வினையானது அப்படி உட்கார விடாதே! என்ன செய்வது!

இப்படி பாவ - புண்ய வினை துரத்த நாம் ஓடி வந்து விழுகிற கிணறுதான் சம்சாரம்! கிரஹம் - வீடு என்கிற இடத்திலே, கணவன்-மனைவி என்கிற உறவிலே, பந்த பாசத்தோடு விழுதல்! அதிலே ஏகப்பட்ட அடி! அடிபட்டு ரத்தமாகக் கொட்டுகிறது!

அப்படியிருக்கையில் உள்ளுக்குள்ளே பாம்பு ஒன்று வாயைத் திறக்கிறதே... அது என்ன? அதுதான் வியாதி! நோய்! ஏகப்பட்ட நோய்கள். நூதனமான வியாதிகள். நம்மைப் பார்த்து வாயைப் பிளக்கின்றன... முதுமையும் வியாதியும் நம் கிட்டே நெருங்குகின்றன.

போதாததற்கு பெருச்சாளி, தேனீக்கள் வேறு... அவை எதைக் குறிக்கின்றன...? அடுத்த இதழில் சொல்கிறேன்.

(தொடரும்)

திருந்தேன்.

சென்ற வாரம் நல்ல தனியார் நிறுவனத்தில் பணியில் சேர்ந்திருக்கிறேன் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நம் நண்பர்கள் யாரையாவது இடையில் சந்தித்தீர்களா?

உங்கள் நலன் அறிய ஆவல். எப்படி பொழுது போகிறது? அப்பா, அம்மா எப்படி இருக்கிறார்கள்?

பதிலை ஆவலுடன் எதிர் நோக்குகிறேன்.

நட்புடன்,
அரவிந்த்.

ஒரு வருடம் ஆகியும் நினைவு கொண்டு எழுதிய அவன் நட்பில் சிலிர்த்துப் போனாள்.

"என்னம்மா... யார் லெட்டர் போட்டிருக்காங்க?"

"அரவிந்த்னு ஒருத்தர்."

"யாரது அரவிந்த்?" அப்பாவின் முகத்தில் கேள்விக்குறி.

"காலேஜ்ல என் கூட படிச்சவர்."

"இப்ப அவன் ஏன் லெட்டர் போடறான்? கடவுளே... என்னென்னமோ நடக்குது... அதுக்குத்தான் நான் அப்பவே படிக்க வைக்க முடியாதுன்னு சொன்னேன். கேட்டாளா உன் அம்மா? இப்ப கண்டவன் கடுதாசி போடறான்."

"ஏன்ப்பா கோபப் படறீங்க. அவர் நல்ல நண்பர்... எவ்வளவு கண்ணியமா லெட்டர் எழுதியிருக்கார்... இந்தாங்கப்பா படிச்சுப் பாருங்க" —அப்பா இப்படி எல்லாம் கோபப்படுவார் என அவள் கனவிலும் நினைத்ததில்லை.

"அந்தக் கண்றாவி எல்லாம் நான் வேற படிக்கணுமாக்கும்... உன்னைப் பிடிச்சு ஒருத்தன் கையில கொடுத்தாத்தான் நிம்மதி. அதுக்குள்ள அவன் கூட ஓடிப் போயிடாதம்மா... உன்னைக் கும்பிடறேன்."

அப்பா உண்மையிலேயே கையெடுத்துக் கும்பிட்டார்... அவர் செய்கையில் அவள் கூசிப் போனாள். அதற்கு மேல் அவளால் நிற்க முடியவில்லை. ரூமில் போய் படுத்து விட்டாள்.

நினைக்க நினைக்க அவளுக்கு அழுகையாய் வந்தது. ச்சே... என்ன அப்பா! இருபது

# குகன்

வருஷம் மகளுடன் பழகியும் புரிந்து கொள்ளவே இல்லை...

ச்சே... அரவிந்த் எவ்வளவு ஜென்டில் மேன். அவன் வார்த்தையில், நட்பில் இருந்த கண்ணியத்தை அப்பாவுக்கு எப்படி புரிய வைப்பது? ஒரு நாள் கூட என் டிரஸ்ஸை பாராட்டியதில்லை. பெயரை சுருக்கிக் கூப்பிட்டதில்லை. அழகை வர்ணித்ததில்லை. நட்பின் எல்லையை நன்கு தெரிந்தவன்.

பாவம் வசதியில்லாத ஏழைமையான பையன். வேலை கிடைத்ததும் அவன் பெற்றோர்கள் எவ்வளவு சந்தோஷபடுவார்கள்... நான் சந்தோஷப் படமுடியாமல் அப்பா இப்படிப் பேசிவிட்டாரே.

• • •

திருச்சி,
5.2.1990

திருமதி புவனாவுக்கு,



# அரவிந்த்னு ஒரு நண்பன்



புவனா தபாலை வாங்கி ஆவலுடன் பிரித்தாள்.

திருச்சி.
20.5.1987

அன்புள்ள சிநேகிதிக்கு,

நலம். எதிர்பார்ப்பதும் அதுவே. நம் கல்லூரி வாழ்க்கை முடிந்து கிட்டத் தட்ட ஒரு வருடம் ஓடி விட் டது. நல்ல ஒரு வேலையை தேடிக் கொண்ட பிறகு தான் நண்பர்களைத் தொடர்பு கொள்ள வேண்டும் என வை ராக்கியம் வைத்

நலம். எதிர்பார்ப்பதும் அதுவே. இரண்டு ஆண்டு காலம் பயிற்சிக்காக அமெரிக்கா போயிருந்தேன். சென்ற வாரம்தான் திரும்பி னேன். வீட்டில் நீங்கள் அனுப்பி இருந்த பத்திரிகையை கொடுத்தார்கள்.

தங்கள் திருமணம் முடிந்து கிட்டத்தட்ட இரண்டு ஆண்டுகள் கழித்து திருமண வாழ்த் துத் தெரிவிப்பதற்கு மன்னிக்கவும். உங்கள் நல்ல மனத்திற்கு நல்ல கணவர்தான் அமைந் திருப்பார். திரு. ஆனந்த் நிச்சயம் அன்பான வராகத்தான் இருப்பார்.

உங்கள் அன்புக் கணவருக்கு என் வாழ்த் துக்களைத் தெரியப்படுத்துங்கள். இனிமை யான இல்லறம் சிறக்க என் வாழ்த்துக்கள்.

வாழ்த்துக்களுடன்
அரவிந்த்.

அவனுடைய உளப்பூர்வமான வாழ்த்துக் களில் மகிழ்ந்து போனான். திருமணத்திற்கு எத்தனையோ பேர் வந்த போதிலும் அர விந்த் வராதது அவனுக்கு ஏமாற்றமாகவும் ஏக்கமாகவும் இருந்தது.

அவனுக்குத் திருமணம் ஆகிவிட்டதா... இல்லையா... அது பற்றிக் கடிதத்தில் எழுதி இருந்தால் என்ன? இப்போதுதானே வெளி நாட்டிலிருந்து வந்திருக்கான்... இனிமேல் தான் கல்யாணம் நடக்கும். நிச்சயம் பத் திரிக்கை அனுப்புவான்.. அவசியம் ஆனந் துடன் போக வேண்டும்.

"என்னடா புவனா குட்டி... அப்பா லெட்டர் போட்டிருக்காங்களா... முகத்துல மகிழ்ச்சி தாண்டவமாடுவது..."

"அப்பா லெட்டர் போட்டாத்தான் மகிழ்ச் சியா... பிரண்ட் கிட்டேந்து வந்திருக்கு."

"யாரு கலாகிட்டேந்தா.. பிரியாகிட்டேந்தா?"

"இந்தாங்க லெட்டர்.. அரவிந்த் கிட் டேந்து வந்திருக்குது."

லெட்டரை படிக்கப் படிக்க அவன் முகம் மாறத் தொடங்கியது.

"இதெல்லாம் எனக்குப் பிடிக்கலை!" லெட்டரை மடித்து நீட்டினான்.

அந்த ஒற்றை வார்த்தையில், உச்சரிப்பில் இருந்த தொனியில், முகபாவத்தில் அதிர்ந்து போனாள்.

"என்னங்க இப்படிப் பேசறீங்க?"

"இங்க பாரு புவனா... யாரோ ஒருத்தன் லெட்டர் போடறதை என்னால தாங்கிக்க முடியாது. அவன் என்ன நமக்கு உறவு முறையா?"

அவன் வார்த்தைகளை அவளால் தாங்க முடியவில்லை. முதல் முறையாக அவன் மேல் எரிச்சல் வந்தது. உள்ளுக்குள் அவனைப் பற்றிக் கட்டியிருந்த கோட்டை சரிந்தது. ச்சே இவனும் சராசரி ஆண்மகன்தானா... சி.ஏ. படித்ததில் கணக்கை மட்டும்தான் கற்றுக் கொண்டிருக்கிறான்.

"என்னை நீங்க நம்பலை... நட்பை புரிஞ் சுக்கலை. நீங்க ரெண்டு வருஷத்துல என் னைப் புரிஞ்சுக்கிட்டது அவ்வளவுதானா?"

"என்னை நீ கிராஸ் கேள்வி கேட்டு மடக் காதே. ஒரு அந்நியன் லெட்டர் போடறதுங் கறதை என்னால ஏத்துக்கவே முடியாது. நமக்குள்ள வீண் பிரச்னையை உருவாக்கும். அவ்ளோதான் சொல்லுவேன்."

● ● ●

திருச்சி.
*5.6.1998*

திருமதி புவனாவுக்கு,

தங்கள் கணவர் விபத்தில் இறந்து போனதை செய்தித்தாளில் படித்து அதிர்ந்து போனேன். என்னால் நம்பவே முடியவில்லை.

எனக்கே வருத்தமாக இருக்கும் போது உங்களை வருத்தப்படாதீர்கள் என எழுத முடியவில்லை.

தைரியமாக இருங்கள். உங்கள் ஒன்பது வயது மகனை ஆளாக்க வேண்டிய கடமை இருக்கிறதல்லவா? லட்சியத்தில் உறுதியாக இருங்கள். அன்புக் கணவரின் ஆசீர்வாதம் என்றும் உங்களை காக்கும்.

என்ன உதவி தேவைப் பட்டாலும் தயங் காமல் எழுதுங்கள்.

நீங்கள்தான் ஏனோ கடிதம் எழுதுவதே இல்லை.

மிக்க வருத்தமுடன்
அரவிந்த்.

புவனாவின் விழியில் கண்ணீர் தளும் பியது.

"அம்மா, ஏம்மா அழறீங்க. யாரும்மா லெட்டர் போட்டிருக்காங்க?"

மகன் வருண் கழுத்தைக் கட்டிக் கொண் டான்.

"அரவிந்த்னு ஒருத்தர் லெட்டர் போட் டிருக்கார்டா கண்ணா..."

சடக்கென கழுத்திலிருந்து கைகளை எடுத்துக் கொண்டான்.

"அரவிந்தனா! யாரும்மா அந்த அங்கிள்? நமக்கென்ன சொந்தமா? உனக்கு ஏம்மா அவர் லெட்டர் போட்டிருக்கார்?" என்றான் ஒருவித முகச் சுளிப்போடு.

# சாதனையாளருக்கு வந்த சோதனை!



ஜஸ்பால் ராணா. வயது இருபத்தி இரண்டு. இந்தியாவின் நெம்பர் ஒன் துப்பாக்கி சுடும் வீரர். அகில உலக அளவில் இல்லாவிட்டாலும் கூட, ஆசிய நாடுகளுக்கிடையில் நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளில் வெற்றிவாகை சூடி, இந்தியாவின் மானத்தைக் காப்பாற்றுகிறவர். அவருக்கு இப்போது பிரச்னை. இந்தியாவை விட்டே வெளியேறி, வேறு எந்த நாட்டிலாவது குடியேறி விடலாமா என்று அவரை யோசிக்க வைக்கிற அளவுக்குப் பிரச்னை விஸ்வரூபம் எடுத்து இருக்கிறது.

இவரது திறமை தேசிய அளவில் அடையாளம் தெரிந்தபோது, அவருக்கு ஊக்கமும், உற்சாகமும் தரவும் போதிய பயிற்சிகள் அளிக்கவும், அயல் நாட்டுப் போட்டிகள் பலவற்றிலும் பங்கேற்பதற்காகப் போய் வர ஆகும் செலவுகள் அனைத்தையும் ஜெ.சி.டி. நிறுவனம் ஏற்றுக் கொண்டது.

ராணா தங்குவதற்காக, டெல்லியின் பிரதான ஏரியா ஒன்றில் இருபதாயிரம் ரூபாய் மாத வாடகையில் வீடு, இரண்டு கார்கள், டெலிபோன் என்று அனைத்து வசதிகளையும் ஜெ.சி.டி. நிறுவனம் அளித்திருந்தது. ராணாவும், பல்வேறு போட்டிகளிலும் பங்கேற்று, இந்தியாவுக்குப் பல தங்கப் பதக்கங்களைப் பெற்றுக் கொடுத்தார். ஆனால், சில மாதங்களுக்கு முன், திடீரென்று, ஜெ.சி.டி. நிறுவனம், ஜஸ்பால் ராணாவுக்கு அளித்து வந்த எல்லா வசதிகளையும் வாபஸ் பெற்றுக் கொண்டு விட்டது. இதற்குச் சொல்லப்பட்ட காரணம்: ஜெ.சி.டி. நிறுவனம் சந்தித்துக் கொண்டிருக்கும் கடுமையான நிதி நெருக்கடி.

ஜஸ்பால் ராணாவின் தந்தையாரும் ஒரு துப்பாக்கி சுடும் வீரர்தான். அவர் இப்போது உத்திரப் பிரதேச சட்டசபையில் எம்.எல்.ஏ வாக இருந்தாலும் கூட, தன் மகனுக்கு, துப்பாக்கி சுடும் பயிற்சி, போட்டிகளில் பங்கேற்பு போன்றவற்றுக்குத் தேவைப்படும் வருடத்துக்குப் பத்து லட்சம் ரூபாயை அளிக்கும் அளவுக்கு வசதி கிடையாது.

அடுத்தபடியாய் தமக்கு உதவக்கூடிய ஒரு ஸ்பான்ஸரை, கடந்த சில மாதங்களாய்த் தேடி வருகிறார் ஜஸ்பால் ராணா. ஆனால் அவருக்கு உதவ யாரும் முன் வரவில்லை என்பது வருத்தமளிக்கும் உண்மை.

பிறந்த மண்ணில் தனது திறமையை ஊக்குவிக்க யாரும் முன்வரவில்லையே என்ற பெரும் ஆதங்கத்தில் இருக்கிறார் ஜஸ்பால் ராணா. தமக்கு உதவியளிக்க வேறு எந்த நாடாவது முன் வந்தால், இந்தியாவை விட்டு வெளியேறி, அயல்நாட்டில் குடியேறவும் தயார் என்று அறிவித்திருக்கிறார் இந்த துப்பாக்கி சாம்பியன்!

கிரிக்கெட்டுக்கும், டென்னிசுக்கும் கோடி கோடியாய்க் கொட்டிக் கொடுப்பவர்கள் காதில், ஜஸ்பால் ராணாவின் கோரிக்கை கேட்குமா?

— கௌதம்



# புதுமைப்பித்தன்

தேசம் முன்னேறுவது மக்கள் கையில்தான் என்பதை வலியுறுத்துகிறது இந்தப் படம்! ஆனாலும் பார்த்திபன் திடீர்த் தலைவராவதும் சுயேட்சையாக நின்று வெற்றி பெறுவதும், அமைச்சர், முதலமைச்சர் என்று வெகுவேகமாக முன்னேறுவதும் ஜீரணிக்க வெகு கஷ்டம்.

என்றாலும் வன்முறை, புரட்சி, கலாட்டா இவையே தீர்வு என்று காட்டாமல், அரசியல்வாதிகளே மனம் மாறுவதாகவும், ஊழல் முதலமைச்சரின் (ஆனந்தராஜ்-பொருத்தமான நடிப்பு) மகன், மகள்களே அவருக்கு எதிராவதும் நம்ப முடியாவிட்டாலும் ஆறுதலான கற்பனை.

முதல் சில காட்சிகளோடு பார்த்திபனின் குறும்புத்தனம் விடைபெறுகிறது. அதன் பிறகு அவர் சீரியஸாகப் பல இடங்களில் பேசும்போது கூட அதில் ஏதாவது 'பார்த்திபத்தனம்' இருக்குமோ என்ற சந்தேகம். நடிப்பு கச்சிதம். (உடம்பையும் அப்படி வெச்சிக்கக் கூடாதா பார்த்திபன்?).

தேவயானி பாத்திரம் எதற்குத் தேவையே இல்லாமல்? ப்ரியா ராமனிடம் பார்த்திபன் எதற்காக சொல்லிக் கொள்ளாமல் விடைபெற வேண்டும்? தன்னை எதிர்க்கும் பார்த்திபனை பைத்தியம் என்று கூறி மனநலக் காப்பகத்துக்கு முதலமைச்சர் அனுப்பும் விஷயத்தை ஃப்ளாஷ்பேக்காக வைக்காமல் முதலிலேயே காட்டியிருந்தால், எஃபெக்ட் கூடியிருக்குமே? என்று கேள்விகள் எழுவதைத் தடுக்க முடியவில்லை.

பாடல் காட்சியில் எவ்வளவு முறை ப்ரியாராமன் தமது சேலை மாராப்பை வேகமாக (ஏதோ காலணியைக் சுழற்றுவது போல) வீசி எறிகிறார் என்று கேள்வி கேட்டால் 'எண்'ணிப் பார்ப்பவர்கள் மூச்சடைத்துப் போவார்கள்!

மூன்று கதாநாயகிகளையும் மீறி படத்தில் ஒருவித டாகுமென்டரித்தனம் தெரிகிறது. மற்றபடி பொறுப்பான ஒரு முயற்சியில் இறங்கியதற்காக இயக்குனர் ஜீவா அவர்களே, பிடியுங்கள் ஷொட்டு.

— ஜி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)